# சித்த மருத்துவம்

பொதுவாக சித்தர்கள் முறைப்படியுள்ள ஓர் வைத்திய நூலான இது ஓர் நூதனமான நூலாகும். ஆகவே மற்ற மருத்துவ நூற்களோடு இதை ஒப்பிட முடியாது. ஏனெனில் இவ்வைத்திய நூலில் வாதம், ஞானம், யோகம், மாந்திரீகம், சோதிடம் முதலிய நூற்களும் சேர்ந்துள்ளன. வாசிப்போர்கள் இந்நூலை திறந்து பார்க்கும் போது மேற்கண்ட நூற்களெல்லாம் வைத்தியத்தோடு கலந்திருப்பதைக் காணலாம். ஆகையால் விசாலமான ஆதாரங்களைக் கொண்டது. இந்நூலின் உள்ள விஷயங்களை நோக்குமிடத்து இவைகளெல்லாம் மேனாட்டு ஆசியா, ஐரோப்பாவின் நாகரீகத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்னதாகவே ஏற்பட்டதென்று தெளிவாக விளங்கும்.

இதில் போகர், புலிப்பாணி, இராமதேவர் முதலியவர்களைத் தவிர பெரும்பாலும் சித்தர்களெல்லாம் தமிழர்களே ஆதலால் இச் சித்த வைத்தியம் தமிழ் நாட்டுக்கே உரியதென்பதை ஒருவரும் மறுக்க முடியாது. அதனால்தான் அவர்கள் இயற்றிய நூல்களெல்லாம் தமிழ் செய்யுளில் செய்யப்பட்டிருக்கிறது. மேலும் ஆயுர்வேதம் எப்படி ஆரியர்களின் தெய்வ அனுக்கிரகத்தை குறிக்கிறரோ அதே மாதிரியே சித்த வைத்தியம், சிவன், பார்வதி இவர்கள் கடாட்சத்தால் ஆக்கப்பட்டதென தெளிவாகிறது. பூர்வீக நாகரீக சரித்திரத்தினால் சித்த வைத்திய முறை அனேக சித்திகளை பெற்றதென்பதை ஒருவரும் மறுக்கவே முடியாது.

**சித்தர் முறை :**

சித்தர் முறை ஆயிர வருடங்களுக்கு முன்னதாகவே ஏற்பட்டது. எல்லா தந்திரத் தொழில்களிலும், வித்தை நூற்களிலும் சித்தர்கள் மேற்கொண்ட முயற்சிகளும் அறிவின் திறமும் அபாரமானது. அவர்கள் வைத்திய முறையை கையாண்ட காலமோ தங்கத்தைப் போன்ற மிக்க சிறந்த காலம். சித்த முறையை அனுசரித்த விஷயங்களைப் பற்றிய விசாலமான கேள்விகளும் எளிதில் பதில் கூறிவிட முடியாது. சித்தர் முறையோ ஆன்ம சக்தியடைந்த பிறகு விஷயங்களைத் தெளிவாக தெரிந்தபின் அவர்களால் எழுதப்பட்டது. சித்தர்களின் ஞான விளக்கத்தின் அறிவாலும், அனுபவத்தாலும் எழுதிய நூற்களின்





உண்மையே அடிப்படையாக உள்ள காரணத்தினால் ஒருவரும் அதை மறுத்துக் கூற முடியாது. மேலும் ஒருமித்த சிரத்தையோடு படித்த விஷயங்களை கிரகிக்க வேண்டுமென்று உண்மையாகவே முயற்சித்தாலொழிய அனேக விஷயங்கள் நம் புலனுக்கு எட்டாது. ஓர் இரகசியமான வித்தையாகவே காணப்படும். ஆகவே ஒருவரும் இம் முறையைப் பற்றி குறைகூற முடியாது. திராவிட நாகரீகம் மலிந்த இந்த தென் இந்திய நாடு, பூர்வீகத்தில் தமிழ் முதற்சங்கம் இருந்த தென்பாகம் (லெமூரியா கண்டம்) முழுமையும் கடற்கொண்டுவிட்டது. சித்த வைத்தியத்திலும் மேற்கண்ட நாகரீகத்தைப் பெற்ற விஷயங்களும் சில உள்ளன. தமிழ் பாஷை எப்படி வடமொழியைத் தழுவாமல் தனிப்பட்ட முறையோ, அது மாதிரியே சித்த முறையும், ஆயுர்வேதத்தைச் சேராத தனிப்பட்ட முறையாகும். இந்நூற்களெல்லாம் சித்தர்களால்தான் எழுதப்பட்டதென்பது அவர் செந்தமிழ்நடை செய்யுள்களினாலேயே இனிது விளங்கும். ஆகவே சாதாரண எழுத்தாளர்களால் இவ்விதமாக எழுதிவிட முடியாது. அன்றியும் மற்ற நூற்களில் கண்டறியாத எப்பொழுதுமே கேட்டிராத அனேக இரகசியமான விஷயங்கள் இந்நூற்களில் காணலாம். சில முக்கியமான விஷயங்களை சித்த நூற்களை முற்றும் செம்மையாகப் படித்தவர்கள்தான் அறியக்கூடும். உலகமே பொன்னாசையினால் வெறி கொண்டது என்ற விஷயம் நன்றாகவே தெரிந்ததே. ஆகையால் சித்தர்கள் தங்கள் வாத முறையில் அனேக விஷயங்களை வெகு தந்திரமாக கூறியுள்ளார்கள். ஆன்றோர் வாக்கின்படி வாதி மகன் வைத்தியன் என்பதினால் வைத்தியன் வாதியின் மகனாக இருக்க வேண்டுமென்பது ஏற்பட்டிருக்கிறது. தொழில் ஆரம்பிப்பதற்கு முன்னதாகவே வாதத்தில் தேர்ச்சியடைந்தவனாயிருக்க வேண்டும். இவ்வாதத் தொழில் பணம் சேர்ப்பதற்கு அல்ல. தனக்கு ஜீவனத்துக்கு எவ்வளவோ அவ்வளவு மட்டும்தான் மற்றும் தன் வைத்தியத் தொழிலுக்கு பிறர் உதவியின்றி எவ்வளவு வேண்டியதோ அது மட்டும்தான் என உணர வேண்டும். நோயாளியிடமிருந்து பணம் எதிர்பார்க்கக் கூடாது. எல்லோரும் சித்தியடைந்த வைத்தியர்களாய் இருக்க முடியாது. சில கிரகங்களின் அம்ச காலங்களில் பிறந்திருந்தால்தான் முடியும். அவன் ஜாதகப் பிரகாரம் வைத்திய நூலிலும் வாதத்திலும் தேர்ச்சியுள்ளவனாயிருக்க வேண்டும். சாதாரணமாக கற்கடக ராசியில் பிறந்தவன் தான், பிறவி வைத்தியன் என்று சொல்லப்படுவான். ஆகவே தேர்ச்சியினால் பெற்ற அறிவினால்





அவ்வளவு சித்தி பெற முடியாது. நூற்களைப் படிக்காமல் சொற்ப அறிவினால் செய்யும் வைத்தியம் மேற்சொன்னதைவிட அவ்வளவு எளிதல்ல.

சித்த வைத்தியர்களின் குணாதிசயங்கள் முதலியவைகளை விரிவாக முகப்பாயிரத்தில் எழுதப்பட்டிருக்கிறது. மேலும் சித்த முறை உலக நன்மைக்காக எழுதிய காரணத்தினால் இவ்வைத்தியத்தை வியாபாரமாகவும் அல்லது பணத்திற்காக கிரயம் செய்யும் பணம் சேர்க்கவும் கூடாது. அப்படி விதித்த விதிகளை மீறி நடந்தால் சித்தர்கள் சாபம் வந்து சேருமென கருதப்படும்.வைத்தியன் பேராசைப்படுவான் எனக்கருதியே அனேக கட்டளைகள் ஏற்படுத்திப்பட்டிருக்கிறது. சித்த முறையில் கண்ட மனக் கோட்பாடு ஞானம் இவைகளை வைத்தியனை நியாயம், உண்மை, ஒழுங்கு ஆகிய இவ்வழிகளில் புகட்டுவதற்காகவே நூற்களில் கண்டிருக்கிறார்கள். ஆகையால் இவைகள் சித்த வைத்தியத்திற்கு ஆதரவு கொடுக்கும் ஓர் கட்டத்தில் மூலக் கற்களாகக் கருதப்படும்.

**சித்த வைத்தியத்தின் தற்கால நிலைமை :**

இறந்த காலத்தின் நோக்கம் எவ்வளவுக்கு எவ்வளவு நீள்கிறதோ அவ்வளவிற்கும் எதிர்காலத்திய நோக்கம் விளக்கமாக புலப்படும். ஏனெனில் சென்ற காலங்களில் தான் நிகழ் காலத்தையும், எதிர்காலத்தின் போக்கையும் அறிவதற்கு திறவுகோலாகும். ஆகையால் வைத்தியத்தின் முன்னேற்றத்திற்கும் தற்காலத்திய வைத்திய பயிற்சிக்கும், ஆதிகாலத்திலிருந்து தொன்றுதொட்டு வந்த பூர்வ முறைதான் தகுந்த ஆதாரமாகும். பூர்வகாலத்து சிரோன்மணிகள் செய்த வேலைகளை யெல்லாம், தற்காலத்தில் புதிதாக கண்டுபிடித்தாகச் சொல்லப்பட்ட காரியங்கள் மறைத்து விட்டது என்பது மிக்க பரிதவிக்க வேண்டிய விஷயமாகும். ஏதோ சித்தர்களைப் போன்ற மகான்களுக்கு தற்காலத்தில் ஓர்வித பயபக்தி, விசுவாசம் காட்டினாலும், பொதுவாக தற்காலத்து வைத்தியம், அதற்கு வேண்டிய முக்கியமான அம்சங்களை பெறுவதற்கில்லை. இக்காலத்தில் பூர்வ வைத்திய சரித்திரங்களை சரிவர போதிப்பதில்லை. முன்னோர்கள் முறையைப் பற்றிய புத்தகங்களும் கிடையாது. ஆனால் பழைய காலத்து சித்த வைத்தியத்தை தற்காலத்து ஜனங்கள் ஆச்சரியமாகவும் பயன்படாத மறைந்த வஸ்துவாகவும் கருதுகிறார்கள். ஆகவே, தற்காலத்தில்





தோன்றியுள்ள இளைஞர் கூட்டங்கள், பண்டைய வைத்தியச் சரித்திரங்களின் உண்மையானக் கருத்திற்காக மெச்சி, கற்காலத்திய வைத்தியத்திற்கு சமமாகக் கொண்டுவர முயற்சிப்பதை நோக்க மிகவும் உற்சாகத்தையளிக்கிறது.

மேலும், ஆன்றோரின் சரித்திரத்தையும், அவர்களது பயிற்சியையும், அற்பமான பாராயணப் பாடமாகக் கருதக்கூடாது. நோய் பரிகார முறையிலும், காயகற்ப முறையிலும் அதிக தேர்ச்சியடைந்தவர்கள் செய்த உபயோகமுள்ள நூலெனக் கொள்ள வேண்டும். எவ்வளவு குறைவாகவும், இரகசியமாகவும் சொல்லியிருந்தாலும், அது மேம்பட்ட கொள்கையாகவே கருத வேண்டும். ஏனெனில் தற்காலத்திய கஷ்டமான விஷயங்களை பூர்வத்தில் கண்டறிந்த தேர்ச்சியைக் கொண்டு அறிந்து கொள்ளும் வகையில், நமக்கு எவ்வகையிலும் உதவியளிக்க கொஞ்சமேனும் தவறாது. எந்த காலத்தில் மேனாட்டு உலக சம்பிரதயாங்கள் கீழ்நாட்டு ஞானமார்க்கத்தில் ஒன்றுபடுமோ, அப்பொழுது தான் நமது நாட்டு வைத்தியத்திற்கும் மேனாட்டு வைத்திய முறைக்கும், உள்ள பேதங்கள் மறைந்து போகும். ஆனால் எப்பொழுது இது விஷயம் சம்பவிக்குமோ, என்பது தான் அடுத்த கேள்வி. நமக்குள்ள ஆன்ம சக்தியை விருத்தி செய்யாத வரையிலும் நாம் முழுவதையும் அடைந்து விட்டோமென நினைக்கக் கூடாது.

சித்தர்கள் தமிழில் செய்த வைத்திய நூற்களிலினாலே, தமிழ் வைத்திய முறையே, மிக்க விசாலமான ஆதரவு பெறும்படி உருவாக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய முறை, திராவிடர்களுடைய அறிவினாலேற்பட்ட விஷயங்களில் ஓர் பகுதியெனக் கொள்ளப்படும். இத்தமிழ் முறையே, ஆதிகாலம் தொட்டு இந்தியாவின் தட்சண பாகத்தில் ஒவ்வொரு மூலையிலும் இடங்களிலும், தற்காலம் பரவியிருக்கிற தென்பதை அதிகமாக சொல்ல வேண்டிய அவசியமில்லை. இந்த சித்த முறையானது, ஆயுர்வேதம், யுனானி முறை இவ்விந்தியாவுக்கு கொண்டு வருவதற்கு அனேக ஆயிர வருஷங்களுக்கு முன்னிருந்து பரவியிருந்திருக்கிறது. அனேக ஆயிர தமிழ் வைத்தியர்களும், தங்களுடைய மூதாதையர்களிடமிருந்து இந்த சித்த முறையைக் கற்று தேர்ச்சியடைந்திருக்கிறார்கள். ஆகவே, இம்முறையை அனேக தலைமுறைகளாக தகப்பனிடம் இருந்து கற்று பிள்ளைகள் கையாண்டு வந்தார்கள். இத்தமிழ் சித்தர் முறை பூர்வ

காலத்தில் ஆண்டு வந்த சேரன், சோழன், பாண்டியன் ஆகிய தமிழ் அரசர்கள் ஆதரவு பெற்று மிகவும் சிறப்புப் பெற்றிருந்தது. இப்பொழுதும், கல்விக் களஞ்சியங்களில் அச்சுப் பதிப்புக்கு வெளிவராத எண்ணிறந்த ஏட்டு பிரதிகள் இருந்து வருகிறது. இதுவுமல்லாமல், அனேக திறமை வாய்ந்த வைத்தியர்களும் தங்களுடைய மேன்மை பெற்ற அறிவுத் தேர்ச்சியையும், அனுபவத்தையும் வெளியில் காட்டிக்கொள்ளாமல் ரகசியமாய் வைத்திருந்த விஷயத்தையும் நோக்கில், சித்த வைத்தியம் சீரழிந்து போனதற்கு இவைகளேகாரணமாகும்.

மனிதர்கள் தங்கள் ஆரோக்கிய நிலையை காப்பாற்றிக் கொண்டு வாழ்நாட்களை அபிவிருந்தி செய்வதற்கு ஆதாரமான இந்நூற்கள், மற்ற வைத்திய முறை, கொள்கைகளைப் போலில்லாமல், இம்முறையின் கொள்கைகள் உண்மையான நெறியிலே தாபிக்கப்பட்டதால், இதை ஒருவராலும் மறுக்க முடியாது. அனேக ஆயிர வருஷ்ங்களைப் பற்றிய கொள்கையைத் தவிர மற்றெந்தவிதத்திலும் தற்காலத்திய மேனாட்டு வைத்தியர் குறைகூற முடியாது. ஏனெனில், அவர்கள் பரிசோதனைக்கு எள்ளளவும் சளைக்காது. ஆனால் மேற்சொன்ன பூர்வ கர்ம விஷயங்கள் மேனாட்டு நூற்களுக்கு எட்டவே எட்டாது. ஆயுர்வேதமும் மேனாட்டு வைத்தியமும் தென்னிந்தியாவாகிய தமிழ்நாட்டுக்கு கொண்டு வரப்பட்டாலும், ஊர்களிலும், கிராமங்களிலும் அனேக ஆயிரக்கணக்கான நோயாளிகள், இந்த சித்த முறையை கைக்கொண்ட நாட்டு வைத்தியர்களால் சிகிச்சை செய்யப்பட்டு வருகிறார்கள். இச்சென்னை மாநிலத்தில் மட்டுமல்ல, பர்மா, இலங்கை, பினாங், சிங்கப்பூர் ஆகிய கடற்கரை பிரதேசநாடுகளிலும் கீழ்க்கரை தீவுகளிலும், மடகாஸ்கர், பிலிப்பைன் தீவுகள் முதலான இடங்களிலும் வைத்தியமுறை மிக்க பிரபல்யமாக கொண்டாடப்பட்டு வருகிறது.

சித்த முறையின் கொள்கையைப் பற்றி பேசுகையில் இது விசாலமான கேள்விகளுக்கு இடங்கொடுக்கும். இலேசான கேள்விகள், பதில்கள் என்று கருதி திடீரென சொல்லிவிட முடியாது. சித்தர்களின் நோக்கத்தின்படி இச் சித்த முறை இவ்வுலகத்து விஷயங்களையும் சார்ந்ததாகும். ஆகவே 'அண்டமும், பிண்டம் ஒன்றே' என்னும் கருத்து இதனுள் அடங்கியுள்ளது. இவ்விஷயம் மேனாட்டாரின் பூர்விக ரகசிய கொள்கைக்கும், இந்திய சித்த முறைக்கும் சமத்துவமானது. மேலும்,





சித்த முறைப்படி அண்டபிண்ட கோட்பாடுகளினால் வைத்தியத்திற்கும், சோதிடத்திற்கு சம்பந்தம் ஏற்படுகிறது. ஆகையினால் ஒவ்வொரு வைத்தியனுக்கும் சோதிடத்தில் சொற்ப அறிவு இருக்க வேண்டியதென்பது அவசியமான விஷயம். இவ்வறிவு இல்லாவிட்டால் வைத்தியம் செய்வது அவ்வளவு உபயோகமான முறையில் இருக்காது.

**சித்த வைத்திய முறை :**

மனிதனின் நோய்க்காக வேண்டி சித்தர் முறையில் வைப்புசரக்கு நூல் உதவியைக் கொண்டு தயாரிக்கும் மருந்துகளும், முறைகளும் உள்ளன. அவையானவை :

1. இரசம் அல்லது சாறு - இலைச்சாறு, பழச்சாறு முதலியன.
2. பாகு - வெல்லப்பாகு அல்லது சீனிப்பாகு முதலியன.
3. சத்து - அப்பிரக சத்து.
4. எண்ணெய் - சாதிக்காயெண்ணெய் முதலியன.
5. தைலம் - சந்தனாதி தைலம்.
6. நெய் - கும்மட்டிக்காய் நெய்.
7. குழம்பு - கும்மட்டிக்காய் குழம்பு.
8. சூரணம் - சீந்தில் சூரணம்.
9. திராவகம் அல்லது வாலை நீரு-தீநீரு, திராவகம், ஓமத்திராவகம்.
10. நீறு அல்லது பற்பம் - வெள்ளி பற்பம்.
11. செந்தூரம் - ரச செந்தூரம்.
12. காரமருந்து அல்லது சுண்ணம் - காடி காரம், முத்துச்சுண்ணம்.
13. மாத்திரை - கோரோசனை மாத்திரை.
14. மெழுகு - ரசகெந்தி மெழுகு.
15. உப்பு - கெந்தக உப்பு.
16. பதங்கம் - பரங்கிப்பட்டை பதங்கம்.

**1. வாதம் - வைத்தியம் :-**

சித்த வைத்தியம், நான்கு விஷயங்களை உடையது. அதாவது, வாதம், வைத்தியம், யோகம், ஞானமென்று இதற்கு முன்னமே காட்டியுள்ளது. பூர்வீக இந்தியாவின் தென்னாட்டில் இந்த





நூற்பயிற்சியில் முதல் இரண்டு விஷயங்கள் மற்ற இரண்டிற்கும் ஆதாரமாக உள்ளது. தென் இந்தியா நூலாசிரியர்களெல்லாம் ஒருவர் மாதிரியே வாதத்தை வைத்தியத்துடன் ஒன்றுபடுத்திக் கூறியுள்ளார்கள். ஏனெனில், தாங்கள் கொண்ட கருத்தின்படி, கடைசியாக மோட்ச சாதனம் அடைய வேண்டும் என்பதே. மேற்சொன்ன வாதம், வைத்தியம் இரண்டிற்கும் ஏம வைத்தியமென்றும், யோகம், ஞானம் என்ற இரண்டிற்கும் பிரம்ம வைத்தியம் என்றும் பெயர். தன்னைக் காத்துக் கொள்ளவும், ஒருவனைக் காப்பாற்றவும், வாதம், அவசியமானதால் கடைசியாக அவன் கொண்ட கருத்தை பூர்த்தி செய்ய உதவியாயிருக்கும்படி இவ்விவாதம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் வைத்தியமோ, நோய்களை தகுந்தபடி நிவர்த்திக்கவும், தடுக்கவும், வேண்டிய காலம்மட்டும் தன் உடம்பை நிலைக்க செய்வதற்கும், வசதியாக இருக்கும்படி ஏற்படுத்தப்பட்டது. சித்தர்கள் இவ்விஷயத்தை தங்கள் முதல் வேலையாகக் கொண்டு, நோய் தங்களைத் தாக்காமலிருக்கவும், மரணத்திற்கு அஞ்சாமலிருக்கவும் ஏற்படுத்திக் கொண்டார்கள். அடுத்தப்படி அவர்கள் கிழத்தனம் அடையாமலிருக்க வேண்டி உலோக வகைகள் கலந்த வைப்புச் சரக்குகளாகிய பற்பம், செந்தூரம், சுண்ண மருந்துகளைச் சாப்பிட்டு காயத்தை பலப்படுத்தியும், ஆன்மாவை, தங்கள் ஆயுளை விருத்தி செய்துக் கொண்டு, மனித சிருஷ்டியையும், உலகப் போக்கையும் செம்மையாக தெரிந்துக் கொண்டு பிறகு தன்னைத்தான் அறிந்தவுடன் மோட்ச சாதனையில் சித்தி பெறுவதற்கு ஈடுபடுவார்கள். ஆகவே இவ்வகுப்பு சித்தியடைந்த பிறகுதான் யூகத்தினால் கண்டறிந்த கருத்துக்களை அவர்கள் வகுப்பின் பாஷையில் எழுதலாயிற்று, ஆகையால் இவ்வித சித்தர்களுடைய வாத வைத்தியமானது, மேனாட்டு கிரேக்கர்களுடைய நான்கு விதமான ஞானபோதனை சாதனைகளுக்கும், ஆறு விதமான இந்திய ஞான சபைகளுக்கும், தற்காலத்தில் ஆதாரமுள்ளதாக கருதப்படுகிறது.

**வாத மார்க்கம்**

வாதத்தை மாத்திரம் தனிப்பட்ட முறையில் பேசப்புகின் மேற்கண்ட நான்கு வகுப்பான சித்த நூற்களில், இவ்வாதமுறை, மற்ற மூன்று முறைகளான வைத்தியம், யோகம், ஞானம் இவைகளுக்கு மூலகாரணமாகவுள்ளதால் முதன்மையாக வைக்கப்பட்டிருக்கிறது. இதை தெய்வத்தன்மை பொருந்திய நூலென்றும், சிறப்புற்ற





தொழிலென்றும் கருதப்படுவதால், பயபக்தியுடன் பாராட்ட வேண்டும். இந்நூலைக் கொண்டு வஸ்துகளையும், அவைகளின் தன்மையைப் பிரிக்கவும், மறுபடியும் ஒன்று சேர்க்கவும், அதுவுமில்லாமல் இழிந்த உலோகங்களைத் தங்கமாக மாற்றவும், வைத்தியம், காய கற்பம், யோகம் முதலிய சித்திகளுக்கு வழியும் காண்பிக்கும்படியும் செய்யலாம். ஆகையால், வாதமானது, தாது, தாவர, ஜீவவர்க்கங்களின் உதவியைக் கொண்டு, இரும்பு, செம்பு, முதலியவைகளை அநேக வழியில் பொன்னாக மாற்றக் கூடிய விஷயங்களை விவரமாகச் சொல்லும் வைப்புச் சரக்கு முறையின் ஓர் பாகமாகக் கருதப்படும். சித்தர் நூலின்படி இவ்வாத முறை ஆன்ம சக்தியை மூலமாகக் கொண்டது. ஆகவே மனிதருக்கு இயல்பிலேயமைந்த ஞான அறிவுக்கு இதை பொன்னிழைக்கும் உறை கல்லாகக் கருதப்படும். ஒருவன் முதலில், சில கிரகங்களின் அமைப்புக்கு தக்கவாறு பிறந்து, பிறவியிலேயே வாதியாயிருக்க வேண்டும்.

**2. பஞ்சபூத தத்துவம் :**

சித்தர் நூல் முறைப்படி உலகத்திலுள்ள ஜடப் பொருள்களுக்கெல்லாம் பஞ்சபூதமே அதாவது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன ஆதாரமாகவுள்ளது. ஜடமிறந்தால் அல்லது அழிந்தால், மேற்கண்ட ஐம்பூதங்களும் வெவ்வேறாகப் பிரிந்துப்போகும். ஆகவே மனித உடம்பும் மேற்கண்ட ஐம்பூதங்களினால் ஆக்கப்பட்டவையாதலால், மனிதன் இறந்தவுடன் அவனின்று பிரிந்து விடும், மனித உடம்பு எப்படி ஐம்பூதங்களால் ஆக்கப்பட்டவையென்றால்

1. மண் - எலும்பு, சதை, நரம்பு, தோல், மயிர்.
2. தண்ணீர் - பித்தம், இரத்தம், விந்து, கசிவு, அல்லது கழிவு, வியர்வை.
3. நெருப்பு - பசி, தாகம், தூக்கம், அழகு, சோம்பல்.
4. காற்று - சுருக்கம், விரிவு, அசைவு.
5. ஆகாசம் - வயிறு, இருதயம், கழுத்து, தலை இவைகளிலுள்ள இடைவெளிகள்

ஆகவே, மேற்கண்டபடி உலக வாஸ்துக் களெல்லாம், தோன்றலும், ஜீவித்தலும், அசைவதும், வளர்வதும், கடைசியாக அழிவதும், பழையபடி பஞ்சபூதங்களாக மாறுகிறது என்பது இதனால்

விளங்குகிறது. ஆகையால், உலகத்தில் முத்தொழில் அதாவது படைத்தல், காத்தல், அழித்தல் இவைகளுக்கு ஐம்பூதமே காரணமாகவுள்ளது.

மேலும் இவ்வைம்பூதத் தொழில்களை கவனிக்க முதலாவதாக நாம் தெரிந்து கொள்ள வேண்டியது யாதெனில், இப்பூதங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து ஜீவ அணுக்களாகின்றது. இச்சீவாணுக்களிலிருந்து உடம்புக்குரிய வஸ்துக்கள் எல்லாம் ஏற்படுகிறது. இரண்டாவது, இச்சீவணுக்களே தங்களுக்குள்ள தொழிலியற்றும் சக்தியால் உடம்பிற்கும், மனதிற்கும் வேண்டிய அம்சங்களை கொடுக்க ஏதுவாகிறது. ஆகவே, உடம்பின் சிருஷ்டிக்காதாரமான தொழில்களே வாததென்றும், பாதுகாப்புக்கு வேண்டியதே பித்தமென்றும், அழிவுக்கு ஏதுவான தொழிலே கபமென்றும் கூறப்படும். மனதிற்கு பொருத்தமான உடம்பில், மேற்கண்ட சீவாணுக்களின் தொந்தத்தினால் ஏற்பட்ட முக்குணம் என்ற சத்துவம், ரஜோதம், தாமசம் ஆகிய இவைகளால் தொழில் நடத்தப்படும். ஆகவே மேற்கண்ட இவ்வித தொழில்களுக்கும் சம்பந்தமுண்டு. இவ்விதமாக ஆத்மா, மனது, உடம்பு ஆக இம்மூன்றும் சேர்ந்தது புருஷம் என்று சொல்லப்படுவது, மனதையும், உடம்பையும் தொழிலியற்றவும் பிரதிபலன் தூண்டவும் செய்யும். உடம்பிலெழும் சக்திக்கே ஆன்மா காரணமாக இருந்தாலும் ஆன்மா மாத்திரம் ஒரு பற்றுமின்றி ஒன்றுக்கும் அசையாமல் சுதேச்சையாய் நிற்கும்.

உடம்பையும் மனதையும் நோக்குங்கால் ஜீவ அணுக்கள் தொழிலின் மூலப் பகுதியே நரம்பிலிருந்து எழும்பி, உடம்பைப் பூரண நிலைக்கு கொண்டு வரும். ஆன்மாவினால் உருப்பட்ட இத்தேகமானது, ஒரு இயந்திரத்திற்கு எப்படி மண்ணெண்ணெய் அல்லது நிலக்கரி தொழிலியற்றுவதற்காக அவசியமோ, அதுபோல்நமது தேகம் உயிர்வாழ்வதற்கு பிரதானமாகும். ஆகவே, அளவிலும், குணத்திலும் ஒழுங்குபடுத்திக்கொள்ளும் உணவுதான் பௌதிகப் பிரிவினையும், மாறுபாட்டையும் அடைந்து, பிறகு அன்னக் குழம்பு அல்லது அன்னரசமாகி இரத்தத்தைச் சேரும். அதன் பிறகு, அதினின்று உடம்பில் சதை, கொழுப்பு. எலும்பு, கடைசியாக பசையாகவும், விந்தாகவும் மாறும். இவ்விதமான அடுக்கடுக்காய் அபிவிருத்தியடைந்த தொழில்கள்தான் இனி கீழ் சொல்லப்படும் முப்பிணியாக வாத, பித்த, சிலேட்டுமங்களுக்கு காரணமாகும்.





இடங்களாவன :-

1,2. பிருதிவி, அப்பு ஆக இரண்டும், உடம்பின் சதையில் பற்றிய உஷ்ணத்தை பரவச் செய்தவதற்கு காரணமாக நின்று உடம்பை வளர்க்கச் செய்யும்.

3. தேயு அல்லது நெருப்பு- உடம்பில் உஷ்ணம் எழும்புவதற்கு காரணமாகும். இவ்வுஷ்ணமே உணவை இரசமாக மாற்றி ஜீவ அணுக்களை ஏற்படுத்தும்.

4,5. வாயு ஆகாசம் ஆகிய இரண்டு மூளையிலும் நரம்பு பாகங்களிலும் தங்கி நிற்கும்.

**சித்த வைத்திய முறைப்படி திரிதோஷ கொள்கை :**

இக்கொள்கையானது, வியாதிகளின் காரணங்கள், நிவர்த்தியாகும் தன்மை, குறிகள் ஆகியவைகளைக் குறிக்கும். இதனால்,பொதுவாக சிகிச்சை முறைகளை தெரிந்து கொள்வதற்கு ஏதுவாகும். இம்முப்பிணிகளும் முறை தப்பினால் நோய்க்கு காரணமாகும். இது மனிதனுடைய உடம்பில் வாத, பித்த, சிலேட்டுமத் தொழில்களைக் குறிக்கும். இவ்வார்த்தைகளின் அர்த்தமும், செயற்கையும், இன்னதென்று சாதாரண மனிதர்களுக்கு புலப்படாது. அதற்கு மனிதனைக் குறித்து பூர்வீக நூலில் கண்ட விஷயங்களைப் பற்றிய அறிவும், கல்வியும், அவனின் ஆத்மா, உயிர், வசீகரம், தெய்வீகம் விஷயங்களால் ஈடுபட்டிருக்கிற தன்மையும், ஆகிய இவை முதலானதும் தெரிய வேண்டும். இம்முப்பிணியைத்தான் ஆயுர் வேதத்தில் திரிதோஷம் என்று கூறப்படும். இதை சித்த வைத்திய முறையில் தத்துவங்கள் என்று கூறப்படும். அதாவது தொழிலையும், தொழிலியற்றும் தன்மையையும் குறிக்கும். சாதாரணமாக தேகத் தத்துவங்கள் 96, இக்கருவி கரணாதிகள், அந்தக் கரணங்களையும் ஆத்ம போதத்தையும் அல்லது இரண்டையும் குறிக்கும்.

இம்மூன்று தத்துவங்களின் தொழில்கள் மாறுபடுவதே தோஷங்கள் இவைகளையே ஆயுர்வேதத்தில் திரிதோஷமெனப்படுவது.

வாத பித்த சிலேட்டுமந்தான் மனிதவுடம்புக்கு ஆதாரமாக உள்ளது. ஆகவே, இதை முக்கியமான அம்சங்களெனக் கொள்ள வேண்டும். நாம் உட்கொள்ளும் உணவு, நீர், காற்று இவைகள்





உட்கருவிகளினால் சீரணமாகி அன்னப்பசையாக மாறி உடம்பை போஷிக்கும். ஆகவே, கட்டடங்களின் தூணைப்போல் பாவிக்க வேண்டும். உடம்பைக் காத்தலால் சித்த வைத்தியத்தில் இவைகளை ஆதார தாதுக்களெனச் சொல்லப்படும். இத்தத்துவங்களின் கெடுதிதான் திரிதோஷம். ஏனெனில், இதனால் தேக சதைப் பாகங்கள் ஆரோக்கிய நிலையில் இருக்காது.

மனிதனுக்குள் சூச்சும சக்திகள் மூளையிலும், முகுதுத் தண்டின் கயிறுக்குள்ளும் அமைந்திருக்கும். இதுவே மனிதனுக்குள்ள பிராண சக்தியாகும். இப்பிராண சக்தியாகிய வாதத்தோடு பித்த சிலேட்டுமம் கூடினால் முப்பிணி எனப்படும். ஆகவே, இத்திரிதோஷ நிலையையே ஆரோக்கிய காலத்திலும், நோய்கொண்ட வேளையிலும் கவனிக்க வேண்டிய விஷயமாகும். நமது நாட்டு வைத்தியர்கள், ஒருவன் நோய்-வாய்ப்படும் காலத்தையும், அதற்கு பின் நோய்ப் பிரிவினையையும், தெரிந்து கொள்வதற்கு, இத்திரிதோஷத்தின் காரணம், குறிகள், குணங்கள், ஆகிய இவைகள் இன்றியமையாத விஷயங்களாகும். இம்முத்தோஷமும் சகஜமாக தன்னிலையில் இருந்தால்தான் உடம்பில் ஆரோக்கியத்தையும், பலத்தையும் நிலை நிறுத்தலாம். அப்படி யில்லாமல் இது அதிகமானாலும், குறைந்தாலும், தொந்தரவுகள் ஏற்பட்டு கடைசியாக நோய்க்கிடங்கொடுக்கும்.

**அ. நோய்கள்**

சித்தர்கள் முறைப்படி, மூன்றுவித அறிவு பேதங்களும், ஐம்புலக் கருவிகளையும், பன்னிரண்டு வித தேகக் கூறுபாடுகளைப் பெற்றுள்ள விந்து நாதத்தையும், சீரணித்த வஸ்துக்களையும் தாக்குதலினால், இவைகளின் சகஜமான தொழிலியற்றும் செயல்கள் மாறுபடும். இதைத்தான் வியாதி அல்லது நோய் எனக் கூறப்படுகிறது. காலம், அறிவு, புலன் இவைகள் தொழிலியற்றும் செய்கைகளில் குறையின்றி இருந்தால், அதையே ஆரோக்கியம் என்றும் கூறப்படும். ஆகவே, நோயென்பது உடம்பையடுத்த தொழிலின் பேதத்தினால் மாத்திரமல்ல, மனோ விகற்பத்தையும் சார்ந்ததாகும். இது மனோ ஆரோக்கியம் என்பதே தேக ஆரோக்கியம் ஆகும் என்றும் பழமொழியைக் குறிக்கும். ஆகையால் நோய் என்பது தேக வியாதி, மனோ வியாதி என இரண்டு விதமாகும். ஒன்றே மற்றொன்றுக்குக் காரணம். உண்மையாகவே மனோவியாதி தேக வியாதிக்கிடங்-





கொடுக்கும். அப்படியே, தேகவியாதி மனோவியாதிக் கிடங்கொடுக்கும். இவ்விரு விதமான நோய்களுக்கும் தேகத்தின் கூறுபாடே ஆதாரமாக உள்ளது.

**கர்ம வியாதிகளைப் பற்றிய விதிகள் :**

கர்மானுசாரம் என்பது பூர்வஜன்மத்தின் தீக்கரும காரணத்தினால் சூக்கும தேகத்திற்கு ஏற்படும் ஓர் கெடுதி, இத்தகைய எல்லா நோய்களுகம் பூர்வ சன்ம கரும காரணத்தினால் ஏற்பட்டது. கிரக சம்பந்தத்தினாலும் ஏற்பட்ட கெடுதிகள் தீரும் வரையிலும் வினைப் பயன்கள் உண்டாகும், பிராயசித்தம் ஏற்படும் வரைக்கும் இது இருக்கும்.

மேலும் பரம்பரை வழியாயும் வியாதிகள் ஏற்படும். இது சித்த முறைப்படி முன் ஜன்மம் அல்லது ஜன்மங்களின் வினைப்பயன்கள் காலச்சக்கரத்தில் அறியக்கூடாத காரணங்களினால் தாய் குழந்தைகளை பிற்காலத்தில் தாக்கும்.

**நோயின் காரணங்கள் :-**

நோயானது தாதுக்களின் தோஷங்களின் கோளாறுகளினால் ஏற்படும். அவை உள் அல்லது வெளிக் காரணங்களினால் உண்டாகும். உடம்பை அடுத்த நோய்கள் அல்லது சன்ம ரோகங்கள் உட்காரணத்தினாலென்றும், அடியில் கண்ட விஷயங்களின் கோளாறுகளினால் தேகத்திற்கு ஏற்பட்ட நோய்கள் என்றும் கூறப்படும்.

1. தாதுக்கள் - முத்தோஷம்
2. தாதுப் பிரிவு - 7 வகை தாதுக்கள்
3. குணம் - மனத்தை நடத்தும் விதிகள்
4. மலம் - கசிவுகள், கழிவுகள்

( Inter cellular ) ஜீவாணுக்களும், கண்ணறைகளின் நடையும், சகஜமாக இருந்தால் தான், தாதுக்களின் சம நிலைக்கு யாதொரு கோளாறுகளும் ஏற்படாது. இவ்விதமாகவே இருப்பதற்கு உணவுப்பகுதி கணக்குபடி இருக்க வேண்டும். அதைச் சுற்றிலுமுள்ள விஷயங்களும் அப்படியே சரசமாய் இருக்க வேண்டும். இவ்விதமாக நடக்கத் தவறினால் நோய்களுக்கிட முண்டாகும்.

ஜன்மரோகங்கள், பிறவியிலேற்பட்டதானாலும் அல்லது தேகத்தை அடுத்ததானாலும் சரி, இவைகளுக்கும், மேற்சொன்ன ஜீவாணுக்கள், கண்ணறை கடைகளுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. ஏனெனில், பிறவியிலேற்பட்ட நோய்களெல்லாம் நாத விந்துக்களின் கருவில் ஏற்பட்டதாகும். நாளடைவில் உடம்பு பருக்க பருக்க பிறந்த அனேக வருஷங்களுக்குப் பின் கருவிலேற்பட்ட கோளாறுகள் கிரகத்தின் தோஷ மூலமாய் சில அவயவங்களில் காணப்படும். ஆகவே, இத்தகைய நோய்களெல்லாம் முதிர்ந்த வயதில் தான் காணும்.

காரணத்தை கண்டு பிடிக்க முடியாத நோய்கள், கருவிலேற்பட்ட தோஷங்களினால் தந்தை தாயாரிடமிருந்து குழந்தைக்கு வந்து சேர்ந்ததெனக் கொள்ளலாம். அவ்விதமான நோய்கள் எப்போது ஆரம்பமாகுமென்பதை ஒருவரும் சொல்லிவிட முடியாது. கிரகங்களின் அம்சப்படி அனேக தலைமுறைகள் வழியாய் மெதுவாகத்தான் வரும். ஆகவே முன் சொன்னபடி உடம்பின் கண்ணறையின் செயலுக்கும், கர்ம வியாதிக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. வெளிக் காரண நோய்களோ, பல காரணங்களினால் உண்டாகும். அவையாவன 1.அபாயம், 2. பாஷாணம், 3. மனோவசியம், 4. காயம், ரணம், வெட்டு, நீரில் அமிழ்தல், வாயுக் குற்றம் முதலியன, 5. மந்திரம், 6. தேவதை அல்லது பேய் பிசாசுகளினாலேற்பட்ட வினைகள்.

**வாதம் அல்லது வாயு :-**

இது காற்று மாத்திரமல்ல, உடம்பின் சீவாணுக்களுக்கு அசைவு, சக்தி, உயர்ச்சி இவைகளைக் கொடுக்கக் கூடியது. வாத பேதத்தினால் வாத நோய்கள் உண்டாகும். மூச்சு விடுவதும், இரத்தம் உடம்பில் சுழலுவதும், உடம்பின் கழிவுகளும், மேலும் கேட்பதும், பார்ப்பதும். ருசிப்பதும் முதலானவைகளுக்கும் வாதத்தின் நரம்புத் தொழிலே காரணமாகும். தாமசகுணத்தினால் வாதம் கருப்பு நிறமெனப்படும். வாதமே மிகவும் பராக்கிரமாமுள்ள நரம்புச் சக்தியாகும். அணுக்களுக்கும் தாதுக்களுக்கும் வன்மையை கொடுக்கக்கூடியதாகும். தொழிலியற்றுவதில் இதன் முக்கியமான குணங்களாவது. வறட்சி, இலேசு, சுத்தம், குளிர்ச்சி, அசைவு, சுக்குமம் ஆகிய இவைகளாகும். இதன் தொழில்களாவன - அசைவுண்டாக்கல், உதாண வாயுவாக நின்று பஞ்சேந்திரியங்களின் உணர்ச்சிகளை அறிவிப்பது. நாம் கொள்ளும்





உணவை சரியான முறையில் வயிற்றில் கொண்டு போய் சேர்ப்பது, சீரணித்த அன்னக் குழம்பினின்று கழிவுப் பொருள்களை பிரித்தல், மூத்திரத்தையும், விந்து முதலானதையும் நிறுத்தி வைப்பது.

**வாதம் அதிகரித்தல்**

பின்னால் உடம்பு சதையின் சொர சொரப்பு, கருநிறம், இணைப்பு, கை, கால் நடுக்கம், உஷ்ண வஸ்துக்களில் பிரியம், தூக்கமின்மை, பலக்குறைவும், வாதம் குறைவுப்பட்டால் களைப்பு, பேச்சுக் குறைவு, அசதி, அறிவீனம் முதலானவையும் ஏற்படும். இது உடம்பின் கீழ் அதாவது இடுப்பு பாகத்தில் அமைந்துள்ளது. இதன் தொழிலியற்றும் சக்தி நரம்புப் பகுதியில் உள்ளது.

சாதாரணமாக நாம் மூச்சு வாங்கி மூச்சு விடுகிறோம். உள்ளுக் கிழுக்கும் மூச்சோ, நுரையீரலுக்குள் போய் தங்கி நிற்கும் போது அது உடம்பினுள் புகுந்தும், கலந்தும், பரவியும், இது உடம்பில் சமரசமான தொழிவியற்றுங்கால் இதை வாதமென்கிறோம். இதுதான் பௌதிக முறையாய் பிராண வாயுவோடு கலந்து உடம்பில் சமத்துவமாக சூடுபரவச் செய்கிறது. இதற்கு தமிழில் வாத தத்துவம் என்று சொல்லப்படும். நரம்புப் பகுதிக்கு கோளாறு ஏற்பட்டால் வாதம் அல்லது வாயு அதிகப்பட்டு அல்லது குறைந்தும் நோய்களுக்குக் காரணமாகிறது. வாயு என்பது காற்று அல்ல. ஏனெனில் அது நடுவாகவுள்ள மூலப்பகுதி நரம்புகளின் செயலாலும் உணர்ச்சி நரம்பின் செயலாலும் ஏற்படுகின்ற பேதங்களை தனக்குள் கொண்டதாகும். வாததேகி சாதாரணமாக பலவீனன். அவனுக்கு தாது மிகக்குறைச்சல், ஆகவே, அவன் நோயைத் தடுக்க முடியாது.

**பித்தம்**

இதை வெறும் பித்தமெனக் கொள்ளக்கூடாது ஏனெனில், இது உடம்பிற்கு உஷ்ணத்தை உண்டாக்கும் தன்மையிலும், நாம் உள்ளே கொள்ளும் உணவு செரிமானம் அடைவதற்கும், பிறகு இரத்தமாக மாறி நிறம் கொடுப்பதற்கும், மற்றும், செரிமான நீர், கணையத்திரவம், முதலியவைகளுக்கும், உடம்பின் சதை மூலத்திற்கும், உஷ்ணத்திற்கும் காரணமாக இருக்கிறது. பித்த தேகியானவன் சாதாரண பலமும், வயதும் உடையவனாகிறான். இது பஞ்சபூதங்களில் மூன்றாவது பகுதியான நெருப்பினிடமாக உள்ள உஷ்ணத்தை உடம்புகிரகித்துக்





கொள்ளும். ஏனெனில், எல்லா ஜீவப்பிராணிகளுக்கும் சிறிது உஷ்ணம் வேண்டியிருக்கிறது. நாம் உட்கொள்ளும் வஸ்துவை செரிக்க வைக்கவும், பிறகு போஷனைக்காக அவ்வஸ்துவினிடமிருந்து சத்தை கிரகிக்கச் செய்வதுந்தான் இதன் தொழிலாகும். பித்தம் அதிகப்பட்டால் ஈரல் நோய்களுக்கு காரணமாகும் பித்தமானது மேற்சொன்னபடி செரிமானவாவதற்கு மாத்திரமல்ல, உடம்பு உஷ்ணத்திற்கும், சூட்டளவிற்கும் காரணமாகும் ரஜோதம் என்னும் குணத்தினால் பித்தமானது உடம்பின் அழகிற்கும், சிவப்பு நிறத்திற்கும் காரணமாகும். பித்தத்தினால் தேகத்தில் அணுக்களுண்டாகும். ஆகவே, இது உடம்பில் எங்கும் பரவி, சுழலும் தொழிலைக் குறிக்கும்.

உடம்பில் பிண்டோற்பத்திக்கு உதவியாக நின்று, கருவியற்றும் தொழிலினால், தனிப்பட்ட முறையில் பிண்டத்தை உருப்படுத்துதற்கு காரணமாயுள்ளது. இந்த பித்தம்தான் அன்னரசத்தை மாற்றி, சீரணித்த உணவின் சத்தை அனேக உறுப்புகளில் ஏற்றி, உடம்பு வளர்ச்சிக்கு ஓர் மூல வஸ்துவைக் கொடுக்கிறது. இது இரத்தத்தெளிவு, இரத்தம், அன்னரசம், அன்னரசச்சத்து, சந்துச்சத்து இவைகளில் மறைந்து நிற்கும். அன்றியும் பரிசம், பார்வை, உஷ்ணம், நுட்பம், இலேசுத் தன்மை முதலியவைகளும் பித்தத்தின் கூறேயாகும். மேலும், உடம்புச் சூடு, சீரண சக்தி, பார்வை, தாகம், பசி, உணவு விருப்பம், நிறம், அறிவு, ஞாபக சக்தி, சுறுசுறுப்பு, உடம்பு மென்மை, மிருது முதலியவைகளை உண்டாக்கி, உடம்பைக் காப்பாற்றும்.

பித்த கோபம் அல்லது மாறுதலையடைந்த பித்த நிலைமையினால் ஏற்படும் குறிகளாவன உடம்பெரிச்சல், தோல் மஞ்சள் நிறமடைதல், வியர்வை அழுக்கு, பலஹீனம், மஞ்சள் மலம், மஞ்சள் மூத்திரம், தூக்கமின்மை, உடம்பில் உஷ்ணக்குறைவு, உணவு செரிமானத்தில் கோளாறு முதலியன.

**கபம் அதாவது சிலேத்துமம்**

இது கபம் மாத்திரமல்ல, உடம்பின் உஷ்ணத்தை சமரசப் படுத்துந் தொழிலும், உடம்புக்கு ஆதாரமாகவுள்ள சளிசவ்வு, எலும்பு மூட்டுகளை காக்கும் சளித் திரவம் முதலியவைகளை உண்டாக்குந் தொழிலும் ஈடுபட்டது. சாதாரணமாக வாத தேகியானவன் பலமுள்ளவனும், நீண்ட காலம் வாழக்கூடியவனுமாவான். இது பிருதிவி என்ற பூதங்களில் அமைந்துள்ளதால் இதை சிலேத்துமம்





என்றும் கூறுவதுண்டு. உடம்பிலுள்ள கண்ணறைகளுக்கும் (Inter Cellular) ஊட்டம் கொடுத்து உடம்பை வளரச் செய்யும். கபம் கோளாறடைந்தால் நுரையீரல் நோய் ஏற்படும். மேலும், உடம்பின் சதை மூலம் குணக்கூறுபாடானதால் நிறம் வெண்மையெனக் கருதப்படும். சளி சவ்வு இவைகளுக்கு கசிவுண்டாக்கி, ஈரம் தாங்கச் செய்யும் இது சத்துவ குணக்கூறுபாடானதால் நிறம் வெண்மையெனக் கருதப்படும். இது உடம்பின் அணுவாதி தத்துவங்களை காப்பாற்றும். உடம்பின் சதை பாகத்தை ஒன்று சேர்த்து கட்டுமஸ்தானாய் இருக்கச் செய்யும். வாயுவின் சக்தியே கபமாகவும், பித்தமாகவும் மாறுதலையடைந்து தனித்தனியாகப் பிரிகிற தென்பதையும் உணர வேண்டும்.

உண்மையான உஷ்ணமே பித்தம்; கபமோ பொய்யுஷ்ணம் அதாவது உடம்பின் உஷ்ணம் அதிகரித்தால், சீதனத்தினால் தடுத்து அனுத்திரள்களை அசையாமல் நிறுத்தி வைத்து தன்மையது அன்றியும், அது உடம்பிற்கு எதையும் சகித்துக் கொள்ளக் கூடிய சக்தியைத் தரும்.

மேலும், இக்கபம் அவயங்கள் சரிவர பக்குவமடைவதற்கும், உடம்பின் வலிவு, சுறுசுறுப்பு, குளிர்ச்சி, முதலானவை யுண்டாவதற்கும் இடங்கொடுக்கும். அன்றியும் இதன் தொழிலினால் உடம்பின் அமைப்பை ஒழுங்குபடுத்துவதுமல்லாமல், பருமன் இவ்வளவென்றும் கழிவு பொருளும் உடம்பில் கிரகிக்கக் கூடிய செரிமான வஸ்துக்கள் இவ்வளவு என்கிற முறையையும் நிர்ணயிக்கும். இது சாலம் அல்லது கண்ணறைகளின் இடைவெளிகளை நிரம்ப செய்து சீதள வழியாய் ஒன்றுபடுத்தி, உடம்பின் அவயங்களின் உஷ்ணத்தினால் ஏற்படும் தகிப்பைத் தடுக்கும் தொழிலியற்றும் கபமானது, வெண்ணிறமாகவும், குளிர்ச்சி, எண்ணெய்ப் பசையுள்ளதாயும், கை கால்களுக்கு சக்தியும், வலிவும், மிருதுத்தன்மையையும் கொடுக்கும்.

கோளாறடைந்த கபத்தின் குறிகளாவன - வெண்ணிற உடம்பு, சோம்பல், எலும்புப் பொருத்துகள் தளர்வுற்றதாக எண்ணுதல், அதிக தூக்கம் முதலியன. இது உணர்ச்சி நரம்புப் பகுதியில் தொழிலியற்றும்.

***சிகிச்சை விதிகள், கிரமங்கள் :***

தகுந்தபடி சிகிச்சை செய்வதற்கு சரிவர நோய்களை சோதிக்க வேண்டும். அதற்கு முப்பிணியை அனுசரித்துதான் செய்ய வேண்டும்.

ஆகையால், வைத்தியன் திருத்தமாக சோதனை செய்வதற்கு, அடியிற் கண்ட விஷயங்களை முக்கியமாய் கவனிக்க வேண்டும். அவையாவன - நோய் இன்னது என்றும், இன்ன அவயம் நேராக தாக்கப்பட்ட தென்றும், இன்ன அவயத்தை அனுசரித்ததென்றும், சீதோஷ்ண நிலை, தேக வலிமை, செரிமான சக்தி, நோயாளியின் மனோகுணம், வயது, பழக்க வழக்கம் முதலிய மற்ற விஷயங்களையும் கவனிக்க வேண்டும்.

சித்தர்கள் நோக்கத்தின்படி மனிதனின் உள்ளுக்கிருக்கும் விஷயங்களில் புகாது செய்யப்படும் சிகிச்சையால் உடம்பின் நோய் குணப்படாது. ஆகவே, இவ்விதமான அறிவு முக்கியமாய் வேண்டும். முப்பிணியின் விஷயங்களைக் கண்டும் தேர்ந்தும், அவைகளின் மாறுபாடுகளை தகுந்தபடி அறிந்தும், சிகிச்சைசெய்தாலொழிய வைத்தியன் சித்தியடைய முடியாது. அப்படி செய்யாத வைத்தியம் நூலுக்கு விரோதமானதென்றும், கெடுதியையே விளைவிக்குமென்று கருதப்படும். சிகிச்சைமூன்று விதங்களென்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கின்றது. அவையாவன - தெய்வ, மானிட, இராட்சசசிகிச்சைகள், சித்த முறையில் இராட்சசசிகிச்சையான கத்தி கொண்டறுக்கும் வகை சொல்லப்- பட்டிருப்பினும் அவைகள் அவ்வளவாக கையாளப்படவில்லை. ஏனெனில், மற்ற இரண்டு வகைகளைக் கொண்டே சிகிச்சை செய்துவிடலாம் என்ற கருத்தினால் தான்.

**நோய்களை சோதிக்கும் விதிகளும், விதமும் :-**

நோய்களின் கூறுபாடுகளை சரிவர தெரிவதற்காக சோதிக்கும் வழிகள் பலவிதமுண்டு. உடம்பின் தாதுக்கள் தனிப்பட்ட முறையிலாவது, மற்ற ஒன்று அல்லது இரண்டுடன் கலந்தாவது கோளாறடையுமானால், சித்த வைத்தியத்தில் கைநாடி பார்த்து அதன் மூலமாய்அறியலாம். இன்னவிதமாய் கோளாறடைந்திருக்கிற தென்பதை நிச்சயமாய்த் தெரிந்து கொள்வதற்கு வேறு வகையான சோதனைகளுமுண்டு, அவையாவன - முழு உடம்பின் நிலை, குரல், நாக்கு, கண், மலம், மூத்திரம், உடம்பைத் தொட்டுப்பார்த்தல், நோயாளின் வெளித்தோற்றம், முதலானவைகளாகும். இதுவுமின்றி, நெய்க்குறி ( மூத்திரத்தில் எண்ணெய்ச் சொட்டு விட்டுப் பார்த்தால் ) நெய்ச்சீலை, நீர்ச்சீலை, மணிக்கடை ( அதாவது கயிற்றினால் கையின் மணிக்கட்டின் சுற்றளவு அளந்த அளவை கொண்டு விரல் நீளங்களை எடுத்து அளந்து அதனாலேற்பட்ட வித்தியாசங்களைக் கொண்டு





நோயின்கூறுபாடுகளைக் கண்டு பிடித்தலாகும்.) மேலும், வைத்தியன் நோயாளியின் தினப்பழக்க வழக்கங்களையும், நோய் எவ்வகையில் திடீரென்று ஏற்பட்டதென்றும் தெரிவதுடன், நோய்வாய்ப்படு முன்னே சகசமாக ஏற்படும் குறிகள் அதாவது தூக்கமின்மை, செரிமானம், பசிக்குணம், பெண்போகம், வெயிலில், காற்றில் திரிதல் இவை முதலானவைகளையும் தீர விசாரித்தறிய வேண்டும். உடம்பிலுள்ள மூல காரணங்களை சரிவர தெரிந்து கொள்ளாவிடில், நோயின் கூறுபாடுளைச் சோதனை வழியாய் கண்டு பிடிப்பது அசாத்தியமாக முடியும். வாயுவின் சக்தியே கபமாகவும், பித்தமாகவும் மாறுதலடைந்து தனித்தனியாக பிரிகிறதென்பதையும் உணர வேண்டும். ஆகவே, முதலாவதாக நோயாளியின் உள் விஷயங்களையும், பிறகு வெளித்தோற்ற விஷயங்களையும் தெரிந்து கொள்வது மிக்க அவசியாமனது. கடைசியாக, நோயாளி யினிடமிருந்து சந்தேகப்படக் கூடிய விஷயங்களை அனேகமான கேள்விகள் மூலமாகவும் உண்மையைத் தெரிய வேண்டி கேட்கலாம். இது சாதாரணமாக எல்லா வைத்திய முறைகளிலும் உண்டு. இவ்விதமான சோதனை முறைகளுக்குக் கட்டுப்படாத நோய்கள் இருக்கவே இருக்காதெனக் கொள்ளலாம்.

வைத்தியன் நோயாளியின் முற்போக்கான விஷயங்களை தெரிவதென்றால், உள்ளும் புறமுமுள்ள தேவகவலிவும், எதனால் உடம்பிற்கு எதையும் தாங்கமுடியாத சத்து குறைந்ததென்றும், பல அவயவங்களின் சக்திகள் இவ்வளவு தான் என்றும், அதைச் சார்ந்த பல விஷயங்களையும் தீரக்கண்டறிய வேண்டும். சாதாரணமாக உடம்பில் இயற்கையாக அமைந்த எதிர்ப்புச் சக்தியானது, மனிதன் ஆரோக்கியமாயுள்ள பொழுதும், அல்லது நோய் கொண்ட காலத்திலும் ஏறக்குறைய உடம்பில் உள்ளதேயாகும். ஆனால் நோயின் பரீட்சையோ, வைத்தியனுக்கு நோயின் முழுகுணத்தையும் அறிவதற்கான வசதிகளைக் கொடுக்கும். ஆகவே, உடம்பிலுள்ள வாத பித்த சிலேத்தும கோளாறுகள் மூலமாக நோயின் தன்மை, அளவு, கடுமை முதலியவற்றை ஒருவாறு நிதானமாய் அறியலாம்.

**நாடி நடையின் இலக்கணம் :**

உடலிலுள்ள எல்லா உறுப்புகளிலும் சிறந்தது இருதயம். இதன் மூலமாகத்தான் தாதுக்கள் யாவும் போஷிக்கப்படுகின்றன. இதுவே





தேகம் நன்னிலையிலிருப்பதற்கும் சுகமில்லாமைக்கும் காரணம். இதன் தொழில் வேறுபாடுகளை நாடிகள் உணர்த்தும். சப்த தாதுக்களும், இருதயம், நாடி, நரம்பு, ரத்தக் குழாய் முதலியவை ஒன்றோடொன்று தொடர்புள்ளவை.

இருதயத்தின் இடது சடரம் (Left Ventricle) குவியும் போது இரத்தம் கண்டரையின் வழியாகச் சென்று சகல நாடிகளும் பரவும். அப்போது நாடிகள் விரியும், மறுபடியும் இடது சடரம் விரியும் போது நாடி நரம்பு இரத்தக் குழாய்களிலிருக்கும் குருதியானது குறைந்து நாடிகள் சுருங்கும். இவ்விதமாக இருதயம், குவியவும் விரியவுமாக இருப்பதால் அதனுடன் சார்ந்த நாடி, நரம்பு, ரத்தக் குழாய்களுக்கும் விரிந்து சுருங்கும் தன்மையுண்டு. இது நாடி நடை எனப்படும்.

நாடி நடையின் குணங்கள் இருதயத்தின் நடையை ஒத்திருக்க காரணம், இருதயத்தினுடைய நடையின் (துடிப்பு) பேதாபேதங்களை நாடிகள் மூலம் நமக்கு அறிவிக்கின்றது. இருதயத்தினுடைய நடை தேக ஆரோக்கியத்திற்கு ஒத்திருக்கும், தேகத்தில் நோய் கண்டால் இருதயத்தின் சுபாவமான நடை இழந்து போகும். தேகத்திலிருக்கும் நோயை இருதயம் தெரிந்து கொண்டு நாடிகள் மூலமாக நமக்கு அறிவிக்கின்றது.

**நாடி நடையை பரீட்சிக்கக் கூடிய இடங்கள் :**

மானிடர்க்கு ஏற்பட்ட 72,000 நாடி நரம்பு இரத்த குழாய்களிலும் நடைபெறும் நாடியை கணிப்பதற்குப் பத்து ஸ்தானங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. குறிப்பாக கைகளிலும் கன்னக் குழிகளிலும், மர்ம ஸ்தானத்திலும், கணுக்கால்களின் உட்புறத்திலும், கால் பெருவிரலின் மேல்பாகத்திலும் நாடி நடையை பரீட்சிக்கலாமெனவும், அவற்றில் முக்கியமாக கை நாடியே சிறந்ததென பிரமமுனி கூறியுள்ளார்.

திருமூலர் வாக்கின் பிரகாரம் குதிங்காலினுட்புறம், மர்மஸ்தானம் உந்தி, மார்பு, காது, மூக்கு, கண்டம் (கழுத்து) கரம், புருவம், உச்சி முதலிய பத்து இடங்களில் நாடியைப் பரீட்சிக்கலாமெனவும், கூறப்பட்டிருக்கின்றன. எல்லாச் சித்தர்களும், கை நாடிப் பரீட்சையையே பிணிகளை கணிப்பதற்குச் சிறந்ததெனக் கூறியுள்ளார்.





**நாடி பார்ப்பதற்கு கரத்தின் நாடியே சிறந்தது :**

கையில் ஆரை எலும்பின் மேலோடும் நாடி நரம்பு இரத்தக்குழாயானது மணிக்கட்டு பரியந்தம் சிறுத்து மேல் புறமாகவும், துலக்கமாகவும் இருப்பதால் மூன்று விரல்களால், வளி, அழல், ஐயமாகிய நாடி நடையை எளிதில் அறியலாம். மற்றயிடங்களில் இரத்தக் குழாய்கள் இதைப் போலல்லாது பருத்திருப்பதால் எளிதில் நாடி நடை அறிய முடியாது.

**வாத பித்த கப தோடங்களின் நிலை :**

அபானன் முதல் உந்தி வரை வாதநிலை, உந்தியின் மேல் மார்பு வரை பித்தநிலை, மார்பு முதல் உச்சிவரை ஐயநிலை என அறியவும். வாதம் மலத்திலும், பித்தம் சிறுநீரிலும், கபம் விந்துவிலும் அடங்கும்.

**வாத பித்த கப உடல்நிறம் :**

1. வாத நோயாளர்க்கு உடல் கறுப்பாயிருக்கும்.
2. பித்த நோயாளர்க்கு உடல் பசுமஞ்சளாகவும், சிவப்பாகவும் இருக்கும்.
3. கப நோயாளர்களுக்கு உடல் நிறம் கலப்புற்ற குற்றங்கள் அளவாகக் கலந்திருக்கும்.
4. ஜன்னி நோயாளர்களுக்கு உடல் பல நிறமாக இருக்கும்.
5. கப நோயாளர்களுக்கு உடல் வெண்மையாக இருக்கும்.

**மூவகை நாடிகளை அறியும் முறை :**

வைத்தியன் ரோகியின் வலது முழங்கையைத் தனது இடது கையால் முதலில் செவ்வையாகப் பிடித்துத் தனது வலது கையால் ரோகியின் வலது உள்ளங்கையை கோர்த்துப் பிடித்து நெட்டை வாங்கி அனல் பறக்கத் தேய்த்து, அப்பால் வைத்தியனின் இடது கைவிரல்களால் ரோகியின் பெருவில் பக்கமாக ஆரை எலும்பின் மேலோடு நாடி நரம்பு இரத்தக் குழாயின் மேல் மணிக்கட்டுக்கு ஒரு அங்குலம் தள்ளி மேலாக மூன்று விரல்களால் சமமாக மெல்லென அழுத்தியும், தளர்த்தியும், ஆராய்ந்த பின்பு விரல்களை மாறி, மாறி கூர்ந்து கவனித்து நாடியின் கதியை ஆராய்ந்து பார்த்து நோயின் தன்மையை அறிதல் வேண்டும்.

ரோகியின் இடது கைக்கு வைத்தியனின் வலது கையை உபயோகித்து நாடியை ஆராய்தல் உத்தமம். மூவிரல்களால் நாடி நடையை ஆராயும்போது ஆட்காட்டி விரலிலுணர்ந்தது வாதம் எனவும் நடுவிரலிலுணர்ந்தது பித்தமெனவும், மேதிர விரலிலுணர்ந்தது ஐயமெனவும் உணர்தல் வேண்டும்.

இவற்றுள், வாதம் அதிகமானால், அதற்குரிய நோய்களையும் பித்தம் அதிகமானால் அதற்குரிய பிணிகளையும் உண்டாக்கும். அன்றியும் பெருவிரலும், சிறு விரலும் உணர்த்தும் நாடியானது பூத நாடியாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றது. இதனையும் சேர்த்து நாடிகள் ஐந்து எனவும், அவை ''பஞ்சநாடி'' அல்லது ''பஞ்சபூத நாடி'' எனவும் வழங்குவர்.

நாடி நடையை ஆராயுங்கால், முக்குற்றங்களையும், பஞ்ச நாடிகளையும் குறிக்கும் விரல்களையும், நாடி என்பது ஒரே நாடி நரம்பு, இரத்தக் குழாயின்மேல் விரல்களால், அழுத்தியும், தளர்த்தியும் பார்க்கும் போது ஏற்படும் துடிப்பு ஆகும். ஆண், பெண் இவர்களுக்கு முறையே, வலது இடது கை நாடியைப் பார்க்கும் முறை.

எல்லோருக்கும், வலது, இடது கைகளில் நாடியை ஆராயலாமெனினும், புருடர்க்கு வலது கையிலும், பெண்களுக்கு இடது கரத்திலும் பேடியாக இருந்தால் அவனது குறியை அனுசரித்து வலது அல்லது இடது கை நாடிகளை ஆராய்ந்து சாத்தியகிரமமென்பர்.

**குறியடையாள நாடி :**

மூவகை நாடி நடையின் மாத்திரையளவைக் கணித்த சித்தர்கள் தங்கள் நூல்களில் நாடி நடையின் அளவை ஆங்காங்கு ஜீவஜந்துகளின் நடையின் கால அளவுக்கு உவமானமாக கூறுவதை குறியடையாள நாடி என்பர்.

வாதத்தின் நடையை, மயில், அன்னம், கோழி, ஓணான், குயில், கொக்கு முதலியவற்றின் நடைக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. அவைகள் கால்கள் சுபாவமாக உயர்த்தி மறுபடியும் கீழே வைக்கும் காலயளவை ஒரு மாத்திரைக்குரிய அளவாகக் கருத வேண்டும்.

பித்தத்தின் நடை, ஆமை, அட்டை ஆகியவற்றின் நடைக்கு உவமானமாகக் கூறப்பட்டுள்ளது. இவைகள் நகர்ந்து செல்லக்





கூடியவை. ஆதலால் ஒன்றுக்கொன்று பொருத்தமாகும். இதற்கு மாத்திரையளவு அரை எனக் கூறியுள்ளார்.

சிலேத்துமத்தைக் கூறிய இடங்களில், தவளை பாம்பு இவற்றை உவமானமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவைகள் முறையே குதித்தல், சீறல் என்னும் செய்கையுடையனவாதலால் பொருத்தமாகும். இதற்கு மாத்திரையளவு கூறின்கால் ஆகும்.

**நாடி ஆராய்ச்சியில் முக்கிய கவனிப்பு :**

முத்தோடங்களில் நாடி நடையை ஒழுங்காக கற்றுணர்தல் அவசியம். காலம், தேசம், வயது, வன்மை முதலியவற்றை ஒரு முறைக்கு இரு முறை வெவ்வேறு காலங்களில் நாடி நடையின் தன்மையைச் சிரத்தையுடன் பகுத்துணர்தல் வேண்டும். நாடி நடையைபழகுவோன் அறிவைச் சிதறவிடாமல், மனதை ஓர்மையுடன் திடப்படுத்திக் கூர்ந்து கவனிப்பதுமன்றி, தேசம், காலம், வயது, வன்மை இவற்றிற்குத் தக்கபடி முக்குற்றங்களின் வன்மை, மென்மைகளையும், தன்நடை, புறநடை, கிளைத்தல், கதித்தல், குதித்தல், துள்ளல், அழுந்தல், படுத்தல், கலத்தல் முன்னோக்கு, பின்னோக்கு, பக்கம்நோக்கு, சுழலில், முதலிய நாடி நடைகளின் விசேடக் குறிகளையும் அறியலாம்.

**காரணம் :**

*1.* நாடியை எண்வகைத் தேர்வுகளில் சேர்த்துக் கூறிய நூல்களிலிருப்பது போல் எண்வகைத் தேர்வுகளில் நாடியைச் சேர்க்காமல், சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், மலம், நீர், எச்சில் என்பதான எண்வகைத் தேர்வுகளாக அமைத்துக் கொண்டு, நாடியைத் தனிச்சிறப்பாகவும், முதன்மையாகவும் தனிப்பெரும் நாடி நூலாகச் சித்தர்கள் கூறியுள்ளார்கள்.

*2.* பிணிகளைக் கவனிப்பதற்கு எண்வகைத் தேர்வுகளும் நாடியுட்பட அவசியமே.

*3.* நாடி கணிப்பில் தேர்ச்சி பெற்ற மருத்துவன் பிணியாளன் அல்லது சுற்றத்தாரின் உதவியின்றி, பிணியாளனின் நாடியைக் கொண்டே பிணியை ஒருவாறு அறியலாம். ஞாபகமற்ற நிலையிலோ, ஊமையும், செவிடுமாயுள்ள பிணியாளின் நிலைமையை அறிவதற்கு நாடிகணிப்பு பெரிதும் பயன்படும்.





*4.* நாடி நடையின் பேதாபேதங்கள் நன்றாகத் தெரியாவிட்டால் தேகத்திலிருக்கும் பிணியின் கூறு செவ்வையாகத் தோன்றாதாம்.

**5. ''நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்,**
**வாய் நாடி வாய்ப்பச் செயல் ''**

உணவாதி செயல்களால் உண்டாகும் நோயினை அறியும் பொருட்டு, நோய் அறிதற்கான நாடல் வழி நாடி எனவும், உணவு செயல்களால் வளி, அழல், கபம் ஆகிய மூன்றினால் ஏற்படும் குற்றம் அதை தணிப்பதற்கு வழி முறைகள் நாடுவதே மருத்துவனின் கடமையாகும். ஆகவே நாடியைக் கொண்டே பிணிகளைக் கவனிக்கலாம் என்பதை இதன் மூலம் அறியலாம்.

*6.* நாடிப்பரீட்சையால் காணும் தேகப்பிணி அல்லது உடலில் தாக்கும் குறி குணங்களை சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், மலம், சிறுநீர், எச்சில், வியர்வை, சுக்கிலம், மெய், செவி, கண், நாக்கு, மூக்கு ஆகிய இவற்றின் ஆராய்ச்சியைக் கொண்டும் பிணியாளனின் சரித்திரத்தைக் கொண்டும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

ஆயினும் மருத்துவம் என்னும் சிகிச்சை அல்லது பரிகாரம் புரிய ஆரம்பிக்கும் போது நாடியின் குறிப்பைக் கொண்டு அதற்குக் தக்கவாறு மருத்துவம் புரிவதே மேலான முறை என்பதாகும். முக்குற்றங்களில் எக்குற்றம், பிரதானமாகப் பிணிக்கப்பட்டு, நோயாளி துன்புறுகிறானோ, அதற்கேற்ற மருத்துகளைக் கொடுத்து முதன்மையாக கேடடைந்த குற்றம் தணிக்கப்படுமானால், அதுவே நோய் குணமாகும் கிரமத்திற்கு ஏற்றவழி எனவும் பின்னிட்ட துணை வியாதிகளும் கிளைக்காது என்பதற்கும் உறுதி கூற இடமுண்டு.

**நாடி நடைமாத்திரையின் இலக்கணம் :**

ஒரு மாத்திரை என்பது ஒரு கை நொடி அல்லது கண் இமை சிமிட்டலின் (மூடித்திறக்குதல்) கால அளவைக் குறிக்குமெனச் சிலரது அபிப்ராயம். ஆனால் மருத்துவ நூல்களை ஆராயும் போது மாத்திரை என்றால் நாடியின் துடிப்பு ஒரு கோதுமையரிசிப் பிரமாணம் எழுந்து அடங்குவதற்குரிய கால அளவாகும்.

வளி அழல், கபம் மூன்றும், தத்தம், நிலையில் மிகுதல், மீறி நடத்தல், கதித்தில், தோடத்தில் தோடம் இவை போன்ற சொற்கள் யாவும் ஒன்றே.





வாதநாடி இருக்க வேண்டிய மாத்திரையளவிற்கு இரண்டு பங்கிருந்தல் வாதமிகுதி. வாதம் ககித்தல், அதுபோல் பித்தம் இருக்க வேண்டிய அரை மாத்திரையளவிற்கு இரண்டு பங்கு இருந்தால் அது பித்தம் மீறி நடத்தல், பித்தத்தில் பித்தம் என்னும் சொற்களால் வழங்கப்படும். கபநாடி நடை தன் மாத்திரையளவில் இரண்டு பங்கு இருக்குமாகில் கபமிகுதி, கபம் கதித்தல், கபம் மீறி நடத்தல், கபத்தில் கபம் என்னும் சொற்களால் வழங்கப்படும்.

**தொந்த நாடிகளில் மாத்திரை விகிதம்**

**1. வாத பித்த தொந்தம் :**

(வளி, அழல், கலப்பு) வாதநாடி தன்னளவில், இரண்டு மாத்திரையும், பித்தநாடி தன்னளவாகிய அரை மாத்திரைக்கு மேலும் அதற்கு இரட்டிப்பாகிய 1 மாத்திரைக் குள்ளடங்கியும் நடைபெறும்.

**2. வாத கப தொந்தம் :**

(வளி, கபகலப்பு) வாதநாடி தன்னளவில் இரண்டு மாத்திரையும் கப நாடி தன் அளவாகிய கால் மாத்திரைக்கு மேலும் அதற்கு இரட்டிப்பாகிய அரை மாத்திரைக்குள்ளடங்கியும் நடைபெறும்.

**3. பித்த வாத தொந்தம் :**

(அழல், வளி, கலப்பு) பித்த நாடி தன்னளவில் இரண்டு பங்கு அல்லது தன் இயற்கை மாத்திரையின் இரட்டிப்பாகிய ஒரு மாத்திரையையும் வாதநாடி தன்னளவில் ஒரு மாத்திரைக்கு மேலும் இரண்டு மாத்திரைக்குள்ளடங்கியும் நடைபெறும் என்பதாகும்.

**4. பித்த கப தொந்தம் :**

(அழல், ஐயக்கலப்பு) பித்தநாடி தன் அளவில் இரண்டு பங்கு அல்லது தன் இயற்கை மாத்திரையின் இரட்டிப்பாகிய ஒரு மாத்திரையும் கபநாடி தன்னளவாகிய கால் மாத்திரைக்கு மேலும், அதன் இரட்டிப்பாகிய அரை மாத்திரைக் குள்ளடங்கியும் நடைபெறும் என்பதாகும்.

**5. கப வாத தொந்தம் :**

(கப, வளிக் கலப்பு) கப நாடி தன் அளவில் இரண்டு பங்கு அல்லது அதன் இரட்டிப்பான அரை மாத்திரையும் மேலும் வாத நாடி

தன் அளவாகிய ஒரு மாத்திரைக்கு மேலும் இரட்டிப்பாகிய இரண்டு மாத்திரைக்குள்ளடக்கியும் நடைபெறும்.

**6. கபபித்த தொந்தம் : (கப, அழல் கலப்பு)**

கப நாடி தன்னளவில் இரண்டு பங்கு அல்லது அதன் இரட்டிப்பான மாத்திரையாகிய, அரை மாத்திரையும், பித்தம் தன்னளவாகிய அரைமாத்திரைக்கு மேலும், அதன் இரட்டிப்பாகிய ஒரு மாத்திரைக் குள்ளடங்கியும் நடக்குமென்பதாகும்.

**பிணியை நாடியாலறிந்து ஊடுமருந்தே சிறந்ததெனல் :**

வாத பித்த கப நாடிகளின் தன்மை, பிரிவு, மிகுதி, குறைவு, தொந்தம், சன்னிவாதம், மாறி மாறி வரும் காலநிலைகள் ஆகிய இவற்றாலேற்படும் பிணிகளை அறிந்து மருத்துவம் செய்தல் சிறந்த முறையாகும். நாடிகளைக் கொண்டு பிணிகளின் நேர்மையறிந்து பரிகாரம் புரிவது அவசியமென்பதையும் அறியலாம்.

**நாடி நடையளவைப் பற்றிய உபாயம் :**

வாத, பித்த, கப நாடிகளின் தன்மைகள், குறிப்பாக அவற்றின் அளவை அறிய வேண்டின், மூன்று நாடிகளில் நடுவிரல் நாடி தராசு முனைக்குச் சமானமாக மத்தியமாக வைத்து, மற்ற இரு விரல்களின் தன்மையைக் கணக்கிடல் கிரமமென்பதே இதன் பொருளாகும்.

**நாடி கணிப்பால் நோய் தணியுறும் கிரமம் அறிய உபாயம் :**

மூன்று நாடிகளில் எது அதிகக் குற்றமடைந்திருக்கிறதோ அதனை அவசரமாகவும், அவசியமாகவும் எண்ணி முதலில் அதற்கேற்ற மருந்துகளை கொடுக்க, அந்த மிகுந்த தோடம் நீங்க மார்க்கமாகும். வியாதியை பரிகரிப்பதற்கு அல்லது தணிப்பதற்கு இது தந்திரமும் சுலபமான உபாயமென்பதுமின்றி பிற குணங்களாகிய துணை நோய்கள் எவையும் தொடராது என்பதை தெரியவும் நோயை நன்கு ஆராய்ந்து அறிந்து மருந்து கொடுத்தல் இன்றியமையாதது ஆகும்.

ஒரு பண்டிதனுக்கு எவ்வளவோ பெருமை வாய்ந்த பரிகாரங்கள் (மருந்து வகைகள்) தெரிந்திருந்த போதிலும், நாடியை பிரதானமாகக் கொண்ட எண்வகைத் தேர்வு, மற்றுமுள்ள குறிகுணங்கள், நோயின் சரித்திரம் முதலியவற்றால், நோயின் தன்மைகளை தீர்க்கமாக





அறியவில்லையென்றால், பண்டிதனது மருந்துகள் பயனற்றதாகிவிடும் என்பது நிச்சயம்.

**பஞ்சநாடி அல்லது பஞ்சபூதநாடி :**

பஞ்சநாடி அல்லது பஞ்சபூதநாடி என்பது பெருவிரலில் உணர்த்தும் துடிப்பு பூதநாடி ; ஆள்காட்டி விரலிலுணர்த்தும் துடிப்பு வாதம் ; நடுவிரலில் துடிப்பு பித்தம், அணிவிரல் துடிப்பு சிலேத்துமம்; சிறுவிரல் துடிப்பு பூதநாடி என்னும் ஐந்து நாடிகளை ஐந்து விரல்களிலும் அறியலாம்.

குருநாடி : குருநாடி என்பது சீவநாடி அல்லது உயிர்த்தாதுவையே, குறிக்கும். வாத பித்த சிலேத்துமமென்ற மூன்று நாடிகளில் பித்த நாடியானது பூதநாடி, குருநாடி, ஆத்ம நாடி, யென வழங்கும் எனவும் சகல நோய்களையும் அகற்றி நன்மை பயக்கும் நாடி எனவும், அகங்காரம், பிராணன், உயிரக்கனி இவை எல்லாவற்றிற்கும் குருநாடியே ஆதாரமாயுள்ளது.

குருநாடி எப்போதும் பித்தத்தின் முன்னே நிற்கும் என்ற கருத்திற்கிணங்க, பித்தநாடியே குரு நாடியாகவும், ஆத்ம நாடியாகவும், சீவ நாடியாகவும் நிகலலாமென கூறுகின்றனர்.

குருநாடியை தனி நாடியாக எண்ணினாலும் சரி அல்லது வாதம் பித்த கபம் ஏற்படுவதற்கு எது ஆதி காரணமோ, இவ்விரண்டையும் ஒன்றாகவே பாவிக்க வேண்டும். ஏனெனில் குருநாடி வாத பித்த கப நாடிகளுக்கு வலுவைக் கொடுத்து, அவற்றின் இயற்கை நடைகளெல்லாம் குருநாடியின் தத்துவத்தால் நடைபெறுகின்றன.

வாத பித்த கபம் நடைபெற்றுக் கொண்டிருக்கிற தருணத்தில் குரு நாடியை தனித்து அறிவது சாமான்ய மன்று. மூன்று நாடிகளும் ஒடுங்குங் காலத்து குருநாடி நடையை உற்று கவனித்தால் பித்தத்தின் முன்னே புலனாகக் கூடும்.

குரு நாடியான பஞ்ச நாடிகளிலும் கலந்து நின்று அவற்றை வளர்த்து, வலுப்படுத்தி நடைபெறச் செய்கிறதென்பதை பஞ்சநாடிகள் இருப்பிடம் என்று கூறுவர்.

குருநாடி வாத பித்த கபம் நாடிகளின் மத்தியில் தமரகம் போன்றது எனவும் விளங்குகிறது. தமரகம் என்னும் இருதயம் உடம்பிற்கு எவ்வளவு பிரதானமோ அதே போல குரு நாடியானது வாத





பித்த கபமாகிய உயிர்த்தாதுவுக்குப் பிரதானமாகும். இதனை வேறுபடுத்திக் காண்பது அரிது.

குருநாடி தச நாடியில் இடகலை, பிங்கலை சுழிமுனை என்ற மூன்று நாடிகளும், அபாணன், பிராணன், சமானன் என்ற வாயுக்களின் இயக்கத்தால் சுவாசத்தையுண்டாக்கி, அதனின்றும் வாத பித்த கபம் என்னும் மூன்று நாடிகளும் உண்டாக்கி, உடலையும் உயிரையும் பொருத்தி நன்னிலையில் வைத்துக் காப்பாற்றி வரக் கூடிய தத்துவத்திற்குக் காரணமாக சக்தி எதுவோ அதுவே குருநாடி எனக் கொள்ளலாம்.

**குருநாடியின் தன்மையால் நோய்களைக் குறிக்கும் குணம் :**

*1.* குருநாடி வாதத்தில் அட்டைபோற் புரண்டுவரின் வாய்வுமிகும். இருமல், சொறி, திணவு இவை மிகுதியாயுண்டாகும்.

*2.* குருநாடி பித்தத்தில் அன்னம்போல் நடந்தால் நாக்கில் ஜீரங்காயும், வாயுநீர் சுழற்றும், வியர்க்கும், நீர் கட்டுப்படும், கை, கால் ஓய்ந்து போகும் என்பனவாகும்.

*3.* குருநாடி சிலேத்துமத்தில் சிங்கம் போல் சீறி நிற்கில் ஜன்னி தோன்றும்.

*4.* குருநாடி சிலேத்துமத்தை ஊடுருவிவருமாகில் (அதாவது, வாதம், பித்தம் இவ்விரண்டும் ஒடுங்கி கபம் மட்டிலும் தனித்து கதித்து நின்றால் அசாத்திய மரணக் குறிகளுண்டாகும்.

*5.* குருநாடி மொத்தத்தில் குன்றிப் போகில் வயிறு கழியும், கடுப்பெடுக்கும், கைகால் வீங்கும்.

*6.* குருநாடி பக்கம் பாயில் (அதாவது) அதன் இயற்கை இருப்பிடமாகிய பித்தத்தின் முன்னே நிற்பதற்குப் பதிலாகப் பக்கத்தில் தோன்றினால் சிலேத்துமம் எதிரே மோதும் (அதாவது சிலேத்துமம் அதிகரிக்கும் ).

*7.* குருநாடி நேரே நிற்கில் வாத பித்த, கபம் மூன்றும் சேரும் (அதாவது மூன்று நாடிகளும் தன்னிலைப்படும் ).

*8.* குருநாடி பின் வாங்கில் அசாத்தியங்களுண்டாகும். (அதாவது குருநாடி இயற்கையளவாய் நடைபெறாவிட்டால் அசாத்தியங் களுண்டாகும்.





*9.* குருநாடி கபத்தில் விட்டிலைப்போல துடிக்கில் மரணமாகும்.

**நோய் நிவர்த்தி :**

ஒரு நோயாளியை குணப்படுத்துவதற்காக, தாது, தாவர மருந்துகள் இரண்டையும் கலந்தும், அல்லது பூரணமாக சொஸ்தப்படும்படி தனிப்பட்ட எட்டு விதமாகவும் தயாரிப்பதுண்டு. ஆனால், மனிதன் அவயங்களையும், பூண்டுகளையும் தாக்குவதற்கு ஆகாயத்தில் அனேக நட்சத்திரங்கள் இருக்கின்றன. ஆகவே, கீழே பூமியிலுள்ள பூண்டுகள் அவற்றிற்குள்ள சம்பந்தத்தினால் நட்சத்திரங்களின் சக்தியை கிரகித்துக் கொள்ளும், இப்படிப்பட்ட பூண்டுகளைத்தான் வைத்தியன் ஒரு நோயை குணப்படுத்துவதற்கு விவேகத்தோடு உபயோகிப்பதினால் நன்மை உண்டாகும்படி செய்யலாம். மேலும், உபயோகப்படுத்துபவனின் பழக்க வழக்கங்களினால் ஏற்பட்ட கோளாறுகளும் சீர்திருத்தமாகி, உடம்பு பழையபடி ஆரோக்கிய நிலையை அடையும். நோயை குணப்படுத்தும் முறையில் கிரகக் கோளாறுகளே முக்கியமான காரணமாதால் நவக்கிரக பூசை மிக்க அவசியமானது.

சித்த முறைப்படி வியாதிகள் *4448* என்று கொள்ளப்படும். இம்முறையினால் குணப்படாதது ஒரு நோய்கூட கிடையாது.

**பத்தியக் கிரமம் :**

சித்த முறையில் பத்தியமுறை விஷயம் மிகவும் முக்கியமானது. உனக்கு இஷ்டமானதை சாப்பிடலாம் என்று சொல்வது இதில் கிடையாது. ஏனெனில், பத்திய முறையைக் காப்பாற்றுவதால் தான் வியாதிகளை எளிதில் குணப்படுத்தக்கூடும். நாம் சாப்பிடும் உணவினால் தான் முக்கியமாக முப்பிணிக் கோளாறுகள் ஏற்படுகிறது. ஆகையினால், பத்திய பாகம் ஒவ்வொரு வியாதிக்கு தக்கபடி அனுசரிப்பது மிகவும் முக்கியமான விஷயமாகும். இதற்காக வேண்டிய பதார்த்த குண விளக்கத்தில் உடம்பின் தோஷக் கோளாறுகளைப் பற்றியும், அதற்குத் தகுந்தபடி நோய்களை சிகிச்சை செய்ய வேண்டியும், இன்னின்ன மருந்துகளென்ற விவரத்தையும் சொல்லப்பட்டிருக்கிறது. இது விஷயத்தில் பூர்வகாலத்து சித்தர்கள் அனுபவத்தை நாம் கைக்கொண்டு அவர்கள் கவனத்துடன் முடித்த பரிசீலனைக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும். ஆனால் தற்காலத்தில்

சிகிச்சைசெய்வோர்கள் இதை கவனிப்பதே கிடையாது. நாம் புசித்து பசிதாகத்தை தீர்த்து கலகலப்பாய் இருப்பதற்காக வேண்டி எவ்வளவு உணவு புசிக்க வேண்டுமோ அவ்வளவுதான் கொள்ள வேண்டும். சித்தர் சிகிச்சை முறையில் பத்தியத் தவறுதல்கள் ஏற்பட்டால் வியாதியுடன் பல கோளாறுகளும் ஏற்படும். ஆகவே, இது விஷயத்தில் மெத்த ஜாக்கிரதையாய் இருக்க வேண்டுமென்பதை நோயாளிக்கு வைத்தியன் முன்னதாகவே எச்சரிக்க வேண்டும். ஏனெனில், பத்தியம் காத்தலினால் பாதிநோய் குணப்படுமென்பதை மறக்கக் கூடாது.

**சித்த முறைப்படி தயாரிக்கும் மருந்துகள்:**

சித்த வைத்திய முறைப்படி 212 வகையான தாதுப் பொருள்களினின்று மருந்துகள் தயாரிக்கப்படும். இதற்கெல்லாம் மூலப்பொருள்களாகிய உப்பும், இரச, கந்தக பாஷாணங்களையும் ஆதாரமாகக் கொண்ட தாதுவகைகளையும், உலோகப் பொருள்களையும் மாற்றி மருந்துகளாக தயாரிக்க வேண்டும். ஆகவே, நோய்களை சிகிச்சை செய்யும் பொருட்டு மேற்கண்ட தாது வர்க்கங்களை புடமிட்டு பற்பம், செந்தூரம், சுண்ணமாக செய்து கொடுக்க வேண்டும். இதற்கு கட்டுமுறை தெரிய வேண்டியது அவசியம். இவ்வகையாக கட்டின பிறகுதான் பற்பம், செந்தூரம், சுண்ணமாக மாற்றி அனேக நோய்களுக்கு மருந்துகளாக கொடுக்கலாம். ஆனால், இவ்விதமாக மாற்று முறையில் மூலிகைச் சரக்குகளை நாம் செய்ய வேண்டிய மருந்திற்கு தக்கபடியும், அதன் குணத்திற்கு தக்கபடியும், உபயோகமாகும்படி சேர்க்க வேண்டியதாயிருக்கும். இதன்றியும் வைத்தியர்கள் மூலிகைளின் வேர்கள் சத்துக்கள், சாறுகள், விதைகள், மரத்தின் பால், பிசின் ஆகிய இவைகளைக் கொண்டு சூரணம், இலேகியம் இவைகளையும் இம்முறைப்படி தயாரித்து கொடுத்துள்ளார்கள்.

பூர்வகாலத்து மருந்துகள் தூண்களைப்போல் நான்கு வகை ஆதாரமாக கொண்டது. அவையாவன (1) அவைகளின் இயற்கையான தன்மையை அறியும் அறிவு (2) தன்னுடைய மனோ வல்லமை (3) தனக்கு ஏற்பட்ட தெய்வீக சக்தி (4) வைத்தியனின் நல்லொழுக்கம் பயபக்தியாம். மேலும் இம்முறைப்படி மருந்துகள் மூன்று வகைகள். அவையாவன (1) ஒப்பு முறை. அதாவது வியாதிக்கும் சமத்துவ குணமுடைய மருந்துகள் (2) எதிருறை நோய்க்கு எதிராக குணத்தை





அதாவது கண்டிக்கக் கூடிய குணத்தையுடைய மருந்துகள். (3) கலப்புறை அதாவது மேற்சொன்ன இரண்டு வித மருந்துகளும் கலந்தது.

இதன்றி, சித்த முறைப்படி, காய சித்திக்காக சரக்கு வைப்பை அனுசரித்து மருத்துகள் தயாரிக்கப்படும். இவ்வகையான மருந்துகள் வேறு வைத்திய முறைகளில் காணமுடியாது. இம் மருந்துகள் நீண்ட ஆயுள்வரை இருப்பதற்கும் மரணத்தை தடுப்பதற்காகவும் வேண்டி தயாரிப்பது. இதற்காக வேண்டி இரசத்திலிருக்கும் தன்மையையும், உள்ளிருக்கும் சக்தியையும் மாற்றி, நெருப்புக்கு ஓடாதபடி செய்து பின்பு உலோகங்களைப் போல் உருகிடவும் செய்து, சுண்ணமாக உருவகப்படுத்தி சாப்பிடும் படியான முறையில் உட்கொண்டால் உடம்பில் சதை பாகங்களிலும், சாலம் அல்லது கண்ணறைகளிலும் புகுவதினால் உடம்பு கிரகித்துக் கொள்ளும். ஆனால், இது மிகவும் இரகசியமான முறை. சாதாரணமாக செய்து முடிப்பது இக்காலத்தில் அசாத்தியமான காரியம்.

**சித்தவைத்தியத்தைப் பற்றிய பொதுவான குறிப்பு விஷயங்கள்:**

மனிதன் சாதாரணமாக மனதினால் அதிகமாக தூண்டப்படுகிறான். ஏனெனில், ஆன்ம சக்தியானது மனதின் மூல சக்தியின் மூலமாய் செயலியற்றுவதால் அதிக வல்லமையடைகிறது. பூர்வ காலத்தில் சித்தர்கள் நூற்களின் உண்மைகளை தங்கள் தியானித்தினால் கண்டறிந்து அனேக அற்புதங்களை மனோ வல்லமையினாலும், சக்தியாலும் செய்தார்கள்.

தென்னிந்தியா தட்சண பாகத்திய தமிழ் தேசமாகிய லிமூரியா என்ற பூர்வ பாகம் முழுவதும் சமுத்திரத்தில் மூழ்கி விட்டாலும், அதற்கு பிற்காலத்திய ஜனங்களின் உடம்பின் கூறுகளை நன்றாக கண்டறிந்த விஷயங்களினின்று ஏற்பட்டது தான் சித்த வைத்திய முறை. இந்நூற்களில் சொல்லியுள்ள மருந்துகள் இந்த ஊரிலேயே விளையும் மூலிகை, கிழங்கு, வேர் முதலியவைகளை அபரிமிதமாகக் கொண்டு, இவ்விடத்து சனங்கள் பழக்கமாக உண்ணும் உணவிற்கு தக்கபடியும், அவர்களின் தேகக் கூறுக்கு அமைந்தவாறுமாக கூறப்பட்டிருக்கிறது.

மேனாட்டு மருந்துகள் இந்திய பழக்கவழக்கங்களுக்கும், இத்தேசத்து சீதோஷண நிலைக்கும் எவ்விதத்திலும் பொருந்தவே பொருந்தாது. உதாரணமாக, ரசாயன கலவையுள்ள மருந்து அரிஷ்ட மருந்து, சாராயம் கலந்த இவைகளை உட்கொள்ள உடம்பின் ஈரல்,





குண்டிக்காய் உறுப்புகளுக்கு ஒவ்வாது. அதனால் அனேக நோய்களுண்டாகும். தென் இந்தியாவிலுள்ள அனேக கோடி ஜனங்கள் ஆயிரக்கணக்கான வருஷங்களாக நம் முறையினால் காப்பாற்றப்பட்டு வந்தார்கள். மேனாட்டு முறை புதிதாக வந்து சேர்ந்திருந்தாலும், இப்பொழுதும் கிராம சமுதாயங்களிலுள்ள ஜனங்கள் பழைய சித்த முறைப்படி தான் ஆதாரிக்கப்பட்டு வருகிறார்கள்.

இச்சித்தமுறை, தற்காலத்தில் ஆதரவற்று ஆராய்ச்சியில்லாமலே சீரழிந்து வருகிறது. மேலும், பிரிட்டிஷ் அரசாங்கம் பாஷாணச் சட்டம் என்பதை ஏற்படுத்திய நிமித்தமாக, சித்த முறைப்படி பூர்வ காலத்திலிருந்து, மருந்துகள் தயாரிக்கப்பட்டு வந்த மைசூர், தஞ்சாவூர், விஜயவாடா, ஆந்திராதேசம் முதலிய இடங்களில் உள்ள மருந்துச் சாலைகளெல்லாம் மூடப்பட்டன.

மேலும், சித்த நூற்களில் உபயோகப்படும்படி சொல்லியுள்ள அனேக விஷயங்கள் தற்காலத்தில் அச்சுப் பதிப்பிற் காணுதற்கில்லை. ஆகவே, சித்த நூற்கள் முழுமையுமே ஆராய்ச்சி செய்து அதிலுள்ள நுண்முறைக்குத் தகுதியானதை பிரித்தெடுத்துக்கூற வேண்டியிருக்கிறது. தற்காலத்து அபிவிருத்தியிலுள்ள இளைஞர்கள், இது விஷயத்தில் யாதொரு சிரத்தையும் எடுத்துக் கொள்வதாகத் தெரியவில்லை. ஏனெனில், அவர்கள் மேனாட்டு நாகரிகத்தினால் கட்டுண்டு. அவ்வலையிற் சிக்கி உலக மாயையினால், நம்முடைய பூர்வீக நூற்களின் வித்தைகளையும், தேர்ச்சிகளையும் மிக்க வெறுப்புடன் காண்கிறார்கள்.

முதலாவதாக, நம்முடைய சித்த முறை அனேக ஆயிர வருஷ காலமாக சாதனைக்கு உரித்தாகயிருந்து வந்ததால், பூர்வ கரும வியாதிகளின் கொள்கையைத் தவிர, மற்றெவ்விதத்திலும் தற்காலத்திய மேனாட்டு சாஸ்திரிகள் அவைகளைத் தள்ளக்கூடாமையென நாம் கருதுகிறோம். ஏனெனில், பூர்வ கரும வியாதிகளின் கொள்கையோ அவர்கள் அறிவுக்கு எட்டாத விஷயம். மருந்துகள் தயாரிப்பதென்றால் தமிழ் வைத்திய நூற்களில் சொல்லியுள்ள விதிகளை அனுசரிக்க வேண்டும். சாதாரணமாய் நமது முன்னோர்கள் அல்லது குருக்கள் மருந்து தயாரித்த முறையை நாமும் அனுசரித்து வருகிறோம். ஆகவே, ஒருவரின் தேர்ச்சியையும், மேன்மையையும் அவன் குருவின் வழியைப் பற்றி தெரிந்து கொள்ளலாம். சில வைத்திய முறைகளில், சில நோய்கள், பஞ்ச கருமம் என்னும் முறையால் குணப்படுத்தப்படுகிறது. ஆனால்,





இவ்வியாதிகளையே சித்தமுறையில் மேற்கண்ட பஞ்ச கரும முறையில்லாமலே உலோகங்களினின்று தயாரித்த பற்பம், செந்தூரம், சுண்ண வகைகளினால் குணப்படுத்தலாம்.

இரண்டாவதாக, சித்தர்கள்முறையில்அனேக கோட்பாடுகளுண்டு. அவைகளுக்கு ஒருங்கே ஒரு முடிவானசங்கதி வாக்குறுதியாக சொல்லிவிட முடியாது. இது விஷயத்தில் தற்காலத்து தேக தத்துவ நூலிலும் எதுவும் சொல்லப்படவில்லை. ஆகவே சித்தமுறையில் சொல்லியுள்ள அனேக விஷயங்களை விசாரித்தறிந்து வெளிப்படுத்த வேண்டி இருக்கிறது. உயிர்த் தத்துவமடங்கிய ஜீவாதார நூலைப்பற்றி அனேக விஷயங்கள் சரிவர இன்னும் தெரிந்துக் கொள்ள முடியவில்லை. ஒருவனுக்கு வம்ச பரம்பரையாய் ஏற்படும் குணாதிசயங்களைப் பற்றியும், கருவில் இருக்கும் குழந்தை ஆணா அல்லது பெண்ணா என்பதைப் பற்றியும், இதுவரையிலும் நாம் அறிந்தோமில்லை. தற்காலத்து நிபுணரான சாஸ்திர ஆராய்ச்சியாளர்கள் சொல்லும் கோட்பாடுகள் ஆச்சரியத்தை விளைவிக்கிறது. மேனாட்டு முறைப்படி தற்காலத்தில் புதிதாக கண்டு பிடித்ததாக சொல்லப்படும் ஹார்மோன் என்னும் விஷயம். நமது திரிதோஷக் கொள்கைக்கு ஒருவாறு சமமாகச் சொல்லப்பட்டதா? ஒருவகை முடிவிற்கு வருவதற்கு ஏதுவாக விஷயங்களை தகுந்தபடி விசாரணை செய்யாமல், ஒருவர் கொள்கையைத் தப்பென்று வெளிப்படையாய்ச் சொல்வது சாஸ்திரகொள்கைக்கு பொருத்தமானதல்ல. சாஸ்திர விஷயமாக நாம் கொண்ட விரோதமான கருத்தை கூறுவதற்கு முன் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் அனேகம் இருக்கிறதென்பதையும், சாஸ்திர அபிவிருத்தி இதுவரையிலும், சமுத்திரக் கரையில் கூழாங்கற்களை பொறுக்குவதைப்போல் அவ்வளவு மெதுவாக இருந்து வருகிறதென்பதையும் நாம் மறந்து விடுகிறோம். உடற் தத்துவ இரசாயன நூலின் விஷயத்திலோ, சித்த முறையிலுள்ள இரசாயனதத்துவ முறையோடு ஒத்து பார்க்குங்கால், நாம் குழந்தையைப் போல் ஆரம்ப முறையில் இருந்து வருகிறோம். எது சாதனைப்பழக்கத்துக்கு பொருத்தமானதோ அதுதான் சரியான முறை.

**2. சித்தர் சோதிடம்**

சித்தர்களால் செய்யப்பட்டது சோதிட நூற்கள். இவைகள் ஒவ்வொரு மனிதருடைய வாழ்நாளின் நிகழ்ச்சியைப் பற்றி கடிகாரத்திற்கு சாவி கொடுத்து, பின்னால் ஓடுவதற்கு தகுதியாக வைத்திருப்பதுபோல், முன்பதாகவே தயாராக எழுதி வைக்கப்பட்டிருப்பதாகும். வேண்டிய

போது அவைகளை எடுத்து ஒருவனின் வாழ்நாளில் நடக்க கூடிய முக்கியமான விஷயங்களை எடுத்துக் கூறுவதாகும். அந்த நூற்களில் கடிகை, லக்கினம் முதலிய விவரங்களோடு, ஒவ்வொறு நாளும் நேரும் சங்கதிகளை குறிக்கப்பட்டிருக்கும். இது உண்மையில், ஒவ்வொருவரின் ஜாதகமே ஒழிய வேறல்ல. ஆகவே அனேக வருஷங்களுக்குப் பின்னால் சாதகன் இச்சாதகத்தை வந்து கேட்கக் கூடும் என்ற கருத்துடன் சித்தர்கள் எழுதி முடித்தது. அவ்வப்பொழுது நடக்க வேண்டிய விஷயங்களை கிரமமாகவும், முறையாகவும், முன்னதாகவே சிலருக்கு எழுதி வைத்ததை நோக்குமிடத்து, மிகவும் மெச்சத்தகுந்ததாகவும், அவ்வளவு தெளிவாக நடையை ஒருவரும் சரிவர விவரித்து சொல்லக் கூடாத முறையாகவும் இருக்கிறது. அன்றியும் ஒருவரும் பிழைகூற முடியாத வகையில், அவ்வளவு நேர்மையாகவும், உண்மையாகவும், எழுதப்பட்டு இருக்கிறது. இதை வாசித்து காட்டுபவன் தன் அஜாக்கிரதையாலும் அல்லது ஒன்றுக்கொன்று தவறுதலாகவும், அல்லது அர்த்தம் சொல்லுவதிலும், ஒருவேளை பிசகு ஏற்படலாம். அன்றியும், அனேகரின் விஷயங்களில் தாய் தந்தையர்கள் குழந்தை பிறந்த நேரம் சரிவர குறிக்காத காரணத்தினால், தவறுதலின் பேரில் சொல்லப்பட்ட சாதக விஷயங்கள் சாதாரணமாக சரியாகவும், உண்மையாகவும் இருக்கவே இருக்காது. அவ்வியங்களில் சோதிடம் சொல்பவரை நிந்திக்கக் கூடாது.

பூர்வ கருமத்தின்படி, தெய்வ சங்கல்பமாக ஏற்பட்ட நோய்களுக்கு, தெய்வீக முறைப்படித்தான் சிகிச்சை செய்ய வேண்டும். ஆகவே ஜோசியத்தைப் பார்த்து கரும காண்டத்தின்படி, இன்ன விதமான நோய் எப்படி நிவர்த்தியாகுமென்பதை விவரமாய்த் தெரிந்து கொள்ளலாம். இவ்விதமான விஷயங்கள் கௌதமர், புஜண்டர் முதலானவர்களால் செய்யப்பட்ட நாடி நூற்களில் கண்டறியலாம்.

**3. சித்தர் நோக்கம்**

மனிதர்களுக்காக இவ்வுலகின்கண் வரையறுத்திருக்கப்பட்ட விஷயங்களைப் பற்றியும், அவர்கள் யாதொரு இடையூரின்றி உயிர்வாழ்வதற்குண்டான வசதிகளைப் பற்றியும் சித்தர்கள் கொண்ட கருத்துளாவன.

*1.* சிருஷ்டி முறை எக்காலத்திலும் ஒன்றே. மனிதன் வாழ்க்கையும், அவன் நோய்களும், உலகம் முழுவதிலும் எக்காலத்திலும் ஒன்றே.





வைத்தியக் கொள்கையும் உலக முழுவதிலும் இப்பொழுதும், எப்பொழுதும் எல்லாக் காலத்திலும் ஒரே மாதிரிதான். ஏனெனில் சிருஷ்டி காலத் துவக்கத்திலிருந்து தனிப்பட்ட முறையில் மனிதப் போக்கும், ஒழுங்கு முறையும் கடவுளால் வகுத்து வண்ணமாகவே முன்னமும், இப்பொழுதும், ஒரே மாதிரியாய்தான் இருந்து வருகிறது. இனிமேலும் அப்படியே தான் எக்காலத்திலும் இருக்கும். இதில் யாதொரு பேதங்களும் கிடையாது. மனிதன் தோன்றிய போதே மருந்துகளும் நிவர்த்திக்காக கூடவே உண்டாயிற்று.

*2.* அண்டமே பிண்டம், பிண்டமே அண்டம் அதாவது உலகத்தில் இருப்பதுவே மனிதனுள்ளும் இருக்கிறது. ஆகவே, நவக்கிரகங்களும், பஞ்ச பூதங்களும், இதனதன் கிரித்தியங்களை மனிதன் மேல் செலுத்துகிறதினால், மனிதன் அதற்குட்பட்டவனாகிறான். ஆகையால் சுபாவக்கிரித்தியங்கள் நல்லதாயின் மனிதனுக்கும் நன்மையே உண்டாகும். கெடுதியாயின் பொல்லாங்கையே விளைவிக்கும். பிரகிருதி சுபாவத்தில் உலகத்தைக் காக்கும் தேவதைகளின் செயல்களால், இயற்கையில் கெடுதிகளுக்கு இடமுண்டானால், பெருவாரி முதலிய கொள்ளை நோய்கள் உற்பத்தியாகி, அதனாலேற்படும் விஷத்தன்மை மனிதனையும் தாக்கும். ஆத்ம கோளத்திற்குள் உள்ள தொத்துக் கிருமிகளால் காரணங்கள் ஏற்பட்டு, பிரகிருதியிலுள்ள சூட்சும காரணங்களை அனுசரித்தால், பெருவாரியாக கொள்ளை நோய்கள் ஏற்படும் நாசத்திற்கு ஏதுவாகும்.

*3.* பிண்டமே அண்டம், ஆகவே மனிதனே சிருட்டி வகையில் மேம்பட்டவன். ஏனெனில், வேறு பிராணிகளில் காணப்படாத தேர்ந்த பேரறிவு இவனுக்குண்டு. மனிதனே உலகம் என்ற முறைமையில், இவன் தனக்குள்ளிருக்கும் அண்டத்தை ஆகாயத்தின் ஓர் பாகமாக வாய்ந்துள்ளான்.

*4.* மனித உடம்பினுள் ஒவ்வொரு அவயமும் தனக்கு வேண்டியவற்றை விருத்திக்காக, பிரகிருதியில் மூலப்பகுதியினின்று கிரகித்துக் கொள்கிறது.

*5.* பேரறிவுடைய மனிதன் தான் தன் இயற்கைக்கு மாறாக நடப்பவன். அப்படி நடப்பதினால் தன் உடம்பின் ரூபத்தில் அதீத கிரித்தியங்களினால் ஒன்றும் ஏற்படாவிட்டாலும், தனது குணாதிசயங்களை கெடுத்துக் கொள்கிறான்.





*6.* எல்லா குழந்தைகளும் ஏக காலத்தில் பிறக்குமாயின், அவைகள் ஒரே மாதிரியாக அமைந்தனவாகும். ஆரோக்கியமும், நோய்களும் ஒரே காலத்தில் உண்டாகும். இரட்டைப் பிள்ளைகள் விஷயத்தில் இவை தெட்டென விளங்கும். ஆனால் கருத்தரிக்கையில் மாத்திரம் இவ்விதி ஒவ்வாது. ஏனெனில் கருமானுசாரப்படி, கன்தேக சுபாவத்தில் எது உள்ளதோ, அதையே உரிமையாகக் கொண்டு பிறத்தலால் வித்தியாசங்கள் ஏற்படும்.

*7.* தெய்வ அருள் மனிதனுக்குள்ள சுபாவத்தன்மையை மாற்றி உடம்பிற்கு ஆரோக்கியத்தை உண்டாக்கும்.

*8.* சுயேச்சைத் தன்மையில், மற்றப் பிராணிகளைவிட மனிதன் நோய்க்கு வெகு சுலபமாக உள்ளாகிறான்.

*9.* இயற்கையில் வியாதிகள் தானே உண்டாகும். பிறகு தானே நீங்கும். ஆகவே, வைத்தியனுக்கு இவ்வியற்கையின் போக்கு இன்னதெனத் தெரிய வேண்டும். எவன் பிரகிருதியின் கூறுபாடுகளை தெளிவாக அறிகிறானோ அவன் தான் மனிதவுடம்பின் அமைப்பின் கூறுபாடுகளையும் இயல்பிலேயே தெரிந்தவனாகிறான்.

*10.* அண்டமும் பிண்டமும் ஒன்றே அறிந்துதான் பார்க்கும் போது என்று சட்டமுனி நிகண்டில் கூறியுள்ளபடி, மனிதனின் இரத்ததாது செவ்வாய் கிரகத்தை அனுசரித்ததாகும். இது மாதிரியே ஆத்ம நிலைகள், சுக்கிரனுடைய ஆதரவை ஒட்டி நிற்கும். இவ்வித ஆத்ம ஆதரவு ஏற்படாவிட்டால் மனிதருக்கும், மற்றப் பிராணிகளுக்கும் சந்ததி விருத்திக்கு ஏதுவான காமவிச்சையே உண்டாகாது. ஏனெனில் உலகத்திலுள்ள உயிர் பிராணிகளெல்லாம் சுக்கிரனுடைய சம்பந்தத்திற்கு உட்பட்டதே. ஆகவே, ஆண், பெண் இருவருக்கும் ஏற்படும் காம நட்புக்கு சுக்கிரனுடைய அம்ச சம்பந்தம் அவசியம் வேண்டும். (இதனால் தான் வெள்ளிக்கிழமை சம்போகத்திற்குகந்த நாள் என்று கருதப்படும் போலும்)

*11.* மனிதனிடத்தில் இரண்டுவித அமைப்பின் கூறுபாடுகள் உண்டு - அதில் ஒன்று, தேகத்தின் வெளி அமைப்புக் கூறுபாடு. மற்றொன்றோ, உள்ளமைப்பின் கூறுபாடு. முன் சொல்லிய ஒன்றுதான் இலதூல உடம்பை அனுசரித்து, மற்றொன்றுக்கும் உடம்பை ஒட்டியதாகும். ஆகவே, நாம் உள்ளுடம்பின் கூறுபாட்டை அறிந்துவிட்டால், மூலவஸ்து மூலமாய் மனிதனுக்குள்ள நோயையும் அதற்குண்டான





நிவர்த்தியையும், எளிதில் தெரிந்துக் கொள்ளலாம்.

*12.* மனிதன் தனக்கு இயல்பிலேயே அமைந்த பூரண சக்தியையும் சரியான வழியில் காட்டுவதற்கு மாயை இடங்கொடுக்காது. அப்படி அதையும் மீறி, இத்தடையை கடந்துவிட்டால் மேற்படி இயற்கை சக்தி உடனே தனது பூரண சக்தியை காட்டிவிடத் துவங்கும். அப்போது தான் யோகிகளைப் போல் அபராசக்திகள் கை கூடிவிடும்.

*13.* வைத்தியன் தான் வைத்தியத் தொழிலில் எவ்வளவு தேர்ச்சியடைந்திருந்தாலும், சோதிட அனுபவமில்லாமற் போனால் அது பயன்படாது. ஏனெனில், நமது நாட்டு வைத்தியம் முன்னேற்ற மில்லாமல் இத்தனை வருஷங்களாக சீரழிந்த ஒரே நிலையில் நிற்பதற்கு, சோதிட விஷயத்தையும், வாத பித்த சிலேத்துமக் கூறுகளையும் அறியாததே முக்கிய காரணங்களாகும். ஆனால் தற்காலத்தில் அவைகளின் உண்மை விஷயங்களை ஒருவராவது எளிதில் தெரிந்து கொள்வது சாமானிய காரியமல்ல.

*14.* எவனொருவன் பஞ்ச பூதங்களின் இரகசிய விதிகளின் உண்மையை, அதாவது பஞ்சீகரண சக்தியை தெரிந்து கொள்ளுகிறானோ, அவன்தான் ஒரு உலோகத்தை மற்றொரு உலோகமாக மாற்ற சக்தி வாய்ந்தவனாகிறான். ஏனெனில், உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் ஆதிமூலப் பொருள் என்னும் வஸ்துவினிடத்ததே யிருந்து தோன்றியது. ஆகவே, ஏகம், உலகத்திலுள்ள மற்றவஸ்துக்கள் முழுமையும் கூட்டு அல்லது கலப்பே ஒழிய வேறல்ல.

சித்தர் பட்டை, கருப்பு சித்திர மூலம், பதிணென்மார் எனப்படும் பதினெட்டு சித்தர்கள் :

| | | |
|---|---|---|
| 1. திருமூலர் | 7. போகர் | 13. கரூரார் |
| 2. புலஸ்தியர் | 8. புலிக்கீசர் | 14. அகப்பேய் |
| 3. நந்திதேவர் | 9. கொங்கணவர் | 15. தேரையர் |
| 4. இடைக்காடர் | 10. அழுகண்ணி | 16. சட்டைமுனி |
| 5. அகத்தியர் | 11. பாம்பாட்டி | 17. பூணைகண் |
| 6. புண்ணாக்கீசர் | 12. குதம்பை | 18. காலங்கி |

### 4. சித்தர் நூல் சிறப்பு

சித்தர்கள் தங்கள் முறைப்படி செய்த அனேக விதமான விஷயங்களைப் பற்றிய நூற்களை, மற்ற முறையில் செய்த நூற்களோடு ஒத்துபார்க்கும் போது ஏற்படும் மேம்பட்ட முடிவுகளாவன.

*1.* சித்த முறைப்படி, மனிதனானவன் (அ) பஞ்சபூத அம்சங்கள், (ஆ) கிரகங்களின் அம்சங்கள், (இ) பிரகிருதியின் மூலத்தில் உண்டாகி, கிரகாசம் பந்தமும், உலக லௌகீக சம்பந்தத்தையும் அனுசரித்த உடம்பிலுள்ள ஏழு தத்துவங்களையும், கொண்ட ஆன்மாவை பொருந்தியவனாவான். ஆகவே, பூர்வ நூற்கள், மனிதனை கடவுளுக்கு சமமானவன் என்று பலமுறையும் வற்புறுத்துகின்றன. ஆனால், தற்காலத்து மேனாட்டு நூற்களோ, மனிதனை சாதாரண இருகால் சீவனென்றும், (அவ்விதமாக எண்ணுபவனையும் சேர்த்து ) அது தவிர வேறொன்றுமில்லை யென்றும் ருஜுப்படுத்த முயற்சிக்கின்றது.

*2.* பிரகிருதி வடிவமாயுள்ள இவ்வுலகம் எங்கும் நிறைந்த பரமாத்துமா சொரூபமான அனேக ரூபபேதமாயுள்ள உயிர்ப்பிராணிகளே தவிர ஒன்றையும் உயிரில்லா வஸ்துவாக கொள்ளப்படாது. ஏனெனில் எது உள்ளவோ, அது மறுபடியும் இயற்கையின் கருவில் தோன்றி வேறுவித ரூபமாகப் பிறக்கிறது. அவற்றுள் மனிதன் ஒருவன்தான் கடவுளுக்கு மிக்க நெருங்கிய சம்பந்தமுள்ளவனாவான்.

*3.* சித்த வர்க்கத்தைச் சார்ந்த ஞானிகள், உலகத்தை ஆட்டுவிக்கும் சக்திகள் இன்னதென்றும், வெகுதூரத்து விஷயங்களையும் தங்கள் தியான சிருஷ்டியால் கண்டறிபவர்கள். தற்காலத்து மேனாட்டு நூற்படி இறந்த மனிதனைத்தான் தெரியும். அவனுக்குள்ளேயிருக்கும் இயற்கை உயரியச் சக்திகள் இன்னதென்று தெரியாது. வைத்தியத்திலும், அனேக வழியில் சேகரித்து தெரிந்து கொண்ட அறிவையும், தான் கொண்ட நினைவையும், கருத்தையும் சேர்த்து ஆதாரமாக ஏற்படுத்திக் கொண்ட சரியான நூல்வழி இதுவே வென்று கருதுகிறார்கள். அவர்களுக்கு வஸ்துக்களின் வெளித்தன்மை தான் முக்கியமாகத் தெரியும். அன்றியும், புகைவண்டி, வானவூர்தி முதலிய புதிதாகக் கண்டுபிடித்த யந்திரங்களும் தெரியும்.

*4.* பூர்வநூல், மனிதனுக்கு உலகத்தையே தன்வசமாக்கிக் கொள்ளக்கூடிய சக்தியை அளிக்கிறது. மேனாட்டு நூற்களோ மனிதன் தன்னுடைய களதியை மாத்திரம் தூக்கவல்ல சக்தியை பெற்றிருக்கிறான்





என்று அறிவிக்கிறது.

*5.* பூர்வ நூல் தெய்வத்தன்மை பொருத்திய உள் மனிதனை குறிக்கிறது. தற்காலத்து நூலோ ஒரு யோக்கியதையுமில்லாத வெளி மனிதனை மாத்திரம் காட்டுகிறது.

*6.* பூர்வநூல், மனிதன் உயிரோடிக்கிறான், தான் பிரியப்பட்டால் சாகாமல் நீண்டகாலம் இருக்கலாம் என்பதைக் கற்பிக்கிறது. ஆனால் தற்கால நூலோ மனிதன் சில வருஷங்கள் மாத்திரம் தான் உயிருடன் இருக்கலாமென்று காட்டுகிறது.

*7.* பூர்வ நூலில், அனேக ஆயிர வருஷங்களுக்கு முன் கண்டு அறிந்த விஷயங்கள் மறுக்கப்படவில்லை. ஏனெனில் இவைகள் உண்மையிலேயே ஆதாரமாகக் கொண்டதினால், எப்பொழுதும் உண்மையே, உண்மையைத் தவிர வேறொன்றுமில்லை. ஆகவே, அவைகளை மறுக்கவே முடியாது. இது வரையிலும் மறுத்ததும் கிடையாது. மேனாட்டர் அனுசரிக்கும் கொள்கைகள் பிரதி வருஷங்களும் மாறும். பழையன கழிந்து, புதியன தங்கள் இஷ்டப்படி ஏற்படுத்திக் கொண்டு, எளிய உயிர்ப்பிராணிகளை கையாள்வதற்கு இடங்கொடுக்கும். ஆகவே, எக்காலத்திற்கும் களஞ்சியமாகவும், எவரும் ஒப்புக் கொள்ளக்கூடிய அறிவு வாய்ந்ததாகவும், முக்காலத்திற்கும் உபயோகப்படும் முறைமையில் உள்ளதுதான் உண்மையான நூல் என்று கருதப்படும். ஆனால் மேனாட்டு நூலோ அப்படியல்ல, தெரிந்தும் தெரியாத விஷயங்களை ஒருங்கே திரட்டிய ஓர் நூலே ஒழிய வேறல்ல.

### 5. சித்தர் சமாதி

சித்தர்கள் தங்கள் உயிரை நீத்து லிங்க வடிவமாகி நிலைபெற்ற இடம் சமாதி. பொதுவாக சமாதி என்பது மனதை ஒருமைப்படுத்தி தன் வசமாக்கி உலக விவகாரங்களை மறந்து நிற்கும் நிலைமை. இது இரண்டு விதம், அதாவது சவ்விகற்பம், நிருற்கற்பம், ஒன்றில் சித்தர்கள் தங்கள் இயற்கை சக்திகளை வென்று மேன்மையான எல்லாவித சித்திகளும் அடைவார்கள். மற்றொன்றிலோ, யாதொரு பந்தமில்லாற்படி போதநிலையடைந்து இருப்பார்கள். ஆகவே சித்தர் சமாதி நிலையில் தன்னைத் தான் அறியும் ஆத்ம சக்தியை அடைவார்கள். அன்றியும், தன் ஆத்மாவை மற்றொன்று உடம்பிலும் புகும்படிச் செய்யக் கூடும். அவர்களின் கடைசியான கொள்கையோ, ஆத்ம ஞானத்தை அடைவதாகும். ஆதலின் சித்தர்கள் தங்கள்





உருவத்தை லிங்க வடிவமாக்கி நிலையுற்று இருப்பார்கள். இதுதான் சித்தர் சமாதி. இவ்விதமான சமாதிகள் இந்திய நாடு முழுவதிலும் உண்டு. ஆயினும், தமிழ் நாடாகிய தட்சண பாகத்தில் விசேஷமாய்க் காணலாம். வேறு சில ஊர்களிலும் உண்டு. இச்சமாதிகளின் மேல் கோயில் கட்டி விந்து நாதக் கூறுகளாயுள்ள இந்த லிங்கத்தையும் ஆவுடையார் என வழங்கும் சக்தி பீடத்தையும் சேர்த்து சிவரூபமாகக் கொண்டு நிலை நிறுத்துவார்கள். ஏனெனில், சாதாரண கோயில்களை விட இதற்கு உள்ள மகத்துவங்கள் மிகச் சிறந்தது. இவ்விதமான பிரசித்தி பெற்ற கோயில்கள் நால்வரால் பாடப்பெற்றுள்ளன. ஆகவே, சித்தர்கள் ஒவ்வொருவருக்கும் எவ்வெவ்வூரில் சமாதியானார்களோ, அச் சமாதிகளின் மேல் சோழ அரசர்களால் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன.

அன்றியும், நூற்களிலில்லாத எவ்விதமான விஷயங்களையும் மூல சாட்சியங்களால் வேறு வகையில் பரிசீலனை செய்யும் பக்தி-யாளர்களும், மறைந்து கிடக்கும் பூர்வ வஸ்துக்களை கண்டறியும் ஆராய்ச்சியாளர்களும் தாங்கள் சளைக்காமல் மேற்கொண்ட உழைப்பினால் தான், சரித்திரமே ஏற்படாத ஆதிகாலத்து தமிழர்கள் வாழ்க்கை இவ்வளவு சிறப்பு வாய்ந்ததென்று தெட்டன விளங்களாயிற்று. இத்தென்னிந்தியாவாகிய தட்சணத்தில் அனேக மகான்களின் பக்தி மார்க்கப் போக்குகள் அடங்கிய விஷயங்கள் அனேகம் வெளிப்படாமல் இன்னும் மறைந்து கிடக்கிறது. மேற்கண்டபடி, சமாதியடைந்த சித்தர்களின் பெயரும், அவர்களுக்கு சோழ அரசர்களால் கட்டப்பட்ட கோயில்களின் ஊர் பெயரும் அடியிற் கண்டுள்ளன.

அவையாவன :

1. திருமூலர் - சிதம்பரம்
2. கொங்கணர் - திருப்பதி
3. போகர் - பழனிமலை
4. சட்டைமுனி - சீர்காழி
5. மச்சமுனி - திருப்பரங்குன்றம்
6. கரூரார் - தஞ்சாவூர்
7. இராமதேவர் அல்லது யாகோப் - அழகர் மலை
8. இடைக்காடர் - திருவண்ணாமலை





9. கமலமுனி - திருவாரூர்
10. பாம்பாட்டி - திருக்கடையூர்
11. புண்ணாக்கீசர் - நாங்கனாச்சேரி
12. கோரக்கர் - பொய்யூர்
13. அழுக்கண்ணி - நாகப்பட்டணம்
14. சுந்தரானந்தர் - மதுரை
15. குதம்பை - மாயவரம்
16. கடுவெளி - காஞ்சிபுரம்
17. நந்தி தேவர் - காசி
18. வால்மீகி - எட்டுக்குடி
19. நாரதர் - திருவிடைமருதூர்
20. பதஞ்சலி - இராமேசுவரம்
21. காசிபர் - உருத்திரகிரி
22. விஸ்வாமித்திரர் - திருவாடுதுறை
23. காலங்கி - காஞ்சிபுரம்
24. தன்வந்திரி - வைத்தீஸ்வரன் கோவில்
25. கும்பமுனி - கும்பகோணம்

### 6. சித்தர்களின் கொள்கை

சித்தர்கள் ஒவ்வொருவரும், தாங்கள் எழுதியுள்ள நூற்களாகிய வாதம், வைத்தியம், யோகம் ஞானம் இவைகளின் விஷயங்களை தெளிவாகக் கண்டிருக்கிறார்கள். மேற்கண்ட நான்கு வகைகளில் ஒவ்வொன்றிலும், அவர்கள் கருத்தின் கோட்பாடுகளை அடியில் கண்டபடி சுருக்கமாக விவரிக்கப்பட்டுள்ளன.

#### *I.* வாதம் :-

*1.* வாதி முக்கியமாய் தெய்வபக்தியுள்ளவனாயிருக்க வேண்டும். ஆகவே, வைராக்கியம், தயாளம், தருமம், மேலான மன சுத்தம் ஆகிய இக்குணங்கள் அவசியமானது.

2. இவனுக்கு பணம் அல்லது பொன் பேரில் இச்சையே இருத்தல் கூடாது.

3. இவன் பிறவியிலேயே சோதிட கிரகங்களின்படி வாதிக்குள்ள சக்திகள், பூர்வ கருமானுசாரப்படி அமைந்துள்ளவனாயிருக்க வேண்டும்.

4. எப்படி ஒரு குழந்தை கருப்பத்தில் தரிக்கும் போது, பஞ்ச பூதங்களின் உறவு பிரதானமோ, அதேமாதிரி வாதம் சித்திப்பதற்கு மேற்கண்ட ஐம் பூதங்களின் உறவு கிரமப்படி அமைய வேண்டும். இதில் தவறுதல்கள் ஏற்பட்டால், கருவிலிருக்கும் சிசு எப்படி சிதைந்து போதுமோ, அதுபோல, வாதம் முறைகளும், முறை பிசகினால் சித்தியாகாது.

### *II. வைத்தியம் :*

1. இயற்கையில் ஏற்பட்ட விதிகளை சரிவர தெரிந்து கொள்ளாமலும் அதற்குண்டான உண்மையறிவை செலுத்தாமலும், செய்யும் வைத்தியமானது எப்பொழுதுமே, கொள்கையும், அபிப்பிரா யத்தையும், மனப்போக்கையும் மேற்கொண்டதாக இருக்குமே ஒழிய, உள்ளபடி நோய்களை நிவர்த்திக்கும் குணம் வாய்ந்ததாய் இருக்கவே இருக்காது.

2. சித்தர்களின் கொள்கைப்படி, மனிதனுக்கு நோய்கள் ஏற்படுவதெல்லாம்துஷ்ட தேவதை அல்லது கிரகக் கோளாறுகளினாலே ஒழிய வேறல்ல. ஆகவே, இத்தகைய கெட்ட கோளாறுகளை தடுக்க வேண்டி அனேக நூதனமான விதிகளையும், அனுஷ்டானங்களையும், மாந்திரீக, மனோவசியக் கிரியைகளையும் தங்கள் நூல்களில் காட்டியுள்ளார்கள்.

3. மனிதன் தன்னுடைய சொந்த சக்தியினால் ஒன்றும் செய்துவிட முடியாது. ஏனெனில் தனக்கு ஏற்படும் நம்பிக்கையின் ஆதரவினால் தான் ஒவ்வொரு காரியமும் சித்தியாகும். இது வைத்தியனுக்கு முக்கியமாய் தெரியவேண்டிய விஷயம்.

4. வியாதிகள் இயற்கையில் தானாகவே உண்டாகிறது. தானாகவே தான் அவ்வியாதிகள் குணப்படுகின்றது. ஆகவே, வைத்தியர்கள் மனிதனுக்கு சுபாவத்தில் ஏற்படும் குற்றங்கள், என்ன விதமாய் ஏற்பட்டதென்பதை அறிய வேண்டும்.





5. வியாதிகளும், மற்ற கெடுதியான அசம்பாவிதங்களும், கிரக தோஷங்களினாலும், பூர்வ கருமானு சாரத்தினால் தான் ஏற்படுகிறது என்பதை சித்தர்கள் பூரணமாக தெளிந்துள்ளார்கள்.

6. ஒரு நோயாளிக்கு சிகிச்சை செய்வதற்கு முன்னதாகவே, வைத்தியன் நோயாளியின் சாதகப்படி கிரக நிலைகள் தெரிய வேண்டியது முக்கியம். ஆகவே, தெரிந்த பிறகுதான் வைத்திம் செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

### *III. யோகம் :-*

1. ஒரு யோகியானவன், பரகாயப்பிரவசம் அதாவது பிறருடைய உடம்பிற்குள் தான் புகுந்துவிடக் கூடும். இறந்த பிரேதத்தில் கூட பிரவேசிக்கலாம். பிறகு இவ்வுடம்போடு எழுந்து இங்கு மங்கும் கூடத்திரியச் செய்யலாம். அன்றியும், புதிதாக மனிதரைசிருட்டிக்கலாம். மனதையும் உண்டாக்கலாம். இதை சிருட்டித்த உடம்பு, உண்டாக்கின மனது என்று கூறப்படும்.

2. யோகாப்பியாசம் ஒன்றினால் தான் பிறப்பு, இறப்பை வெகு சீக்கிரமாகவும், சுருக்கமாகவும் முடித்துக் கொள்வதற்கு குறுக்கான வழி. இத்தகைய யோகம், ஒரு குரு மூலம் தொட்டுக் காட்ட வேண்டும்; அப்படியில்லா விட்டால் உடம்பிற்கு கெடுதி ஏற்பட்டு சௌகரியம் உண்டாகாது.

3. பரிசுத்தமான மனதே, யோக விஷயத்தில், ஒரு குருவாகத் தனக்குள் நின்று காட்டிக் கொடுக்கும். ஏனெனில் தெய்வ பக்தி மேலுக்கு ஓங்க தன்னைத் தானறிவதற் குண்டான அறிவு விளக்கமும் மேம்பட விருத்தியாகும் அப்போது அந்த உயர்நிலை பெற்ற மனதே குருவாக நிற்கும்.

4. பஞ்ச பூதங்களை யோகிதான் ஆளுகைக்குள்ளாக்கலாம். ஆகவே, இயற்கையிலுண்டான பேதங்களையும் மாற்றலாம். சிருஷ்டி வகையில் எவ்விதமான ரூபமும் எடுக்கலாம். தன்னுடைய உடம்பையே போக்கவும் செய்யலாம்.

5. குண்டலினிக்குள்ளே வலிவும், நரம்பு சக்தியும் தகுந்தபடி இல்லாவிடில் இருதயம் துடிக்காது, நுரையீரல் மூச்சுவிடாது, உடம்பில் இரத்தோட்டம் உண்டாகாது. மற்ற உறுப்புகளும் தனக்குரிய இயற்கை





தொழில்களை செய்யவே இயலாது.

6. மனிதருக்கு இயல்பிலே தங்களுக்குள் உண்டானகாந்த சக்தியனால் உலகத்தாரை தன் வசமாக்கவும், ஒரு தேசத்து வகுப்பினர்களை தன் ஆட்சிக்குள்ளாக்கவும் செய்யலாம். இதற்கு சாதாரணமாக பிராணயாமத்-தினால் உண்டான வலிவே காரணமாகும்.

### *IV. ஞானம் (தத்துவ ஞானம்) :-*

1. உலக சிருஷ்டியில் மனிதன் ஒருவனுக்கே, எல்லாவித சக்திகளும் உடம்பினுள் மறைந்துள்ளது. இச்சக்தியால் மனிதனை கடவுளின் ஆற்றலுக்கு சமமாகவே சொல்லலாம். ஆனால் மனிதனோ, இப்படிக்குள்ள சக்திகளை கொஞ்சமேனும் கவனியாது தன்னுடைய முயற்சியினால் அதை வசமாக்கிக் கொள்ள வழிதெரியாததே ஒரு பெருங்குற்றமாகும்.

2. மனிதனுக்கு இயல்பிலே இருக்கும் பூர்ண சக்தி, மாயையினால் மறைக்கப்பட்டு, சரியான பாதையிற்செல்ல ஒட்டமால், தடுக்கும். அப்படி தடுக்காதபடி செய்து விட்டால், இயற்கை சக்தியானது தனது பூர்ண வலிவைக் காட்டும்.

3. நமது உடலில் உள்ள உயிர் இருக்கவும், நிலைபெறவும் காரணமாகவுள்ள ஆத்மாவிற்கு, இது விஷயமாக அனேக ஆதரவுகளுண்டு, அவைகளாவன - பஞ்ச பூதங்கள், ஆறாதார நிலைகள், மூன்று நாடிகள், முக்குணங்கள் இவை முதலான 96 தத்துவங்கள்.





## சித்த மருத்துவ சிகிச்சை வகைகள்

**1. தெய்வ சிகிச்சை:-**

இது பூர்வ கருமானு சாரத்தையே காரணமாகக் கொண்டு இரச, கந்த, பாஷாணத்தைக் கொண்டு செய்யும் வைத்தியம்.

**2. மாந்திரீக சிகிச்சை-**

மந்திரம், ஜபம், பூசை, விரதம், தான தருமம் இவைகளை அனுசரித்து செய்யும் வைத்தியம்.

**3. திரிதோஷ சிகிச்சை:-**

இது வாத பித்த சிலேட்டுமத்தை அனுசரித்து செய்யும் வைத்தியம். இதுவே வைத்தியர்கள் சாதாரணமாக கையாளப்பட்ட முறை.

**4. மானத சிகிச்சை:-**

மனோ சக்தியினாலும் திடத்தினாலும் எண்ணிச் செய்யும் சிகிச்சைக் கருமம்.

**5. தோஷ நிவர்த்தி :-**

இது வேர் பிடுங்கல், களிப்பெடுத்தல், சூனியம் நீக்கல், தாயித்து கட்டல் முதலிய கருமங்களை முடித்து நோய்களை குணப்படுத்தல்.

**6. ராட்சஷ சிகிச்சை:-**

கத்தி, கத்திரி, குறடு முதலிய கருவிகளைக் கொண்டு சதையை அறுத்து செய்யும் வைத்தியம். (அறுவை சிகிச்சை முறை)

**7. மருந்து சிகிச்சை-**

மருந்தையே முதன்மையாகக் கொண்டு செய்யும் வைத்தியம். சாதாரணமாக நோயின்தன்மையையும், ஏற்பட்டிருக்கும் கோளாறுகளையும், மாறுபாடுகளையும் அனுசரித்து செய்யப்படும் மருத்துவம் ஆகும்.

**8. தடை சிகிச்சை:-**

நோயணுகா சிகிச்சை அதாவது பெருவாரி சுரம், அம்மை,

வாந்தி பேதி, முதலிய தொத்து நோய்கள் அணுகா வண்ணம் அவைகளைத் தடுப்பதற்காக செய்யும் வைத்தியம்.

***9. சுத்த சிகிச்சை:-***

தன்னுடம்பில் பிறவிநோய் அல்லது மற்றுமுள்ள மேக நோய், கிரந்தி முதலியவற்றின் தோஷங்கள், தன் பெண்சாதி, பிள்ளைகளை, தாக்காதபடி முன்னதாகவே சுத்தி செய்துக் கொள்ள வேண்டிச் செய்யும் வைத்தியம். இது மாதா பிதா நாதவிந்து சுத்திக்காகவும், கர்ப்பிணிகள் கருப்பையின் சிசுவைக் கருதியும் செய்துக் கொள்வார்கள்.

***10. பத்திய சிகிச்சை:-***

பொதுவாக நோய்ப்பட்ட காலத்திலும், குன்மம், நீரிழிவு, அசீரணம், கழிச்சல் முதலிய நோய்களால் பீடிக்கப்பட்ட காலத்திலும், சில பொழுதாவது, சில நாட்களாவது முழுவதுமே உண்ணாமலிருக்கும் படியும், அல்லது இன்னதுதான் சாப்பிடுவது என்றும் நிர்ணயித்து செய்யும் சிகிச்சை.

***11. ஒப்புறை சிகிச்சை:-***

குணத்தில் நோய்க்கு ஒத்த மருந்தின் சிகிச்சை, அதாவது எம்மருந்தினால் உடம்பில் ஒரு நோய் உண்டாகுமோ அம்மருந்தே அந்நோயைப் போக்கும் என்கிற கொள்கை. (ஹோமியோபதி மருத்துவ முறை)

***12. சுகாதார சிகிச்சை:-***

உடம்பை நோய்வாய்ப்படாமல் சௌக்கியமாய் இருக்க என்ன வழிகளோ, அதன் முறையாகச் செய்யும் வைத்தியம், அதாவது உடம்பும், மனமும் தொழிலற்று நிச்சிந்தையாய் இருத்தல், மிதமாய் உண்ணல், இடம்மாறுதல், சீதோஷ்ண நிலையை அனுசரித்தல், யாத்திரை செய்தல் முதலிய விஷயங்களையும் அனுசரித்து செய்யும் வைத்தியம்.

***13. நோய் பரிமாண சிகிச்சை:-***

இதில் நாடியைப் பரிசோதித்து நோயின் தன்மையையும், ஏற்பட்டிருக்கும் கோளாறுகளையும் அனுசரித்து இன்னமருந்துதான் ஏற்றது என்று தீர்மானித்து, அதற்குண்டான அளவு, பத்திய விதி விலக்கு





முதலியவைகளில் யாதொரு பிசகும் ஏற்படாதபடி நூல் முறைப்படி செய்யும் வைத்தியம்.

***14. உபசாந்தி சிகிச்சை:-***

சில நோய்களை குணப்படுத்த வேண்டி மருந்துகளை கொடுக்காமல் அப்போதிருக்கும் வருத்தத்தையும், வலியையும் மாத்திரம் நீக்க வேண்டிய உபசாரமாய்ச் செய்யும் வைத்தியம்.

***15. தைல சிகிச்சை:-***

மருந்து தைலங்களை உடம்பில் பல இடங்களில் ஊற்றி, சதை பாகங்களில் கைகளால் உறுதிப்படத் தேய்த்தும், அமுக்கியும், கால்களால் மிதித்தும் செய்யும் சிகிச்சை. இது சாதாரணமாய் வாத நோய்களில் செய்யும் வைத்தியம்.

***16. வேது சிகிச்சை அல்லது வேது பிடித்தல் :-***

உடம்பில் போர்வையைக் கொண்டு நீராவியின் எதிரில் உட்காரச் செய்து அதனால் உடம்பின் வியர்வை கசியத் செய்தல்.

***17. அட்டை விடு சிகிச்சை :-***

உடம்பினின்று கெட்ட இரத்தத்தை வெளிவாங்கும்படி அட்டையை குடிக்கவிடல்.

***18. இரத்தம் விடு சிகிச்சை :-***

இரத்தக் குறைவான உடம்பில் புதிதாக வேறொருவரின் உடம்பினின்று இரத்தம் வாங்கி விடல்.

***19. எதிருறை சிகிச்சை :-***

நோய்க்கு எதிர் அல்லது விரோதமான மருந்துகளைக் கொடுத்து குணப்படுத்த வேண்டி செய்யும் வைத்தியம், இதுதான் சாதாரணமாக எங்கும் கையாளும் முறையாகும்.

***20. உடன் சிகிச்சை :-***

வாந்தி, பேதி, காயம் முதலிய நோய்கள் வாய்ப்பட்ட பொழுது, கால தாமதமில்லாமல் உடனே செய்யும் வைத்தியம்.





***21. தற்கால சிகிச்சை :-***

நோய்க் குண்டான வைத்தியத்தை செய்யாமல் அதன் போக்காகவே விட்டு விட்டு, அதன் குணம், குறிகளை மாத்திரம் கண்டு அதற்கு தக்கவாறு செய்யும் சிகிச்சை.

***22. பலவிருத்தி சிகிச்சை :-***

இளைத்த உடம்பைத் தேற்றி, பல முண்டாகும்படி, பல விருத்தி மருந்துகளைக் கொண்டு செய்யும் வைத்தியம்.

***23. தாது புஷ்டி சிகிச்சை :-***

நாத விந்துவைப் பலப்படுத்தி, காமவிச்சையை மூட்டுவதற்காக வேண்டி செய்யும் சிகிச்சை, இது யுனானிமுறையில் விசேஷமாய் கையாளப்படும்.

***24. சூதக சிகிச்சை :-***

பெண்களுக்கு மாதவிடாய்த் தவறி அதனால் சூதகச்சிக்கல், சூதகவலி, பெரும்பாடு, தீட்டு நிற்றல் முதலிய கோளாறுகள் ஏற்படுவதை குணப்படுத்த வேண்டி செய்யும் வைத்தியம்.

***25. கருப்பை சிகிச்சை :-***

பெண்களுக்கு கருப்பையில் ஏற்படும் அழற்சி, வலி, நழுகல், வெளிதள்ளல், விரணம், இரத்தத் தேக்கு முதலிய கோளாறுகளை குணப்படுத்த வேண்டி செய்யும் சிகிச்சை.

***26. பிரசவ சிகிச்சை :-***

குழந்தை பெறும் காலத்தில் உண்டாகும் பொய் வலி, மாறுபட்ட பிறவி அதாவது முகம், கை உதயமாகல், நஞ்சுக்கொடி விழாமை, வலிப்பு, மூட்டு கிழிதல், பால் சுரம், அறை வீட்டு சுரம், மூட்டு வீக்கம், கால் வீக்கம், பால் வெறி முதலிய கோளாறுகளுக்கு செய்யும் சிகிச்சை.

***27. பாலர் சிகிச்சை :-***

பிறந்த குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்கள் நீக்கவும் நோய் வராமல் தடுக்கவும் செய்யப்படும் சிகிச்சை.

## கேப்சூல்

சித்த வைத்தியத்தில் கேப்சூல் என்ற முறை இல்லையெனினும் கசப்பான மூலிகைகளையும் பற்பங்களையும் நேரடியாக நாக்கில் படாமல் உபயோகிப்பதற்கும் இன்றைய சூழ்நிலைக்கு ஏற்ப சித்த மருந்துகளை மக்கள் விரும்பி உண்ண வேண்டும் என்ற நோக்குடனும் ட்யூப் மாத்திரைகளின் மீது மக்களுக்கு நோய் நீக்கும் நம்பிக்கை அதிகமாக இருப்பதாலும் தமிழக அரசு சித்த வைத்தியத் துறையை பிரபலப்படுத்தும் நோக்குடன் இது போன்ற கேப்சூல் எனப்படும் ட்யூப்களில் அடைத்து மருந்துகள் தயாரித்து விற்பனை செய்ய அனுமதி வழங்கியுள்ளது.

இதில் உபயோகப்படுத்தும் மருந்துகளான மூலிகைப் பொருட்கள், பற்பங்கள் செந்தூரங்கள் இவைகளை கலந்து கல்வத்தி-லிட்டு இடைவிடாது இவை நுண் துகள்களாக பிரியும் வண்ணம் அரைத்து, அதனுடைய மருத்துவ சக்தியை அதிகரித்து குறைந்த அளவு மருத்திலேயே நோய் தீர்க்கும் சக்தி அதிகமாக இருக்கும்படி தயார் செய்யப்பட்டுள்ளது. அதே சமயம் எந்தவித எதிர்விதமான பக்க விளைவுகளும் உண்டாகாதபடி நோய் நிவர்த்தி செய்வதோடு உடலுக்கு ஆரோக்கியம் அளிக்கும் படியும் மூலிகை பொருட்களை கலந்து மருந்தின் சக்தி எந்த விதத்திலும் குறையாமல் கேப்சூல்களில் அடைக்கப்படுகிறது.

## ஏரோலிவ் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

| | | | |
|---|---|---|---|
| *1.* | அவுரி இலை | - | *150 மி.கி.* |
| *2.* | கீழா நெல்லி | - | *150 மி.கி* |
| *3.* | நிலவேம்பு | - | *100 மி.கி.* |
| *4.* | அதிமதுரம் | - | *100 மி.கி.* |
| *5.* | அன்னபேதி செந்தூரம் | - | *200 மி.கி.* |
| *6.* | மண்டூரச் செந்தூரம் | - | *200 மி.கி.* |
| *7.* | வெள்ளி பற்பம் | - | *200 மி.கி.* |





***தயாரிக்கும் முறை :***

1-4 வரையுள்ள மூலிகைகளை தூய்மை செய்து உலர்த்தி பொடித்து சலித்து அத்துடன் 5-7 வரையுள்ளவற்றை கலந்து இடைவிடாது அரைத்து 500 மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி வைக்கவும். இவற்றை தூய்மையான காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

***அளவு :*** 1 முதல் 2 கேப்சூல் வீதம் தினமும் 3 வேளை மற்றும் எல்லா வியாதிக்கும் துணை மருந்தாகவும் உபயோகிக்கலாம்.

**தீரும் வியாதிகள் :**

மஞ்சட் காமாலை, பாண்டு, சோகை, அஜீரணக் கோளாறு, வாய்வு, கல்லீரல் நோய்கள் முதலியவற்றைப் போக்கும்.

## ஏரோசைம் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

| | | | |
|---|---|---|---|
| *1.* | கடுக்காய் தோல் | - | *60 மி.கி.* |
| *2.* | இந்துப்பு | - | *40 மி.கி.* |
| *3.* | ஓமம் | - | *40 மி.கி.* |
| *4.* | பூநீறு | - | *40 மி.கி.* |
| *5.* | இஞ்சி | - | *40 மி.கி.* |
| *6.* | எலுமிச்சை | - | *30 மி.கி.* |
| *7.* | கண்ணாடி உப்பு | - | *30 மி.கி.* |
| *8.* | சோற்றுப்பு | - | *30 மி.கி.* |
| *9.* | பொரித்த வெண்காரம் | - | *30 மி.கி.* |
| *10.* | திரிகடுகு | - | *30 மி.கி.* |
| *11.* | கோஷ்டம் | - | *30 மி.கி.* |
| *12.* | பெருங்காயம் | - | *30 மி.கி* |
| *13.* | பூண்டு | - | *30 மி.கி.* |
| *14.* | கரி உப்பு | - | *30 மி.கி.* |





***தயாரிக்கும் முறை :***

1-4 வரையுள்ள சரக்குகளை உலர்த்திப் பொடித்து நன்கு அரைத்து கலந்து 500 மி.கி வீதம் கேப்சூல்களில் அடைத்து காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

***அளவு :*** 1 முதல் 2 கேப்சூல் வீதம் தினம் 3 வேளைகள்.

**தீரும் வியாதிகள் :**

அஜீரணம், புளித்த ஏப்பம், பசியின்மை, அமிலத்தன்மை, ருசியின்மை, நெஞ்சு எரிச்சல் ஆகியவற்றைப் போக்குகிறது.

## ஏரோ மெஸ்ஸின் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

| | | | |
|---|---|---|---|
| *1.* | அசோகப்பட்டை | - | *200 மி.கி.* |
| *2.* | மூசாம்பரம் | - | *400 மி.கி.* |
| *3.* | பப்பாளிப் பால் | - | *100 மி.கி.* |
| *4.* | பெருங்காயம் | - | *100 மி.கி.* |
| *5.* | பருத்திவேர் | - | *100 மி.கி.* |
| *6.* | பிரம்மதண்டி | - | *100 மி.கி.* |

***தயாரிக்கும் முறை :***

மேற்கண்ட சரக்குகளை உலர்த்திப் பொடித்து அவற்றினை வஸ்திர காயம் செய்து நன்றாக அரைத்து 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப் புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

***அளவு :*** 2 கேப்சூல்கள் வீதம் தினம் 3 வேளைகள் 3 முதல் 5 நாட்களுக்கு மட்டும்.

***பயன்கள் :***

தாமதித்த மாதவிடாய், சூலைக்கட்டு, கர்ப்பப்பை, அலர்ஜி மற்றும் வலி முதலியவற்றைப் போக்கி மாதவிடாயை ஒழுங்குபடுத்துகிறது.

பத்தியம் : கடுகு, புளி, நல்லெண்ணெய் நீக்கவும். மாதவிடாய் உண்டாகும் வரை அரை வயிறு மட்டும் உண்ண வேண்டும். கர்ப்ப ஸ்திரிகள் இக்கேப்சூலை உபயோகிக்கக் கூடாது.

## ஏ பைலோ ஹெர்ப் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. காட்டுக்கருணை - 60 மி.கி.
2. பிரண்டை - 40 மி.கி.
3. மருள் கிழங்கு - 60 மி.கி.
4. குமரி வேர் - 40 மி.கி.
5. மாம் பருப்பு - 40 மி.கி.
6. கடுக்காய்த் தோல் - 60 மி.கி.
7. சித்திர மூல வேர்ப்பட்டை - 60 மி.கி.
8. கோரைக்கிழங்கு - 60 மி.கி.
9. சரக்கொன்றை புளி - 60 மி.கி.
10. தேத்தான் கொட்டை - 60 மி.கி.
11. திரிகடுகு - 60 மி.கி.
12. திரிபலா - 60 மி.கி.
13. சீரகம் - 20 மி.கி.
14. நத்தைச் சூரி - 40 மி.கி.
15. முத்துச்சிப்பி பற்பம் - 40 மி.கி.
16. சிலாசத்து பற்பம் - 40 மி.கி.
17. வெள்ளி பற்பம் - 20 மி.கி.
18. துத்தி - 180 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

1-18 எண் வரையுள்ள சரக்குகளை உலர்த்திப் பொடித்து சலித்து வைக்கவும். இத்துடன் நத்தை பற்பம், முத்துச் சிப்பி பற்பம், சிலாசத்து பற்பம், வெள்ளி பற்பம் இவற்றினை கலந்து நன்றாக அரைத்து 50 மி.கி. வீதம் கேப்சூல்களில் நிரப்பி பயன்படுத்தவும்.





**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினமும் 2 வேளைகள்

**பயன்கள் :**

மூலம், பவுத்திரம், ரத்த மூலம், ஆசனவாய் எரிச்சல், அரிப்பு, மலச்சிக்கல் முதலிய நோய்களுக்கு ஏற்றது.

## ஏரோஸ்கின் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சுத்தி செய்த கந்தகம் - 100 மி.கி.
2. பரங்கிப்பட்டை - 100 மி.கி.
3. அமுக்கரா - 100 மி.கி.
4. தண்ணீர் விட்டான் கிழங்கு - 100 மி.கி.
5. நன்னாரி - 100 மி.கி.
6. வல்லாரை - 100 மி.கி.
7. ஓமம் - 100 மி.கி.
8. சித்திர மூலப்பட்டை - 100 மி.கி.
9. திரிபலா சூர்ணம் - 100 மி.கி.
10. திரிகடுகு சூர்ணம் - 100 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

1-8 எண் வரையுள்ள சரக்குகளை உலர்த்திப் பொடித்து அத்துடன் திரிகடுகு மற்றும் திரிபலா சூர்ணம் கலந்து நன்றாக அரைத்து 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் நிரப்பி, காற்றுபுகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினமும் 2 வேளைகள்.

**பயன்கள் :**

வெடி சூலை, மேகசூலை, இடிசூலை, தொழுநோய், விஷநீர், சிலந்தி, சிரங்கு, புழுவெட்டு, தடிப்பு, மூலம், பவுத்திரம், மேகம் ஆகியவற்றைப் போக்கி ரத்த சுத்திகரிப்புக்கு சிறந்தது.





## அருகன்புல் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. அருகன்புல் - 500 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

அருகன் புல்லை சேகரித்து தூய்மை செய்து, உலர்த்தி அரைத்து, பொடித்து, சலித்து 500 மி.கி. வீதம் கேப்சூலில் அடைத்து காற்றுப் புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினமும் 2 வேளைகள்.

**பயன்கள் :**

எல்லாவிதமான தோல் நோய்கள் மற்றும் நோய் எதிர்ப்பு சக்தி கொடுத்து உடம்பை பலப்படுத்துகிறது.

## பெப்சோனில் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சிவப்பு துத்தி - 81.6 மி.கி.
2. வில்வபழம் - 102.6 மி.கி.
3. வாய் விடாங்கம் - 61.2 மி.கி.
4. நாவல்கொட்டை - 102 மி.கி.
5. சிறு குறிஞ்சான் - 122.4 மி.கி.
6. கடுக்காய் - 81.6 மி.கி.
7. கோவை இலை - 122.4 மி.கி.
8. பாகற்காய் - 122.4 மி.கி.
9. சீந்தில் கொடி - 122.4 மி.கி.
10. மஞ்சள் - 81.6 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

வில்வ பழத்தின் தோடு நீக்கி உள் இருக்கும் சதையை உலர்த்தி பயன்படுத்தவும். மேற்கண்ட மற்ற மூலிகைகளை உலர்த்தி பக்குவப்-படுத்தி பொடி செய்து சலித்து இடைவிடாது கவ்வத்தில் நன்றாக அரைத்து 500 மி.கி. கேப்சூல்களில் நிரப்பி பயன்படுத்தவும்.





**அளவு :** காலை வெறும் வயிற்றில் 2 கேப்சூல் மாலை 2 கேப்சூல் தண்ணீர் அதிகமாக அருந்தவும். நடைப்பயணம் செய்வது நல்லது.

**தீரும் நோய்கள் :**

மதுமேகம், நீரிழவு, அதிக பசி, சோர்வு, அசதி, தாக வறட்சி, கைகால் எரிச்சல், அதி மூத்திரம் போன்ற மேக ரோகங்களுக்கு சிறந்த மூலிகை மருந்து மேலும் சர்க்கரை நோய்க்கான சிறந்த நிவாரணி.

## சந்தனாதி கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சந்தனத் தூள் - 200 மி.கி.
2. அதிமதுரம் - 100 மி.கி.
3. கோந்து - 100 மி.கி.
4. வால்மிளகு - 100 மி.கி.
5. பூணைக் கண் குங்கிலியம் - 60 மி.கி.
6. வெடியுப்பு - 60 மி.கி.
7. வெள்ளை குங்கிலியம் - 60 மி.கி.
8. சிலாசத்து பற்பம் - 200 மி.கி.
9. ரோஜாப்பூ - 100 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

1-4 வரையுள்ள மற்றும் 6,9 சரக்குகளை உலர்த்தி பொடித்து சலித்து அத்துடன் பூணைக்கண் குங்கிலியம், வெள்ளை குங்கிலியம், சிலாசத்து பற்பம் போன்றவற்றை கலந்து இடைவிடாது அரைத்து 500 மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப் புகாத இடங்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1-2 கேப்சூல்கள் வீதம் தினமும் 3 வேளைகள் மற்றும் எல்லா வியாதிகளுக்கும் துணை மருந்தாகவும் உபயோகிக்கலாம்.

**தீரும் நோய்கள் :** மேக வெட்டை, நீர்க்கடுப்பு, சிறுநீரக கற்கள், வயிற்று எரிச்சல், பயணச்சூடு, வாய்த் துர்நாற்றம், அஜீரணம், அதிக உஷ்ணம் ஆகியவற்றை போக்கச் சிறந்தது.

## டயாடினில் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சுண்டவற்றல் - 80 மி.கி.
2. கருவேப்பிலை - 80 மி.கி.
3. ஓமம் - 80 மி.கி.
4. மாம்பருப்பு - 80 மி.கி.
5. நெல்லி வற்றல் - 80 மி.கி.
6. மாதுளம் பிஞ்சுத்தோல் - 80 மி.கி.
7. வெந்தயம் - 80 மி.கி.
8. வெட்பாலையரிசி - 80 மி.கி.
9. வில்வபழம் - 80 மி.கி.
10. கடுக்காய் - 80 மி.கி.
11. ஆலம்பட்டை - 80 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட மூலிகைகளை நிரலில் உலர்த்தி பொடித்து சலித்து சுமார் 500 மி.கி வீதம் ஒவ்வொரு கேப்சூல்களிலும் நிரப்பவும்.

**அளவு :** 1-2 கேப்சூல்கள் வீதம் 3 முதல் 4 வேளைகள் தண்ணீரில் அருந்தவும்.

**தீரும் நோய்கள் :**

அமீபியாஸிஸ், வயிற்றுப்போக்கு, ரத்த சீதபேதி, கடுப்புக் கழிச்சல் (சீதபேதி) முதலியவை.

## ஹெர்போ பீவரெக்ஸ் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. லிங்க செந்தூரம் - 62.5 மி.கி.
2. அன்னபேதி செந்தூரம் - 75.0 மி.கி.
3. படிகார செந்தூரம் - 75.0 மி.கி.
4. நிலவேம்பு - 100.0 மி.கி.





5. பற்படாகம் - 100.0 மி.கி.
6. கோரை கிழங்கு - 50.0 மி.கி.
7. அமுக்கரா - 750.0 மி.கி.
8. அகில் - 50.0 மி.கி.
9. சுக்கு - 12.0 மி.கி.
10. மிளகு - 12.0 மி.கி.
11. திப்பிலி - 37.5 மி.கி.
12. கடுக்காய் - 50.0 மி.கி.
13. நெல்லிக்காய் - 100.0 மி.கி.
14. தான்றிக்காய் - 100.0 மி.கி.
15. கஸ்தூரி மஞ்சள் - 125.0 மி.கி.

**தயாரிக்கும் விதம் :**

மேற்கண்ட மூலிகைகளை சுத்தம் செய்து நிழலில் உலர்த்தி பொடித்து சலித்து மேற்படி பற்பம் மற்றும் செந்தூரங்களை கலந்து இடைவிடாது நன்றாக கல்வத்தில் அரைத்து 500 மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத குப்பிகளில் பத்திரப்படுத்தவும்.

**உபயோகிக்கும் அளவு :**

1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் இருவேளை வெந்நீரில் சாப்பிடவும். மற்றும் சிறு குழந்தைகளுக்கு கேப்சூல் உள்ளிருக்கும் பவுடரை இருவேளை வெந்நீரில் கரைத்து கொடுக்கவும்.

**பயன்கள் :**

காய்ச்சல், உடம்பு வலி மற்றும் வாத, பித்த, கப சுரங்களுக்கு ஏற்றது.

## ஹெர்பாஸ்மா கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. கண்டங்கத்திரி - 150 மி.கி.
2. துளசி - 150 மி.கி.
3. எருக்கன் செடி - 150 மி.கி.
4. திப்பிலி - 60 மி.கி.





5. ஆடாதோடை - 220 மி.கி.
6. அவுரி இலை - 70 மி.கி.
7. தும்பை - 100 மி.கி.
8. துளசி - 60 மி.கி.
9. அதிமதுரம் - 140 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட மூலிகைகளை தூய்மை செய்து உலர்த்தி பொடித்து, சலித்து, அரைத்து 500 மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 2 முதல் 3 வேளைகள் வெந்நீரில் சாப்பிடவும்.

**தீரும் நோய்கள் :**

தும்மல், இருமல், ஈளை, நுரையீரல், அலர்ஜி, பிராங்கைடீஸ், இளைப்பு, ஆஸ்துமா.

## ஹெர்பார்சுனா கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. மருதம்பட்டை - 200 மி.கி.
2. கஸ்தூரி - 20 மி.கி.
3. சிருங்கி பற்பம் - 150 மி.கி.
4. அமுக்கரா - 330 மி.கி.
5. தாமரைப்பூ - 150 மி.கி.
6. செம்பருத்திப் பூ - 150 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

சிருங்கி பற்பம் தவிர மற்ற சரக்குகளை சேகரித்து உலர்த்தி பொடித்து, சலித்து அவற்றுடன் சிருங்கி பற்பம் கலந்து 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் நிரப்பி, காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.





**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 3 வேளைகள்.

**தீரும் நோய்கள் :**

இருதய படபடப்பு, அதிக வியர்வையுடன் மூச்சுத் திணறல் ஆகியவை.

## ஹெர்ப்பியூடரின் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. அசோகப்பட்டை - 100 மி.கி.
2. துளசி - 100 மி.கி.
3. சந்தனம் - 100 மி.கி.
4. அரசம்பட்டை - 100 மி.கி.
5. அதிமதுரம் - 100 மி.கி.
6. மருதோன்றி இலை - 100 மி.கி.
7. மிளகு - 100 மி.கி.
8. பிரம்ம தண்டி - 100 மி.கி.
9. வெண்மருது - 50 மி.கி.
10. அமுக்கரா - 50 மி.கி.
11. குங்கிலிய பற்பம் - 50 மி.கி.
12. சிலாசத்து பற்பம் - 50 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

1-10 வரையுள்ள சரக்குகளை சுத்தம் செய்து உலர்த்தி, பொடித்து, சலித்து இத்துடன் குங்கிலிய பற்பம் மற்றும் சிலாசத்து பற்பம் கலந்து 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் அடைத்து காற்றுப் புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 3 வேளைகள்.

**தீரும் நோய்கள் :** பெண்களுக்கு ஏற்படும் வெள்ளை, வெட்டை, மாதவிடாய் கோளாறு, கர்ப்பாசய கோளாறு, இடுப்பு வலி, பலஹீனம், சோகை மற்றும் வலியுள்ள மாதவிடாய் குணமாகும். பெண்களுக்கு சிறந்த டானிக்.

## ஹெர்போ ஒபிசிடி கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. அன்னபேதி செந்தூரம் - 100 மி.கி.
2. ஆறுமுக செந்தூரம் - 100 மி.கி.
3. அயகாந்த செந்தூரம் - 100 மி.கி.
4. அயபிருங்கராஜ கற்பம் - 100 மி.கி.
5. சுயமாக்கினிச் செந்தூரம் - 100 மி.கி.
6. அவுரி - 100 மி.கி.
7. துளசி - 100 மி.கி.
8. வெடியுப்புப் சுண்ணம் - 100 மி.கி.
9. நெருஞ்சில் - 100 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

அவுரி, வெள்ளரி, துளசி, நெருஞ்சில் இவற்றை உலர்த்திப் பொடித்து இத்துடன் மேற்கண்ட செந்தூரம், கற்பம் மற்றும் சுண்ணம் வகையுடன் கலந்து நன்றாக அரைத்து ஒரு கேப்சூல்களில் 500 மி.கி. வீதம் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் நிரப்பி பயன்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 2 வேளைகள்.

**தீரும் நோய்கள் :**

உடல் பருமனை குறைத்து தேவையற்ற சதையையும் கொழுப்பையும் கரைத்து, சீரான எடையும் சுறுசுறுப்பும் அளிக்க வல்லது.

## ஹெர்போ செர்பின் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சர்பகந்தா - 100 மி.கி.
2. நிலவேம்பு - 100 மி.கி.
3. வெட்டி வேர் - 100 மி.கி.
4. எலுமிச்சம் வேர் - 100 மி.கி.
5. சந்தனத் தூள் - 100 மி.கி.





6. பேய்ப்புடல் - 100 மி.கி.
7. கோரைக்கிழங்கு - 100 மி.கி.
8. சுக்கு - 100 மி.கி.
9. மிளகு - 100 மி.கி.
10. அமுக்கரா - 100 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட மூலிகைகளை சேகரித்து சுத்தம் செய்து உலர்த்தி பொடித்து சலித்து நன்றாக அரைத்து 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் அடைத்து காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 3 வேளைகள்.

**தீரும் நோய்கள் :**

நரம்பு, படபடப்பு, அதிக வியர்வை மற்றும் இரத்த அழுத்தத்தை சமன் செய்கிறது.

## ருமாட்டிகோ கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சிற்றாமுட்டி - 100 மி.கி.
2. அமுக்கரா - 200 மி.கி.
3. கொடிவேலி - 150 மி.கி.
4. திரிகடுகு - 100 மி.கி.
5. நொச்சி - 400 மி.கி.
6. காந்த செந்தூரம் - 50 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

1-5 வரையுள்ள மூலிகைகளை நிழலில் உலர்த்தி பொடித்து, சலித்து இத்துடன் காந்த செந்தூரம் சேர்த்து இடைவிடாது நன்றாக கல்வத்தில் அரைத்து 500 மி.கி. வீதம் ஒவ்வொரு கேப்சூல்களிலும் நிரப்பி பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 2 முதல் 3 வேளைகள் வெந்நீரில் சாப்பிடவும்.





**தீரும் நோய்கள் :**

எல்லாவகையான வாத ரோகங்கள், மூட்டு வலி, வீக்கம், இடுப்புவலி, நரம்பு வலி, தசை வலி எல்லா வகையான நீர்க்கட்டுகள்.

## ரசகெந்தி மெழுகு கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. சுக்கு - 10 மி.கி.
2. ஓமம் - 10 மி.கி.
3. மஞ்சள் - 10 மி.கி.
4. வாய்விடங்கம் - 10 மி.கி.
5. வசம்பு - 10 மி.கி.
6. இலவங்கம் - 10 மி.கி.
7. பறங்கிப்பட்டை - 10 மி.கி.
8. கடுக்காய் தோல் - 10 மி.கி.
9. கருஞ்சீரகம் - 10 மி.கி.
10. காட்டு சீரகம் - 10 மி.கி.
11. சிறுதேக்கு - 10 மி.கி.
12. தாளிசபத்திரி - 10 மி.கி.
13. திராட்சை - 10 மி.கி.
14. திப்பிலி - 10 மி.கி.
15. அரத்தை - 10 மி.கி.
16. கோஷ்டம் - 10 மி.கி.
17. வாலுளுவை அரிசி - 10 மி.கி.
18. சோம்பு - 10 மி.கி.
19. ஏலம் - 10 மி.கி.
20. ஜாதிக்காய் - 10 மி.கி.
21. மிளகு - 10 மி.கி.
22. சீரகம் - 10 மி.கி.
23. கார்போக அரிசி - 10 மி.கி.





24. திப்பிலிக் கட்டை - 10 மி.கி.
25. மாசிக்காய் - 10 மி.கி.
26. தேற்றான் விதை - 10 மி.கி.
27. நீர் முள்ளி விதை - 10 மி.கி.
28. எள்ளு - 10 மி.கி.
29. சங்கன் வேர் - 10 மி.கி.
30. அமுக்கரா வேர் - 10 மி.கி.
31. ஆகாயகருடன் கிழங்கு - 10 மி.கி.
32. சித்திர மூல வேர்பட்டை - 10 மி.கி.
33. இரசம் (சுத்தி செய்தது) - 10 மி.கி.
34. சுத்தி செய்த கந்தகம் - 10 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

இரசத்தையும், கந்தகத்தையும் கருப்பு நிறம் வரும் வரை நன்றாக அரைக்கவும். மற்ற சரக்குகளை இடித்துச் சலித்து வைக்கவும். சூரணத்தையும் பொடித்த சரக்குகளையும் ஒன்று சேர்த்து ஒரு மணி நேரம் நன்கு இடித்து உலர்த்தி பின் 500 மி.கி. வீதம் கேப்ஸ்யூல்களில் நிரப்பி பத்திரப்படுத்தவும்.

**தீரும் வியாதிகள் :** எல்லா விதமான தோல் வியாதிகள், ஆரம்ப குஷ்டம், ஆரம்ப புற்றுநோய்.

**அளவு :**

1 முதல் 2 கேப்சூல்கள் தினமும் 2 முதல் மூன்று வேளைகள் பால் அல்லது மோருடன் பருகவும்.

## விட்டோ ஹெர்ப் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. வல்லாரை - 207.5 மி.கி.
2. அதிமதுரம் - 207.5 மி.கி.
3. அன்னபேதி செந்தூரம் - 207.5 மி.கி.
4. இலவங்கம் - 20.7 மி.கி.

5. சிறுநாகப்பூ - 20.7 மி.கி.
6. ஏலம் - 20.7 மி.கி.
7. மிளகு - 20.7 மி.கி.
8. திப்பிலி - 20.7 மி.கி.
9. சுக்கு - 20.7 மி.கி.
10. அமுக்கரா - 207.5 மி.கி.
11. ஓரிதழ் தாமரை - 20.7 மி.கி.
12. ஜாதிக்காய் - 20.7 மி.கி.
13. தங்க பற்பம் - 2 மி.கி.
14. பூர்ண சந்திரோதயம் - 2 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

அன்னபேதி செந்தூரம், தங்க பற்பம், பூர்ண சந்திரோதயம் தவிர மற்ற சரக்குளை உலர்த்தி பொடித்து, சலித்து முதலில் குறிப்பிட்டவைகளுடன் கலந்து அரைத்து 500 மி.லி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1 முதல் 2 கேப்சூல் காலை, இரவு பாலில் சாப்பிடவும்.

**தீரும் நோய்கள் :**

தாது நஷ்டம், நரம்புத் தளர்ச்சி, விரைந்து விந்து வெளியேறுதல், ஆண் தன்மை குறைவு, நரம்புக்கு வலுவூட்டி இழந்தசக்தியை மீண்டும் இளமை உணர்வுடன் திகழவும் செய்யும்.

## வல்லாரை கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

வல்லாரை - 500 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

வல்லாரை இலையை சேகரித்து, உலர்த்தி, பதப்படுத்தி, 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப் புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தவும்.





**அளவு :** 1 முதல் 2 கேப்சூல்கள் வீதம் தினம் 2 வேளைகள்.

**தீரும் நோய்கள் :**

ஞாபக மறதி, இரத்த சுத்தமின்மை, மலச்சிக்கல், சோர்வு ஆகியவற்றை போக்கி உற்சாகம் தரும் இனிய மருந்து.

## ஏரோபிம்பிள் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. அதிமதுரம் - 100 மி.கி.
2. அருகம்புல் - 100 மி.கி.
3. சந்தனம் - 100 மி.கி.
4. கீழாநெல்லி - 100 மி.கி.
5. குப்பைமேனி - 50 மி.கி.
6. மிளகு - 50 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட மூலிகைகளை நன்கு நிழலில் காய வைத்து பொடியாக்கி அவற்றை காலி கேப்சூல்களில் 500 மி.கி. வீதம் நிரப்பி பயன்படுத்தவும்.

**அளவு :** 1 - 2 கேப்சூல்கள் பால் அல்லது நீருடன்.

**பயன்கள் :**

முகப்பரு, கரும்புள்ளிகள் இவற்றைப் போக்கி முகத்திற்கு பளபளப்பு உண்டாக்கும்.

## ஏரோலாக்ஸ் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. கடுக்காய் - 150 மி.கி.
2. நிலவாகை - 200 மி.கி.
3. நெல்லி - 150 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட பொருட்களை கல், மண் நீக்கி சுத்தம் செய்து ஈரம் போக நன்கு உலர்ந்த பின் அவற்றை பொடித்து அப்பொடியினை 500





மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தி பயன்படுத்தவும்.

**அளவு :**

1 - 2 கேப்சூல்கள் வீதம் இரவு வெந்நீரில் உட்கொள்ளவும்.

**பயன்கள் :**

மலமிளக்கியாக செயல்படும்.

## ஆல்ககோ கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. கரிசலாங்கண்ணி - 150 மி.கி
2. அவுரி - 50 மி.கி
3. நிலவேம்பு - 50 மி.கி
4. கீழாநெல்லி - 150 மி.கி
5. ஆவாரை - 100 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட பொருட்களை கல், மண் நீக்கி சுத்தம் செய்து ஈரம் போக நன்கு உலர்த்தி பின் அவற்றை பொடித்து அப்பொடியினை 500 மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தி பயன்படுத்தவும்.

**அளவு :** 1 - 2 கேப்சூல்கள் தினமும்.

**பயன்கள் :**

குடிபழக்கத்தினால் உண்டாகும் நச்சுத் தன்மையை குறைக்கும் குடிபழக்கத்திலிருந்து விடுபட பயனுடையதாக இருக்கும்.

## நீம்போர்ட் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

வேப்பிலை - 500 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

வேப்பிலையை கல், மண் நீக்கி சுத்தம் செய்து ஈரம் போக நன்கு





உலர்ந்த பின் அவற்றை பொடித்து அப்பொடியினை 500 மி.கி. வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தி பயன்படுத்தவும்.

**அளவு :** 1 - 2 கேப்சூல்கள் தினம் 3 வேளைகள்.

**தீரும் நோய்கள் :** புழுக்கொல்லியாகவும், இரத்தத்தை சுத்தப்படுத்தவும் பயன்படும்.

## ஏரோபெர் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. ஓரிதழ் தாமரை - 50 மி.கி.
2. கருவேப்பிலை - 200 மி.கி.
3. மஞ்சள் கரிசாலை - 250 மி.கி.

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட பொருட்களை கல், மண் நீக்கி சுத்தம் செய்து ஈரம் போக நன்கு உலர்த்தி பின் அவற்றை பொடித்து அப்பொடியினை 500 மி.கி வீதம் கேப்சூல்களில் நிரப்பி காற்றுப்புகாத டப்பாக்களில் பத்திரப்படுத்தி பயன்படுத்தவும்.

**அளவு :** 2-3 கேப்சூல்கள் வீதம் 2 முதல் 3 வேளைகள்

**பயன்கள் :**

இரத்த சோகை மற்றும் இரும்புச்சத்து குறைவு, குறிப்பாக கர்ப்பிணி பெண்களுக்கு உண்டாகும் இரும்புச் சத்து குறைவினை குணப்படுத்த வல்லது.

## ஏரோ வார்ட் கேப்சூல்

**தேவையான சரக்குகள் :**

1. பிரம்ம தண்டி - 150 மி.கி.
2. மருதோன்றி - 150 மி.கி.
3. சந்தனம் - 150 மி.கி
4. எருக்கு - 150 மி.கி.

**அளவு :**

5 - 10 கிராம் வீதம் தினமும் இரு வேளைகள் 40 நாட்கள் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மேக நோய்கள், மேக நீர், வெள்ளை, தோல் நோய்கள், குஷ்டம், வெண்குஷ்டம் முதலிவற்றிற்கும் பூச்சிக் கடிக்கும் கொடுக்கலாம்.

**பத்தியம் :**

புளி நீக்கவும், சிறு பயிறு, துவரை, தூதுவளை, மணத்தக்காளி, கத்திரி, பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு, கொத்தமல்லிக் கீரை, நெய், மோர், தயிர் இவைகளை உண்ணவும்.

## திப்பிலி இரசாயனம்

**(அகஸ்தியர் பரிபூரணம்)**

**தேவையான பொருட்கள் :**

1. திப்பிலி - 300 கி
2. மிளகு - 150 கி
3. சுக்கு - 150 கி
4. சீரகம் - 30 கி
5. கருஞ்சீரகம் - 30 கி
6. ஓமம் - 30 கி
7. குரோசானி ஓமம் - 30 கி
8. சிற்றரத்தை - 30 கி
9. பேரரத்தை - 30 கி
10. கடுக்காய் - 30 கி
11. நெல்லிக்காய் - 30 கி
12. சதகுப்பை - 30 கி





13. தான்றிக்காய் - 30 கி
14. இலவங்கம் - 30 கி
15. இலவங்கப்பத்திரி - 30 கி
16. தாளீச பத்திரி - 30 கி
17. கொடி வேலி வேர்பட்டை - 30 கி
18. ஏலம் - 30 கி
19. இலங்கப்பட்டை - 30 கி
20. சர்க்கரை - 1050 கி
21. தேன் - 1200 கி

**செய்முறை :**

நெ. 1 முதல் 18 வரை உள்ள சரக்குகளை இளம் வறுப்பாக வறுத்துப் பொடித்து சலித்து வைக்கவும். சர்க்கரையைப் பாகு செய்து எல்லாச் சூரணங்களையும் அதில் கொட்டி கிளறி தேனும் சேர்த்து நன்கு கலந்து வைக்கவும்.

**அளவு :**

3 -6 கிராம் வீதம் தினமும் இரு வேளைகள் 100 மி.கி. தாமிரச் செந்தூரத்துடன் 45 நாட்களுக்குக் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

காசம் (இருமல்) மந்தாரகாசம், சயம், நாட்பட்ட இருமல், இரைப்பிருமல் , கக்கல், இளைப்பு, கப நோய்கள் - 96.

## பறங்கி இரசாயனம்

**(அகஸ்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம் - 360)**

**தேவையான மருந்துகள் :**

1. பரங்கி சக்கை - 300 கி
2. நிலப்பனை கிழங்கு - 150 கி
3. அமுக்கரா கிழங்கு - 300 கி





4. தண்ணீர்விட்டான் கிழங்கு - 60 கி
5. நன்னாரி வேர்ப்பட்டை - 30 கி
6. முட்சங்கன் வேர்ப்பட்டை - 30 கி
7. கடுக்காய் - 30 கி
8. நெல்லிக்காய் - 30 கி
9. தான்றிக்காய் - 30 கி
10. இலவங்கப்பத்திரி - 30 கி
11. சிறுநாகப்பூ - 30 கி
12. வாய்விடங்கம் - 30 கி
13. கொத்தமல்லி விதை - 30 கி
14. சீரகம் - 30 கி
15. கருஞ்சீரகம் - 30 கி
16. ஓமம் - 30 கி
17. குரோசினி ஓமம் - 30 கி
18. சிற்றரத்தை - 30 கி
19. சந்தனம் - 30 கி
20. சிறுதேக்கு - 30 கி
21. கண்டங்கத்திரி - 30 கி
22. சித்திர மூல வேர்பட்டை - 30 கி
23. விளாமிச்சம் வேர் - 30 கி
24. தக்கோலம் - 30 கி
25. வால்மிளகு - 30 கி
26. திராட்சை - 30 கி
27. பேரீச்சை - 30 கி
28. வெட்பாலையரிசி - 30 கி





29. தாமரைக்கிழங்கு - 30 கி
30. ஜாதிக்காய் - 30 கி
31. இலவங்கம் - 30 கி
32. ஜாதிப்பத்திரி - 30 கி
33. கறிவேப்பிலை - 30 கி
34. சுக்கு - 30 கி
35. மிளகு - 30 கி
36. திப்பிலி - 30 கி
37. இலவங்கப்பட்டை - 30 கி
38. பால் - 30 கி
39. சர்க்கரை - 30 கி
40. தேன் - 30 கி
41. நெய் - 600 கி
42. குங்குமப்பூ - 4 கி
43. கோரோசனை - 4 கி
44. பச்சைக் கற்பூரம் - 4 கி

**செய்முறை :**

நெ. 1 முதல் 37 வரை உள்ள சரக்குகளை இளவறுப்பாக வறுத்துப் பொடித்து சலித்து வைக்கவும். பாலையும் சர்க்கரையையும் சேர்த்துக் காய்ச்சி பதத்தில் இறக்க, சூரணத்தைச் சிறிது சிறிதாக சேர்த்து நன்கு கலந்து பின்னர் நெய், தேன் சேர்த்து இத்துடன் கோரேசனை, குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம் ஆகியவற்றையும் பொடித்துக் கலந்து வைக்கவும்.

**அளவு :**

3 -6 கிராம் வீதம் தினமும் இரு வேளைகள் வீதம் நாற்பது நாட்களுக்கு கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மார்பு நோய், மேகப்புண், பறங்கிப்புண், கிரந்தி, சூலை, கண்ட மாலை, லிங்கப்புற்று, யோனிப்புற்று, சர்மரோகம், வெள்ளை, வாயு, வளி நோய், கபநோய் - 96, பிரமியம் என்கிற பிரமேகம் வெட்டை முதலியன.





## தைலம்

மருந்துச் சத்துக்களைக் கொண்டு செறிவூட்டிய எண்ணெய்க்குத் தைலம் என்று பெயர்.

தைலம் என்பது உண்மையில் எள்ளின் நெய்யைக் குறித்தாலும் இங்கு ஆகு பெயரால் எள்ளின் நெய்யால் கிரகித்துக் கொள்ளப்பட்ட மருந்துச் சத்துக்கள் செரிந்த மருந்துக்கு தைலம் எனப்படும்.

இம்முறையில் நோய் தீர்க்கும் மருந்துகளின் சாறுகள் கியாழங்கள், சூரணங்கள், கற்கங்கள், பால் ஆகியன எண்ணெயுடன் குறிப்பிட்ட செய்முறைப்படி சேர்க்கப்பட்டு அடுப்பிலேற்றி எரித்துக் காய்ச்சி வடித்து எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இந்த செய்முறையின் போது மருந்து சரக்குகளின் பிணி நீக்கும் சத்துப் பொருட்கள் எண்ணெய்ப் பொருள்களால் கலந்து கொள்ளப்படுகின்றன.

தைலங்களை தயாரிக்க கற்கம், திரவம், நெய்ப் பொருள் என்ற மூன்றுப் பொருட்கள் தேவைப்படுகின்றன.

**கற்கம் :**

நோய் நீக்கும் மருந்துச் சரக்குகள் நன்கு பொடியாக்கப்பட்டோ அல்லது விழுது போன்று அரைக்கப்பட்டோ இருக்கும் நிலையில் கற்கம் என்று அழைக்கப்படுகின்றன.

**திரவம் :**

கற்கம் நன்கு கரைந்து மருந்தாகவும், நெய்ப் பொருட்களின் மருந்துச் சத்துக்களை கிரகித்துக் கொள்ளும் தன்மை மேம்படவும் சேர்க்கப்படும் சாறு வகைகள், கஷாயங்கள், மாமிச ரசங்கள், நீர், பால், தயிர், மோர் போன்ற நீர்ம ஊடகங்களுக்கு திரவம் என்று பெயர்.

**நெய்ப் பொருட்கள் :**

தைலம் காய்ச்சும் போது மருந்து சரக்குகளில் இருந்து நோய் தீர்க்கும் சத்துப் பொருட்களை கிரகித்து வைத்துக் கொள்வதற்காகச்





சேர்க்கப்படும் பலவிதமான தாவர எண்ணெய்கள், நெய், விலங்கின் கொழுப்புகள் ஆகியவற்றுக்கு நெய்ப்பொருள் என்று பெயர்.

மேற்கூறிய மூன்று பொருட்களையும் ஒன்று சேர்த்து அடுப்பிலேற்றி முறைப்படி காய்ச்சும் போது அவற்றிலுள்ள நீர்ச்சத்து முழுவதும் சுண்டி விடுவதுடன் மருந்துச் சரக்குகளின் பிணி நீக்கும் சத்துக்களும் எண்ணெய்களால் கிரகித்துக் கொள்ளப்படவும் ஏதுவாகிறது. பின்னர் இவற்றை வடிகட்டிப் பயன்படுத்த வேண்டும்.

பொதுவாகத் தைலம் காய்ச்ச நல்லெண்ணையே பயன்படுத்தப்பட்டாலும் தேங்காய் எண்ணெய், விளக்கெண்ணெய், கடுக்கெண்ணெய், வேப்பெண்ணெய் போன்றவைகளும் தேன், மெழுகு, முட்டையின் மஞ்சட்கரு, வாலுளுவையரிசி ஆகியனவற்றிலிருந்து சிதைத்து வடித்தெடுக்கப்படும் எண்ணெய்களும் தைலம் காய்ச்சப் பயன்படுத்தப்படுகின்றன.

**செய்முறை :**

தைலங்கள் செய்யப் பலவிதமான செயல்முறைகள் உள்ளன.

**கொதி நெய் தயாரிக்கும் முறை :**

மருந்துச் சரக்குகளை திரவ பதார்த்தங்களுடன் சேர்த்துக் கொதிக்க வைத்து கொதி நெய் தயாரிக்கப்படுகிறது. பெரும்பாலானத் தைலங்கள் இம்முறைப்படிதான் செய்யப்படுகின்றன.

இம்முறையில் எண்ணெய், கியாழம், பால், சாறு, வகைகள் சூரணித்த சரக்குகள், கற்கம் ஆகியன ஒரு பாத்திரத்திலிடப்பட்டு கொதிக்க வைக்கப்படுகின்றன. நீர்ப்பொருள் மற்றும் வற்றிய நிலையில் உரிய பதத்தில் இறக்கி வடிகட்டி எடுத்துக் கொள்ளப் படுகின்றன.

நன்கு பாகமடைந்த நிலைக்கு அறிகுறியாக அக்கலவைகளில் சிறு மாறுதல்கள் தோன்றுகின்றன. தைலத்தின் மேல் பாகத்தில்





நுரை கிளம்பும் போது கற்கத்தில் சிறிது எடுத்து விரல்களால் உருட்ட அது திரி போன்று ஆவதுடன் விரல்களையும் பற்றாது. மேலும் அந்த கற்கத்தை சிறிதளவு நெருப்பிலிட்டால் சிடு சிடுப்பு போன்ற சப்தம் உண்டாகாமல் தீவிரமாகப் பற்றியெரியும். பொதுவான அறிகுறிகள் இவ்விதமிருப்பின் சில குறிப்பிட்ட மருத்து உபயோகங்களை கருத்தில் கொண்டும் கற்கத்தின் பாகத்திற்கு ஏற்பவும் மிருதுபாகம், மயனபாகம் என்கிற மத்திய பாகம், கரபாகம் என்கிற கரகரப்புப் பாகம் என்ற 3 விதமான பாகங்களில் தைலங்கள் தயாரிக்கப் படுகின்றன.

பொதுவாக மிருது பாகத்தில் தயாரித்த தைலங்களை வாத நோய்களில் உட்கொள்வதற்கும் மயனபாகம் எனும் மத்திய பாகத்தில் தயாரித்த தைலங்களை பித்த நோய்களுக்கான வெளியே உபயோகத்திற்காக கரபாகம் என்கிற கரகரப்புப் பாகத்தில் தயாரித்த தைலம், தலைக்குத் தேய்த்துக் கொள்ளவும், கப நோய்களுக்குப் பயன்படுத்துவதும் நடைமுறையில் உள்ளது. பாகத்தை நிர்ணயித்த கல்கத்தை விரல்களால் அழுத்திப் பார்ப்பது வழக்கம்.

**புடநெய் அல்லது குழிப்புட நெய் தயாரிக்கும் முறை :**

மருந்துச் சரக்குகளை குழிப்புடப் பொறியில் இட்டு புடமிடும் செய்கைக்கு உட்படுத்தி பெறப்படுவது புட நெய் அல்லது குழிப்புட நெய் இம்முறையில் மருந்துச் சரக்குகள் சிதைத்து வடித்தல் என்ற செய்முறைக்கு உட்படுத்தப்படுகின்றன. சில தைல வகைகளை குழித்தைல முறைப்படி தயாரித்துக் கொள்வதே மிகவும் நல்லது என்ற அடிப்படையில் நீண்ட நாட்களாகவே இம்முறை நடைமுறையில் இருந்து வருகிறது. செய்முறையில் கூறப்பட்டுள்ள மருந்துச் சரக்குகளை முதலில் நன்கு பொடித்துக் கொள்ள வேண்டும். ஒரு பெரிய மண்பாணையின் அடிப்பாகத்தில் சிறு சிறு துவாரங்களற் இட்டு அத்துவாரங்களின் வழியே கம்பிகளைப் பொருத்திக் கட்டி அவைகள் குடத்திற்கு வெளியே ஒன்று கூடும்படி அமைத்துக் கொள்ள வேண்டும். பொடித்து வைத்துள்ள மருந்துச் சரக்குகளை மேற்படி மண்குடத்திலிட்டு குடத்தின் அளவுக்கு ஏற்ப வெட்டப் பட்டிருக்கும் ஒரு குழியில் வைத்து குடத்தின் அடிப்புறத்தின் கீழ் மற்றொரு சிறு

மண்பானையும் வைக்க வேண்டும். செய்முறையில் குறிப்பிட்டுள்ள அளவு விரட்டிகளைக் கொண்ட குடத்தின் பக்கங்களையும் மேற்பாகத்தையும் பரப்பி மூடி, நான்கு பக்கங்களிலும் நெருப்பு வைக்கவும். வரட்டிகள் எரிந்து ஆறிய பின்னர் எடுத்துப் பார்க்க அடியிலுள்ள மண்பாண்டத்தில் குழித் தைலம் இறங்கி இருக்கும்.

தைலங்கள் பயன்படுத்தும் முறை :

சில தைல வகைகள் உள்ளுபயோகத்திற்கு மட்டும் கொடுக்கப் படுகின்றன. சில தைலங்கள் வெளிப்புற உபயோகத்திற்கு மட்டுமே கொடுக்கப்படும். சில தைலங்கள், உள்ளுபயோகம், வெளியுபயோகம் என்ற இரண்டுக்குமே பயனாகிறது. தைலங்களை பிடித் தைலமாக பயன்படுத்தும் போது உடலின் மயிர்க் கால்கள் எனப்படும் கேச பூமியில் பக்கமாகவே தடவிப் பிடிக்க வேண்டும். மயிர்க் கால்களுக்கு எதிர்த் திசையில் தடவக் கூடாது. தைலம் தடவிப் பிடித்தவுடன் ஒத்தடம் கொடுப்பது மிகவும் நல்லது.

தூய்மையான ஈரப்பதமற்ற குறுகிய வாயை உடைய கண்ணாடி கொள்கலன்களிலோ அல்லது பாலிதீன் கொள்கலன்களிலோ இவற்றைப் பாதுகாத்து வைக்க வேண்டும். கொள்கலன்களின் மீதே இவற்றைப் பயன்படுத்த வேண்டிய குறிப்புகள் குறிப்பிட வேண்டும். முறைப்படி பாதுகாத்து வந்தால் தைலங்கள் ஓராண்டு வரை தமது நோய் தீர்க்கும் திறனை இழக்காமல் இருக்கும்.

குறிப்பு :

இப்போது சில ஆராய்ச்சியாளர்கள் தைலம் எனப்படும் மருந்து எண்ணெய் உடலில் தேய்க்கும் போது அது தோலில் உள்ள துவாரங்கள் வழியே செல்ல வாய்ப்பில்லை எனவும் தைலம் என்பது நிவாரணம் தரக்கூடிய மருந்து அல்ல எனவும் கூறுகின்றனர். ஆனால் இக்கருத்து உண்மையல்ல. ஏனெனில் மருந்துப் பொருட்களை எண்ணெயில் போட்டு காய்ச்சும் போது மருந்துப் பொருட்களில் உள்ள மிக நுண்ணிய நோய் நீக்கும் மருத்துவ குணம் கொண்ட அணுக்கள் மருந்துப் பொருட்களில் இருந்து எண்ணெயில் கிரகிக்கப்படுகின்றன. ஏனெனில் எல்லா பொருட்களும் மிக நுண்ணிய அணுக்களின் கூட்டமாகும். ஒரு





அணு தமது தோலில் உள்ள துவாரத்தை விட 100 மடங்கு சிறியது. எனவே மருந்தணுக்கள் கிரகிக்கப்பட்ட எண்ணெய் என்று சொல்லப் படுகின்ற தைலங்களை உடலில் தேய்க்கும் போது மருந்து அணுக்கள் தோலில் உள்ள துவாரங்கள் வழியே உட்சென்று நோயை நிவர்த்தி செய்கிறது.

## செம்பருத்தி கூந்தல் தைலம்

***(சித்த வைத்திய அனுபவ முறை)***

**தேவையான பொருட்கள் :**

1. செம்பருத்தி பூ சாறு - 200 மி.லி.
2. அவுரி இலைச்சாறு - 200 மி.லி.
3. துளசிச்சாறு - 100 மி.லி.
4. அருகம்புல்சாறு - 100 மி.லி.
5. மருதாணி இலைச்சாறு - 100 மி.லி.
6. கருவேப்பிலைச்சாறு - 200 மி.லி.
7. அகத்திப் பூ சாறு - 200 மி.லி.
8. வெள்ளை மிளகு - 10 கி
9. அதிமதுரம் - 10 கி
10. தேங்காய் எண்ணெய் - 100 மி.லி.
11. வல்லாரை சாறு - 200 மி.லி.

**தயாரிக்கும் விதம் :**

மேற்கண்ட சாறுகளையும் வெள்ளை மிளகு மற்றும் அதிமதுரம் தூளையும் தேங்காய் எண்ணெயில் இட்டுக் காய்ச்சிப் பதத்தில் வடித்து வைக்கவும்.

**உபயோகம் :**

தினமும் தலைக்கு நன்றாக மயிர்க் கால்களில் படும்படி தேய்த்து வரவும்.





**தீரும் நோய்கள் :**

முடி உதிர்வதை தடுக்கிறது. இளநரையை போக்குகிறது.

## ருமாடிகோ தைலம்

***(சித்த வைத்திய அனுபவ முறை)***

**தேவையான பொருட்கள் :**

1. புங்க எண்ணெய் - 200 மி.லி.
2. வேப்ப எண்ணெய் - 200 மி.லி.
3. இலுப்பை எண்ணெய் - 200 மி.லி.
4. நல்லெண்யெ் - 200 மி.லி.
5. வெள்ளைப்பூண்டு - 100 கி
6. வசம்பு - 100 கி
7. சுக்கு - 100 கி
8. பெருங்காயம் - 100 கி
9. மிளகு - 100 கி
10. திப்பிலி - 100 கி
11. ஓமம் - 100 கி
12. சதகுப்பை - 100 கி
13. கிராம்பு - 100 கி
14. சித்திரமூலம் - 200 கி
15. தழுதாழைச்சாறு - 100 மி.லி.
16. கற்பூரம் - 100 மி.லி.
17. மெந்தால் - 40 மி.கி.
18. தைமால் - 20 மி.கி.
19. நீலகிரித் தைலம் - 100 மி.லி.





**செய்முறை :**

எண்ணெய் மற்றும் சாறுகளைத் தவிர மற்ற சரக்குகளை பொடித்து சலித்து பின் எண்ணெய் மற்றும் சாறுகளுடன் கலந்து காய்ச்சித் பதத்தில் வடித்து வைக்கவும்.

**உபயோகம் :**

வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய்கள் :**

மூட்டு வலி, வீக்கம், நரம்பு வலி, சுளுக்கு, தசை பிடிப்பு மற்றும் வாத வலிகள் போன்றவைகளை நீக்க ஏற்றது.

## அருகன் தைலம்

***(ஆத்மரட்சாமிர்தம்)***

**தேவையான பொருட்கள் :**

1. அருகன் வேர்ச்சாறு - 400 மி.லி.
2. நல்லெண்ணெய் - 1000 மி.லி.
3. கோரைக் கிழங்கு - 35 கி
4. பால் - 400 மி.லி.
5. அமுக்கரா - 35 கி
6. பூமி சர்க்கரை கிழங்கு - 35 கி

**செய்முறை :**

அருகன் வேர்ச்சாறு, கோரைக்கிழங்கு, பால், அமுக்கரா இவற்றை நல்லெண்ணெயில் விட்டு காய்ச்சி பதத்தில் எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

**உபயோகம் :** வெளி உபயோகம்

**தீரும் நோய்கள் :**

எல்லாவிதமான சர்ம வியாதிகள், காயங்கள் மற்றும் விஷக் கடிகள்.

## அரவிந்த் கற்பூர தைலம்

**(சித்த மருத்துவ அனுபவ முறை)**

**தேவையான பொருட்கள் :**

1. தேங்காய் எண்ணெய் - 9.40 மி.லி
2. ஓமம் - 117.2 கி
3. கற்பூரம் - 58.6 கி

**செய்முறை :**

ஓமம் மற்றும் கற்பூரத்தைப் பொடித்து தேங்காய் எண்ணெயில் கலந்து காய்ச்சி பதத்தில் வடித்து எடுக்கவும்.

**உபயோகம் :**

வெளி உபயோகமாகத் தடவி ஒத்தடம் கொடுக்கலாம்.

**தீரும் நோய்கள் :**

மூட்டு வலி, தலைவலி, உடல் வலி, நெஞ்சு வலி, கபசுரம் போன்றவை.

## அரக்குத் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள்**

1. கொம்பரக்கு - 1.12 கி.கி.
2. சந்தனம் - 35 கி
3. கஸ்தூரி மஞ்சள் - 35 கி
4. கோஷ்டம் - 35 கி
5. இலவங்கப்பட்டை - 35 கி
6. இலவங்கப்பத்திரி - 35 கி
7. பச்சிலை - 35 கி
8. அதிமதுரம் - 35 கி





9. சடாமஞ்சில் - 35 கி
10. பூலாங் கிழங்கு - 35 கி
11. கடுகு ரோகிணி - 35 கி
12. ஏலம் - 35 கி
13. சதகுப்பை - 35 கி
14. கிளியூரல்பட்டை - 35 கி
15. பூச்சாந்திரப்பட்டை - 35 கி
16. சீரகம் - 35 கி
17. கருஞ்சீரகம் - 35 கி
18. மெருகன் கிழங்கு - 35 கி
19. பசுவின் பால் - 6.4 லி
20. நல்லெண்ணெய் - 6.4 லி
21. தயிர் தெளிவு - தேவையான அளவு
22. செவ்வல்லி கொடி - 35 கி

**செய்முறை :**

கொம்பரக்கைத் துணியில் முடிந்து கட்டி தண்ணீரில் மூழ்க வைத்து எரித்து சுண்ட வைத்துக் கியாழத்தை வடித்து வைக்கவும். 2-17 வரையுள்ள சரக்குகளை பாலில் அரைத்து நல்லெண்ணெய் மற்றும் தயிர் தெளிவுடன் கலந்து காய்ச்சித் தைல பதத்தில் இறக்கி வடித்து வைக்கவும். முப்பது நாட்கள் வரை நெற்புடத்தில் வைத்தெடுத்து உபயோகிக்கவும்.

**உபயோகிக்கும் முறை :** தலைக்கும், உடலுக்கும் தேய்க்கவும்.

**தீரும் நோய்கள் :**

சுரம், உடல் கடுப்பு, சந்திரா வர்த்தம், சூர்யா வர்த்தம், மண்டை சூலை, இரைப்பிருமல், கற்றாழை நாற்றம், பல்வேர் வீக்கம், குரல் கம்மல், நாட்பட்ட காய்ச்சல் ஆகியன குணமாகும்.





## AVT பால் தைலம்

**(சித்த மருத்துவ அனுபவ முறை)**

**தேவையான பொருட்கள் :**

1. வெட்பாலை இலை - 200 கி
2. வில்வ இலை - 200 கி
3. தேங்காய் எண்ணெய் - 1 லி

**செய்முறை :**

வில்வ இலை மற்றும் வெட்பாலை இலையை தேங்காய் எண்ணெயிலிட்டு சூரிய புடத்தில் வைத்து எடுக்கவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம்.

**தீரும் நோய்கள் :**

எல்லா விதமான தோல் வியாதிகள், அரிப்பு, காளாஞ்சகப்படை முதலியன.

## ஆலம்பால் தைலம்

**(சித்த மருத்துவ அனுபவ முறை)**

**தேவையான பொருட்கள் :**

1. ஆலம்பால் சாறு - 40 மி.லி.
2. நத்தைச்சூரிச்சாறு - 40 மி.லி.
3. குறுந்தொட்டி வேர் - 10 மி.லி.
4. நன்னாரி வேர் - 10 மி.லி.
5. சிவதை வேர் - 10 மி.லி.
6. குங்கிலியம் - 20 மி.லி.
7. நல்லெண்ணெய் - 1 லி





**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை நல்லெண்ணெயில் இட்டுக் காய்ச்சி பதத்தில் இறக்கி வடிகட்டி பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் வியாதிகள் :**

வர்மப் பிடிப்பு மற்றும் எல்லாவித எலும்பு முறிவுகளுக்கும் எலும்புகளின் பலத்திற்கும் சிறந்தது.

## சிரட்டைத் தைலம்

**(சித்தா பால்முலரி ஆப் இந்தியா பாகம் - 1)**

**தேவையானவை :**

1. முற்றியதேங்காய் சிரட்டைகள்
   - தேவையான அளவு

**செய்முறை :**

கீழ்புறம் சிறு துவாரங்களிலிட்டு கம்பிகள் சொருகிய ஒரு பானையில் முக்கால் பாகம் அளவுக்கு முற்றிய தேங்காய் சிரட்டைகளைச் சிறு சிறு துண்டுகளாக உடைத்துப் போட்டு மூடி குழித் தைல விதிப்படி புடமிட்டுத் தைலம் தயாரிக்கவும்.

**உபயோகிக்கும் முறை :**

வெளி உபயோகம் சம அளவு தேங்காய் எண்ணெயுடன் கலந்து பாதிக்கப்பட்ட இடங்களில் மட்டும் உபயோகிக்கலாம்.

மற்ற இடத்தில் பட்டால் எரிச்சலைத் தரும்.

**தீரும் நோய்கள் :**

சொரி, படை, சரும வியாதிகள் குணமாகும்.

## சந்தனாதி தைலம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. விலாமிச்சம் வேர் - 350 கி
2. சந்தனம் - 350 கி
3. ஆவாரம்பட்டை - 350 கி
4. நல்லெண்ணெய் - 800 கி
5. நன்னாரி வேர் - 35 கி

**செய்முறை :**

சந்தனம், விலாமிச்சம் வேர், ஆவாரம்பட்டை முதலியவற்றை இடித்து 1 லி நீரில் போட்டு எட்டிலொன்றாய் வற்ற வைத்து வடித்து அத்துடன் நல்லெண்ணெய் விட்டு அதில் நன்னாரி வேர்ப் பட்டையை அரைத்துப் போட்டு காய்ச்சி வடிக்கவும்.

**உபயோகிக்கும் அளவு :**

வெளி உபயோகத்திற்கும் மட்டும். ஆண்மை குறைவிற்கு ஆண் குறியில் தடவவும்.

**தீரும் வியாதிகள் :**

ஆண்மைக் குறைவு, மலட்டுத் தன்மை, துர்நாற்றம் அதிக வியர்வை, தலைவலி, கண்காந்தல் ஆகியவை நீங்கும்.

## சுக்குத் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையானவை :**

1. சுக்கு - 2.800 கி.கி
2. பசும்பால் - 3 லி
3. நல்லெண்ணெய் - 3 கி.கி.





4. சிற்றரத்தை - 8.75 கி
5. மிளகு - 8.75 கி
6. திப்பிலி - 8.75 கி
7. கோரைக்கிழங்கு - 8.75 கி
8. மஞ்சிட்டி வேர் - 8.75 கி
9. கடுக்காய் - 8.75 கி
10. நெல்லி வற்றல் - 8.75 கி
11. தான்றிக்காய் - 8.75 கி
12. தண்ணீர்விட்டான் கிழங்கு - 8.75 கி
13. அகில் கட்டை - 8.75 கி
14. எருக்கன் வேர்ப்பட்டை - 8.75 கி
15. கடுகுரோகிணி - 8.75 கி
16. கோஷ்டம் - 8.75 கி
17. கொடிவேலி வேர் - 8.75 கி
18. தேவதாரு கட்டை - 8.75 கி
19. சந்தனக்கட்டை - 8.75 கி
20. வெள்ளை குங்கிலியம் - 8.75 கி
21. செவ்வியம் - 8.75 கி
22. ஆமணக்கு வேர் - 8.75 கி
23. வெள்ளை லோத்திரப்பட்டை - 8.75 கி
24. பேரீச்சங்காய் - 8.75 கி
25. உலர் திராட்சை - 8.75 கி
26. இந்துப்பு - 2 கிராம்
27. குங்குமப்பூ - 2 கிராம்
28. கஸ்தூரி - 2 கிராம்
29. சுத்தமான நீர் - 24 லி.





**செய்முறை :**

தோல் நீக்கி சுக்கை தண்ணீரிலிட்டு காய்ச்சி 6 லிட்டராக சுண்ட வைத்து, வடித்து அத்துடன் பசுவின் பால் நல்லெண்ணெய் சேர்த்து இத்துடன் எஞ்சியுள்ள சரக்கினை பொடித்துக் கலந்து, காய்ச்சி பததத்தில் வடிக்கவும்.

வடிகலத்தில் கஸ்தூரி, குங்குமப்பூ, தூள் செய்து கலந்து வைக்கவும். இத்தைலத்தை ஒரு மாதம் வரை நெற்புடத்தில் வைக்கவும்.

**உபயோகிக்கும் முறை :**

வெளி பூச்சு மற்றும் தேய்த்தும் குளிக்கலாம்.

**தீரும் நோய்கள் :**

1. உடம்பில் தேய்க்க ஆமவாதமும் ஆவர்த்த வாதமும் தீரும்.
2. மூக்கில் விட தலை நோயும் பீனிசமும் தீரும்.
3. கொப்பளிக்க பல்லரணை தீரும்.
4. காதிலிட செவிக்குத்தல் தீரும்.
5. தினமும் காலையில் தேய்க்க தலைவலி, தலை நோய்கள் தீரும்.

## சீரகத் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. சீரகம் - 1500 கி
2. நல்லெண்ணெய் - 1.6 லி

**செய்முறை :**

சீரகத்தை இடித்து நீரிற் போட்டு எட்டுக்கு ஒன்றாய் கியாழம் செய்து நல்லெண்ணெயில் சேர்த்து காய்ச்சி வடித்து வைக்கவும்.





**உபயோக முறை :**

வெளி உபயோகத்திற்கு தலைக்குத் தேய்த்துக் குளிக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

பித்த மயக்கம், கண் நோய், வாந்தி, தலை வலி, மாந்தம் தீரும்.

## ஹெர்பிண்ட தைலம்

**(சித்த மருத்துவ அனுபவ முறை)**

**தேவையான பொருட்கள் :**

1. மஞ்சட்டி வேர் - 74.1 கி
2. நன்னாரி வேர் - 74.1 கி
3. சாம்பிராணி - 74.1 கி
4. தேன் மெழுகு - 74.1 கி
5. நல்லெண்ணெய் - 925.90 மி.லி
6. நீர் - 3703.7 மி.லி.

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை நல்லெண்ணெய் மற்றும் நீருடன் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து வைக்கவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் வியாதிகள் :**

அடிபட்ட இரத்தக்கட்டு, அடிபட்ட வீக்கம், நரம்பு வலி, எரிச்சல் முதலியவைகளுக்கு பயன்படுத்தலாம்.

## கையான் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையானவை :**

1. கரிசாலைச் சாறு - 2 லி
2. நல்லெண்ணெய் - 2 லி

**செய்முறை :**

கரிசாலைச்சாறு, நல்லெண்ணெய் இரண்டையும் ஒன்று சேர்த்து காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.

உபயோக முறை :

அரை முதல் 1 தேக்கரண்டி வீதம் உள்ளுக்கு இரு வேளைகள் கொடுக்கலாம். ஸ்நானத்திற்கும் உபயோகிக்கலாம்.

தீரும் வியாதிகள் :

காசம், சுவாசம், சளியுடன் கூடிய இருமல், மூச்சுத் திணறல் ஆகியன குணமாகும்.

## கரப்பான் தைலம்

**(சித்த பார்முலரி ஆப் இந்தியா பாகம் - 1)**

**தேவையான பொருட்கள் :**

1. இரச கற்பூரம் - 4 கி
2. ஏலம் - 4 கி
3. மயில் துத்தம் - 4 கி
4. பால் துத்தம் - 4 கி
5. கற்பூரம் - 4 கி
6. சுத்தி செய்த ரசம் - 4 கி
7. கார்போக அரிசி - 4 கி
8. மிருதார் சிங்கி - 4 கி





9. கஸ்தூரி மஞ்சள் - 4 கி
10. நீரடி முத்துப்பருப்பு - 4 கி
11. காட்டுசீரகம் - 4 கி
12. சுத்தி செய்த கந்தகம் - 4 கி
13. தேங்காய் பால் - தேவையான அளவு

**செய்முறை :**

1 முதல் 12 வரையுள்ள சரக்குகளை நன்கு பொடித்து தேங்காய்ப் பாலில் சேர்த்து காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.

**உபயோகிக்கும் முறை :**

2 - 5 துளிகள் காலையில் மட்டும் பாலுடன் உள்ளுக்குள் கொடுக்கவும். மேலுக்கும் தடவலாம். கரப்பானுள்ள இடத்தில் மூன்று நாட்கள் வரை தைலத்தை தொடர்ந்து கோழியிறகால் தடவி வந்து நான்காம் நாள் உசிலையை அரைத்து தேய்த்து இள வெந்நீரில் குளிக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

கரப்பான், சிரங்கு, சொரி, படை, கொப்பளம் மற்றும் தோல் நோய்கள்.

## காயத்திருமேனித் தைலம்

**(சித்த வைத்திய அனுபவ முறை)**

**தேவையான பொருட்கள் :**

1. குப்பைமேனிச்சாறு - 250 மி.லி.
2. தைவேளைச் சாறு - 250 மி.லி.
3. கரிசாலைச் சாறு - 250 மி.லி.
4. மருள் சாறு - 250 மி.லி.
5. சங்கன்குப்பிச் சாறு - 250 மி.லி.
6. நத்தைச்சூரிச் சாறு - 250 மி.லி.





7. கோவை இலைச் சாறு - 250 மி.லி.
8. கருடக் கொடிச்சாறு - 250 மி.லி.
9. நன்னாசி இலைச்சாறு - 250 மி.லி.
10. குருந்தொட்டி இலைச்சாறு - 250 மி.லி.
11. முடக்கற்றான் சாறு - 250 மி.லி.
12. வெற்றிலைச்சாறு - 250 மி.லி.
13. கருஞ்சீரகம் - 5 கி
14. கார்கோல் - 5 கி
15. துத்தம் - 5 கி
16. பவளப்புற்று - 5 கி
17. கோஷ்டம் - 5 கி
18. சந்தனம் - 5 கி
19. தேசாவரம் - 5 கி
20. துருசு - 5 கி
21. ஜாதிக்காய் - 5 கி
22. சீரகம் - 5 கி
23. வெள்ளை குங்கிலியம் - 5 கி
24. ஜாதிப்பத்திரி - 5 கி
25. நல்லெண்ணெய் - 1 லிட்டர்

**செய்முறை :**

எண் 13 முதல் 24 வரையுள்ள சரக்குகளை பொடித்தும் 1-12 வரையுள்ள சாறுகளையும் நல்லெண்ணையில் கலந்து காய்ச்சவும். துத்தத்தை பொடித்து கலந்து பதத்தில் வடித்து பத்திரப்படுத்தவும்.





**உபயோகிக்கும் முறை :**

வெளி மற்றும் உள் உபயோகம்.

1-2 மி.லி. வீதம் தினம் 2 வேளைகள் மூன்று நாட்கள் பாலில் அருந்தவும்.

3 நாட்களுக்கு பால் சாதம் தேங்காயுடன் மட்டும் உணவு சாப்பிடவும்.

**தீரும் வியாதிகள் :**

அடிபட்டக் காயங்கள், வர்மப் பிடிப்புகள், சுளுக்கு, மண்டையடி தலைவலி முதலியவற்றிற்கு சிறந்தது.

## குறுந்தொட்டி தைலம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. குறுந்தொட்டி வேர் - 250 கி
2. சுக்கு - 35 கி
3. மிளகு - 35 கி
4. ஏலம் - 35 கி
5. நல்லெண்ணெய் - 800 மி.லி.

**செய்முறை :**

குறுந்தொட்டி வேரை இடித்து 1 லிட்டர் நீரில் போட்டு கியாழம் செய்து அதில் சுக்கு, மிளகு, ஏலம் அரைத்துப் போட்டு நல்லெண்ணையுடன் காய்ச்சி வடித்து பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம்.

**தீரும் வியாதிகள் :**

வாத ரோகங்கள், கீழ் வாயு, தோள்பட்டை வலி முதலியன.

## இலகு விஷ முஷ்டி தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. வெள்ளாட்டுப்பால் - *500 மி.லி.*
2. எட்டிக் கொட்டை - *87.5 லி*
3. வெள்ளைப் பூண்டு - *87.5 லி*
4. ஆயில் பட்டை தோல் - *52.5 கி*
5. நல்லெண்ணெய் - *3.2 லிட்டர்*

**செய்முறை :**

வெள்ளாட்டுப் பாலில் எட்டிக் கொட்டையை 28 மணி நேரம் ஊற வைத்தெடுத்து, சீவலாக நறுக்கிக் கொள்ளவும். பின் அத்துடன் உரித்த வெள்ளைப்பூண்டு, ஆயில் பட்டை தோல் இட்டு காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.

**உபயோக முறை :** வெளி உபயோகம்.

**தீரும் நோய்கள் :**

அனைத்து வாத நோய்கள்.

## மத்தான் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. ஊமத்தன் இலைச்சாறு - *3.5 லிட்டர்*
2. தேங்காய் எண்ணெய் - *1.4 லிட்டர்*
3. மயில் துத்தம் - *350 கி*

**செய்முறை :**

ஊமத்தான் இலைச்சாற்றை தேங்காய் எண்ணெயுடன் கலந்து காய்ச்சி சாறு ஓரளவுக்கு சுண்டியபின் துத்தத்தை பொடித்து



சித்தா மருந்துகளின் செய்முறை விளக்கம்

எண்ணெய்யில் சேர்த்துக் காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.

**உபயோகிக்கும் முறை :**

இதனை மேல் பூச்சாக உபயோகிக்கவும். சீழ்வடியும் காதில் போடலாம். துணியில் தடவி புண்ணுக்குப் போடவும்.

**தீரும் நோய்கள் :**

படை, சொறி, சிரங்கு, துஷ்விரணம், ஊன் வளருதல், கசியும் படை, பிளவை, காதில் சீழ் வடிதல், ஒழுகும் விரணங்கள் ஆகியன.

## நொச்சித் தைலம்

**(அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம்)**

**தேவையான பொருட்கள் :**

நொச்சியிலைச் சாறு - *1.4 லி*
நல்லெண்ணெய் - *1.4 லி*
சடாமாஞ்சில் - *8.75 கி*
கல்லுப்பு - *8.75 கி*
வளையலுப்பு - *8.75 கி*
பூநீறு - *8.75 கி*
வெடியுப்பு - *8.75 கி*
அட்டுப்பு - *8.75 கி*
திரிகடுகு - *8.75 கி*
கற்கடகசிங்கி - *8.75 கி*
கோஷ்டம் - *8.75 கி*
சிறுதேக்கு - *8.75 கி*
முப்பலை - *8.75 கி*
கண்டங்கத்திரி - *8.75 கி*



சித்தா மருந்துகளின் செய்முறை விளக்கம்

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை நன்கு பொடி செய்து நொச்சியிலைச் சாற்றில் அரைத்து பின் கரைத்து நல்லெண்ணெயுடன் சேர்த்து அடுப்பிலேற்றி சூடேற்றி மெழுகு பதத்தில் எடுத்துக் கொள்ளவும்.

**அளவு :**

5 - 10 மி.லி. வெந்நீரில் கலந்து தினமும் 1 வேளை உணவிற்கு பின் உட்கொள்ளவும். வாரம் 2 முறை தலையில் தேய்த்து வெந்நீரில் குளிக்க வேண்டும்.

**தீரும் வியாதிகள் :**

சுவாசம் சம்பந்தமான நோய்களான ஆஸ்துமா, ஜலதோஷம், சளி, இருமல், பீனிசம் மற்றும் உடல்வலி, எலும்புருக்கி நோய்கள் நீங்கும்.

## பீனிச தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள்**

நொச்சியிலைச் சாறு - *2.8 லி*
கரிசலாங்கண்ணிச் சாறு - *2.8 லி*
இந்துப்பு - *17.5 கி*
சிற்றரத்தை - *17.5 கி*
திப்பிலி - *17.5 கி*
ஆமணக்கு வேர் - *17.5 கி*
குடசப்பாலை வேர் - *17.5 கி*
கிரந்திதகரம் - *17.5 கி*
சுக்கு - *17.5 கி*
கோஷ்டம் - *17.5 கி*
தேற்றான்கொட்டை - *17.5 கி*



சித்தா மருந்துகளின் செய்முறை விளக்கம்

சதகுப்பை - *17.5 கி*
வாய்விடங்கம் - *17.5 கி*
அதிமதுரம் - *17.5 கி*

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை நன்கு இடித்து தேவையான அளவு வெள்ளாட்டுப் பாலில் அரைத்து மேற்படி சாற்றில் கரைத்து அடுப்பில் ஏற்றி காய்ச்சி, மெழுகு பதத்தில் எடுத்துக் கொள்ளவும்.

**அளவு :**

வெளி உபயோகம். 8 நாட்களுக்கு ஒருமுறை தலையில் தேய்த்து குளிக்கலாம். 4 நாட்களுக்கு ஒருமுறை ஓரிரு துளிகள் மூக்கில் (நசியம் செய்தல்) விடலாம்.

**தீரும் வியாதிகள் :**

மூக்கில் நீர் வடிதல், மூக்கடைப்பு, தலைக்கணம், தலையில் நீரேற்றம், ஜலதோஷம் மற்றும் அனைத்துவித பீனிச நோய்கள்.

## பொன்னாங்கண்ணித் தைலம்

**(அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம்)**

**தேவையானவை :**

1. பொன்னாங்கண்ணிச் சாறு - *2.8 லி*
2. நல்லெண்ணெய் - *2.8 லி*
3. அதிமதுரம் - *70 கி*
4. கரிசாலைச் சமூலச் சாறு - *1.4 லி*
5. நெல்லிக்காய் சாறு - *1.4 லி*
6. ஆவின் பால் - *2.8 லி*

**செய்முறை :**

அதிமதுரத்தை பாலிலரைத்துப் போட்டு அத்துடன் சாறுகள் மற்றும் நல்லெண்ணெய் கலந்து காய்ச்சி பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :** வெளி உபயோகத்திற்கும் மற்றும் தலையில் தேய்த்தும் குளிக்கலாம்.

**தீரும் நோய்கள் :** எல்லாவிதமான கண் நோய்கள், காச நோய், பித்தம், உஷ்ணம் தீரும்.

## புங்க தைலம்

### (தேரையர் தைல வர்க்கம்)

**தேவையானவை :**

1. புங்கன் வேர்பட்டை - 700 கி
2. தேங்காய் பால் - 700 கி
3. தேங்காய் எண்ணெய் - 175 கி
4. இரச கற்பூரம் - 7 கி

**செய்முறை :**

புங்கன் வேர்ப்பட்டை, தேங்காய் பால், தேங்காய் எண்ணெய் போன்ற சரக்குகளை ஒன்று சேர்த்துக் காய்ச்சி பதத்தில் பாத்திரத்தில் சுக்கி செய்த இரக் கற்பூரத்தை போட்டு தைலத்தை ஊற்றி கலந்து வைக்கவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் வியாதிகள் :**

சொறி, சிரங்கு, புண், புரையேறும் விரணம் ஆகியன.

## புழு வெட்டுத் தைலம்

### (ஆத்மரட்சாமிர்தம்)

**தேவையான பொருட்கள் :**

1. அரசம் பட்டை - 6 கி.கி.
2. அத்திப்பட்டை - 6 கி.கி.





3. வெட்டி வேர்ப்பட்டை - 6 கி.கி
4. வெட்பாலை அரிசி - 1.800 கி.கி.
5. வேம்பாடம் பட்டை - 600 கி
6. வேப்ப எண்ணெய் - 30 கி.கி.

**செய்முறை :**

மேற்குறிப்பிட்ட பட்டைகளை இடித்து, பொடித்து அவற்றை வேப்ப எண்ணெயில் சேர்த்து காய்ச்சித் தைலப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம்.

**தீரும் வியாதிகள் :**

புழுவெட்டினால் மயிர் உதிர்ந்து வழுக்கை விழுவதை போக்குகிறது.

## சுகபேதி எண்ணெய்

### (அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம்)

**தேவையான பொருட்கள் :**

1. விளக்கெண்ணெய் - 1.6 லி
2. சோற்றுக் கற்றாழைச் சாறு - 1.6 லி
3. வல்லாரைச் சாறு - 800 மி.லி.
4. களிப்பாக்கு - 70 கி
5. கடுக்காய் - 70 கி
6. கொடிவேலி வேர் - 70 கி
7. கடுகு ரோகிணி - 70 கி
8. மிளகு - 70 கி
9. வெங்காயம் - 70 கி





**செயல்முறை :**

மேற்கண்ட மருந்துச் சரக்குகளைப் பொடித்து விளக்கெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி தைல பதத்தில் இறக்கி வடித்து வைக்கவும்.

**உபயோக முறை :**

குழந்தைகளுக்கு 1.5 மி.லி வரை பெரியவர்களுக்கு 5-10 மி.வி. வெந்நீருடன் உள்ளுக்கு கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

நீர்க்கட்டு, வாயு வீக்கம், மூலச்சூடு, வாயுத் தொல்லை, பொருமல், பித்தம் முதலிய வியாதிகளை போக்கும்.

## உளுந்து தைலம்

### (சித்த வைத்திய திரட்டு)

**தேவையான பொருட்கள் :**

1. உளுந்து - 1.5 கி.கி.
2. தண்ணீர் - 6 லி
3. பூனைக்காலி விதைப்பொடி - 4 கி
4. சதகுப்பை - 4 கி
5. பேரரத்தை - 4 கி
6. சுக்கு - 4 கி
7. மிளகு - 4 கி
8. திப்பிலி - 4 கி
9. வெட்பாலைப்பட்டை - 4 கி
10. இந்துப்பு - 4 கி
11. அதிமதுரம் - 4 கி
12. வசம்பு - 4 கி





13. நல்லெண்ணெய் - 1.5 லிட்டர்
14. பால் - 1 லிட்டர்

**செய்முறை :**

உளுந்தை தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி கியாழமாக சுண்ட வைத்து, வடித்து 3 முதல் 12 வரையில் உள்ள சரக்குகளை பொடித்து வெள்ளாட்டு பாலில் அரைத்து நல்லெண்ணெய் சேர்த்து காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும். இந்த தைலத்தை தானிய புடமாக பத்து நாட்கள் வைத்து எடுக்கவும். (அதாவது தைலத்தை மண்பாத்திரத்தில் ஊற்றி நெல்லி வைக்கவும்)

**உபயோக முறை :**

வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் வியாதிகள் :**

பலவித வாத நோய்கள், நடுக்கம் மற்றும் நரம்பு சம்பந்தமான வியாதிகள் தீரும்.

## வெண் புள்ளித் தைலம்

### (ஆத்மரட்சாமிர்தம்)

**தேவையானவை :**

1. ஆலிவ் எண்ணெய் - 10.333 மி.லி.
2. சிரட்டைத் தைலம் - 20.667 மி.லி.
3. மிளகு - 5.617 கி
4. எலுமிச்சம் சாறு - 20.667 மி.லி.

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை சேர்த்துக் காய்ச்சி தைல பதத்தில் இறக்கி வடித்து வைக்கவும்.

**உபயோக முறை :** பாதித்த இடங்களில் தைலத்தை தேய்த்து விட்டு சூரிய ஒளியில்படும்படி சிறிது நேரம் வைக்கவும்.

**தீரும் நோய்கள் :**

தோலில் ஏற்படும் வெண்புள்ளிகளுக்கும் மற்றும் தோல் நோய்களுக்கும் சிறந்தது.

## வாத கேசரித் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையானவை :**

| | | |
|---|---|---|
| 1. சதுரக் கள்ளிச் சாறு | - | 6 லி |
| 2. நொச்சியிலைச் சாறு | - | 6 லி |
| 3. தழுதாழையிலைச் சாறு | - | 6 லி |
| 4. எருக்கம் பால் | - | 6 லி |
| 5. நல்லெண்ணெய் | - | 6 லி |
| 6. ஆமணக்கெண்ணெய் | - | 6 லி |
| 7. வெள்ளைப்பூண்டு | - | 10 கி |
| 8. பெருங்காயம் | - | 10 கி |
| 9. கந்தகம் | - | 10 கி |
| 10. கோஷ்டம் | - | 10 கி |
| 11. சுக்கு | - | 10 கி |
| 12. மிளகு | - | 10 கி |
| 13. திப்பிலி | - | 10 கி |
| 14. கடுகு | - | 10 கி |
| 15. வெள்ளாட்டுப் பால் | - | 6 லி |

**செய்முறை :**

1 - 6 வரையுள்ள சரக்குகளை கலந்து அத்துடன் 7 - 14 வரையுள்ள சரக்குகளை வெள்ளாட்டுப் பாலில் அரைத்துச் சேர்த்து காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.





**உபயோக முறை :**

வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய்கள் :**

தீராத வாத ரோகங்கள், ஏழு தாதுக்களில் கலந்த திமிர்வாதம், பாரிச வாயு, முடக்கு வாதம், மூட்டு வாதம், சூலைக் கட்டு தசைப் பிடிப்பு மற்றும் ஊமைக் காயகங்கள் ஆகியன தீரும்.

## மேனித் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையானவை :**

| | | |
|---|---|---|
| 1. குப்பை மேனி இலை | - | 100 கி |
| 2. ஆமணக்கு எண்ணெய் | - | 400 கி |

**தயாரிக்கும் விதம் :**

குப்பைமேனி இலையை ஆமணக்கெண்ணையில் சேர்த்து சிறு தீயேற்றி கொதிக்க விட வேண்டும். இலையிலுள்ள நீர் வற்றி இலை முறுகலான நிறத்தில் எண்ணெய் மீத மிதக்கும் வேளையில் இலைகளை அகற்றி அவற்றை கல்வத்திலிட்டு நன்கு பசை போல் அரைத்து ஆமணக்கு எண்ணெயுடன் கலந்து பயன்படுத்தவும்.

**உபயோக முறை :**

5 - 10 மி.லி. உள்ளுக்கு சாப்பிடவும்.

**தீரும் வியாதிகள் :**

குடல் பூச்சிகள் மற்றும் பௌத்திரம்.

## பிருங்காமலத் தைலம்

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. கையாந்தகரை | - | 1.2 கி.கி. |
| 2. நெல்லிக்காய் | - | 1.2 கி.கி. |





| | | |
|---|---|---|
| 3. ஆலம் விழுது | - | 1.2 கி.கி. |
| 4. தழுதாழை | - | 1.2 கி.கி. |
| 5. தண்ணீர் விட்டான் கிழங்கு | - | 1.2 கி.கி. |
| 6. வாழைக்கிழங்கு | - | 1.2 கி.கி. |
| 7. நல்லெண்ணெய் | - | 1.2 கி.கி. |
| 8. பசுவின் பால் | - | 1.2 கி.கி. |
| 9. நெய்தற் கிழங்கு | - | 8.75 கி.கி. |
| 10. அல்லிக்கிழங்கு | - | 8.75 கி.கி. |
| 11. சந்தனத்தூள் | - | 8.75 கி.கி. |
| 12. வெட்டி வேர் | - | 8.75 கி.கி. |
| 13. விலாமிச்சு வேர் | - | 8.75 கி.கி. |
| 14. வசம்பு | - | 8.75 கி.கி. |
| 15. அதிமதுரம் | - | 8.75 கி.கி. |
| 16. முசுமுசுக்கை | - | 8.75 கி.கி. |
| 17. தாமரைப் பூவிதழ் | - | 8.75 கி.கி. |
| 18. தூதுவளை வேர் | - | 8.75 கி.கி. |
| 19. மஞ்சிட்டு வேர் | - | 8.75 கி.கி. |
| 20. கோரைக் கிழங்கு | - | 8.75 கி.கி. |
| 21. சிறு செண்பகபூ | - | 8.75 கி.கி. |
| 22. சடாமஞ்சில் | - | 8.75 கி.கி. |
| 23. தேவதாரு | - | 8.75 கி.கி. |
| 24. நன்னாரி வேர் | - | 8.75 கி.கி. |
| 25. வேங்கைவைரம் | - | 8.75 கி.கி. |
| 26. அமுக்கராக்கிழங்கு | - | 8.75 கி.கி. |
| 27. கோஷ்டம் | - | 8.75 கி.கி. |





| | | |
|---|---|---|
| 28. கற்பூரம் | - | 8.75 கி.கி. |
| 29. பெருங்குரும்பை | - | 8.75 கி.கி. |
| 30. சதகுப்பை | - | 8.75 கி.கி. |

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை பால்விட்டரைத்து கரைத்து நல்லெண்ணெயில் விட்டு காய்ச்சி பக்குவத்தில் வைத்துக் கொண்டு பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம் மட்டும்.

**தீரும் நோய்கள் :**

இதை ஸ்நானம் செய்தாலும் நசியம் பண்ணினாலும் தலை நோய், கண் நோய்கள், செவிடு முதலிய ரோகங்கள் தீரும்.

## துர்வாதி தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. அருகம்புல் | - | 100 கி |
| 2. பால் | - | 200 கி |
| 3. நல்லெண்ணெய் | - | 100 மி.லி. |

**தயாரிக்கும் விதம் :**

அருகம்புல்லின் கிழங்கினது தோலையும் கணுக்களையும் நீக்கி உரலிலிட்டு இடித்து சாற்றினை வடித்து அச்சாற்றுடன் நல்லெண்ணெயும் பசும்பாலையும் விட்டு நன்கு கலந்து அடுப்பிலேற்றி காய்ச்சவும் தைலப்பதம் வந்தவுடன் இறக்கி வைத்து வடித்து பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம் மட்டும்.

**தீரும் நோய்கள் :**

வாதம், மூலச்சூடு, பற்பல மருந்துகளை உண்டதால் உண்டான உஷ்ணம், ஆண்குறி மற்றும் வயிறு எரிவு, துர்வாசனை மிகுந்த புண்கள், பித்த வியாதிகள், சொறிகள், நீர்க்கோவை என்கிற பீனிசம் முதலிய நோய்கள் நீங்கி விடும்.

## கழற்சித் தைலம்

***(தேரையர் தைல வர்க்கம்)***

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. சுழற்சி வேர்ப்பட்டை | - | 700 கி |
| 2. தண்ணீர் | - | 8.4 லி |
| 3. கழற்சி பருப்பு | - | 175 கி |
| 4. சுழற்சி கொழுந்து | - | 70 கி |
| 5. விளக்கெண்ணெய் | - | 1.4 லி |
| 6. ஏலம் | - | 17.5 கி |
| 7. பரங்கிப்பட்டை | - | 17.5 கி |
| 8. வால்மிளகு | - | 17.5 கி |
| 9. சன்ன லவங்கப்பட்டை | - | 17.5 கி |
| 10. நேர்வாளம் | - | 17.5 கி |
| 11. ரசகற்பூரம் | - | 17.5 கி |
| 12. சுத்தமான நீர் | - | 17.5 கி |

**செய்முறை :**

கழற்சிப் பட்டையை இடித்து தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி 1500 லி ஆக சுண்ட வைத்துக் கொண்டு கழற்சி இலை, கழற்சி பருப்பு இவ்விரண்டையும் நன்கரைத்து எல்லாவற்றையும் எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சவும்.

ஏலம், இலவங்கப்பட்டை, பறங்கிப்பட்டை, வால்மிளகு





போன்ற சரக்குகளைப் பொடித்து எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.

வடிகலத்தில் சுத்தி செய்த நேர்வாளம், இரசக் கற்பூரம் இவ்விரண்டையும் அரைத்து நன்கு கலந்து வைக்கவும்.

**உபயோக முறை :**

உள் உபயோகம் மட்டும்.

**அளவு :**

3 - 5 மி.லி. வீதம் சற்று வெதுப்பி காலையில் ஒரு வேளை மட்டும் கொடுக்கலாம்.

நோயின் தன்மைக்கேற்ப 3 முதல் 5 நாட்கள் வரை கொடுக்கலாம்.

**தீரும் நோய்கள் :**

விரைவாயு, விரைவீக்கம், உடம்பு வீக்கம், அடிக்குடலைப் பற்றி வாயு, மலச்சிக்கல் ஆகியன குணமாகும்.

## நாசி ரோக நாசத் தைலம்

***(சித்த பார்முலரி ஆப் இந்தியா பாகம் 1)***

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. நல்லெண்ணெய் | - | 1.4 கி.கி |
| 2. பசும்பால் | - | 1.4 கி.கி |
| 3. இளநீர் | - | 4 கி |
| 4.தாமரை வளையம் | - | 4 கி |
| 5. வெட்டிவேர் | - | 4 கி |
| 6. சந்தனவேர் | - | 4 கி |
| 7. விலாமிச்சம் வேர் | - | 4 கி |
| 8. கஸ்தூரி மஞ்சள் | - | 4 கி |
| 9. தேற்றான் கொட்டை | - | 4 கி |





| | | |
|---|---|---|
| 10. கோரைக் கிழங்கு | - | 4 கி |
| 11. சீரகம் | - | 4 கி |
| 12. ஏலம் | - | 4 கி |
| 13. பூலாங்கிழங்கு | - | 4 கி |
| 14. பச்சிலை | - | 4 கி |
| 15. செங்கழுநீர் கிழங்கு | - | 4 கி |
| 16. தண்ணீர் விட்டான் கிழங்கு | - | 4 கி |
| 17. அதிமதுரம் | - | 4 கி |
| 18. மஞ்சிட்டி வேர் | - | 4 கி |
| 19. செண்பக மொக்கு | - | 4 கி |
| 20. புனுகுச் சட்டம் | - | 4 கி |
| 21. குங்குமப்பூ | - | 4 கி |

**தயாரிக்கும் விதம் :**

நெ. 4 முதல் 19 வரையிலான சரக்குகளை பொடித்து வைக்கவும். நெ. 1-3 வரையுள்ள சரக்குகளை சேர்த்து அடுப்பிலேற்றி காய்ச்சவும்.

பொடித்த சரக்குகளை எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து வைக்கவும். வடிகலத்தில் புனுகுச் சட்டம், குங்குமப்பூ இவ்விரண்டையும் பொடித்துச் சேர்த்து நன்கு கலந்து கொள்ளவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம் மற்றும் தலையில் தேய்த்துக் குளிக்கலாம்.

**தீரும் நோய்கள் :**

சுவாசத்தைத் தடுக்கும் பீனிசம், இரத்த பீனிசம், திரவிழுதல் முதலிய 18 வகை பீசினங்கள் கண் திமிரம் ஆகியன.





## இஞ்சித் தைலம்

***(அகஸ்தியர் வைத்திய காவியம்)***

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. இஞ்சிச் சாறு | - | 800 மி.லி. |
| 2. முசுமுசுக்கை சாறு | - | 800 மி.லி. |
| 3. கையாந்த கரைச் சாறு | - | 800 மி.லி. |
| 4. நல்லெண்ணெய் | - | 800 மி.லி. |
| 5. பசும்பால் | - | 800 மி.லி. |
| 6. சந்தனம் | - | 87.5 கி |
| 7. மிளகு | - | 87.5 கி |
| 8. குங்குமப்பூ | - | 87.5 கி |
| 9. வெட்டி வேர் | - | 17.5 கி |
| 10. சாம்பிராணி | - | 3.5 கி |

**தயாரிக்கும் விதம் :**

இஞ்சிச்சாறு, முசுமுசுக்கைச் சாறு கையாந்தகரைச் சாறு, நல்லெண்ணெய், பசுவின் பால் இவ்வனைத்தையும் தைலப் பாத்திரலிட்டு சந்தனக் கட்டையும் மிளகும் பசும்பால் விட்டரைத்து அந்த எண்ணெயில் சேர்த்து பதமாகக் காய்ச்சி வடிகலத்தினுள் குங்குமப்பூ வெட்டி வேர் சாம்பிராணி இம்மூன்றையும் பொடித்து தூவி இதில் வடித்தெடுத்து வைத்த தைலத்தை பத்திரப்படுத்தி பயன்படுத்தவும்.

**உபயோக முறை :**

வெளிஉபயோக முறை.

**தீரும் நோய்கள் :**

இத்தைலத்தால் ஸ்நானஞ் செய்ய உச்சந்தலை நோய் வாதத்தாலுண்டாகிய தேகக் கடுப்பு, அதிகரித்த காது நோய்கள், முகநோய், கப நோய் போன்ற நோய்கள் குணமாகும்.

## பிருங்கராஜ தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. கரிசாலைச் சாறு - 100 கி
2. நல்லெண்ணெய் - 900 கி

**செய்முறை :**

கரிசாலை சாறு, நல்லெண்ணெய் இவ்விரண்டையும் தைலப் பாத்திரத்திலிட்டுத் தீபாக்கினியால் எரித்து பக்குவமாக வடித்து வைக்கவும்.

**உபயோக முறை :**

வெளி உபயோகம்.

**தீரும் நோய்கள் :**

காலை, மாலை 1 அவுன்ஸ் வீதம் உட்கொள்ள காச ரோகம் குணமாகும்.

## லவங்காதி தைலம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. லவங்கம் - 70 கி
2. கற்பூரம் - 70 கி
3. ஜாதிக்காய் - 70 கி
4. ஜாதிபத்திரி - 70 கி
5. நல்லெண்ணெய் - 1 கிலோ

**தயாரிக்கும் விதம் :**

மேற்கண்ட சரக்குகளை பொடித்து நல்லெண்ணெயில் போட்டு காய்ச்சி வடித்து வைக்கவும்.





**உபயோக முறை :**

வேளைக்கு ஒரு துளி அல்லது இரண்டு துளி, வெந்நீரிலாவது அல்லது பசும்பாலிலாவது உள்ளுக்கு கொடுக்கலாம்.

**தீரும் வியாதி :**

சயம், ஈளை, இருமல், உப்பிசம் தீரும்.

## குளிர்ச்சித் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. விளக்கெண்ணெய் - 500 மி.லி.
2. வாழைச்சாறு - 500 மி.லி.
3. இளநீர் - 500 மி.லி.
4. பசும்பால் - 500 மி.லி.
5. பரங்கிப்பட்டை - 185 கி
6. கொத்தமல்லி விதைகள் - 105 கி
7. பலப்பத்தூள் - 105 கி
8. சீரகத்தூள் - 35 கி

**தயாரிக்கும் விதம் :**

ஆமணக்கெண்ணெய், வாழைச்சாறு, இளநீர் மற்றும் பசும்பாலை பாத்திரத்தில் விட்டு மெதுவாக எரித்து, மெழுகு பதத்தில் வடித்து சூடு ஆறுவதற்கு முன்பு நன்கு சலித்து சுத்தம் செய்த பறங்கிப்பட்டைத் தூளை கொத்த மல்லி விதைத் தூள், சீரகத் தூள் மற்றும் பலப்பத்தூள் அதில் தூவி மத்தித்து வைத்து பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

5 - 8 மி.லி. அதிகாலையில் அல்லது இரவு உணவிற்கு பின் அருந்தவும். ஒரு மண்டலம் (48 நாள்) வரை குளிக்கவும்.





**தீரும் நோய்கள் :**

உட்சுரம், தேகச்சூடு, உஷ்ணம் முதலியன தணிந்து குளிர்ச்சி உண்டாக்கும்.

## துளசித் தைலம்

**(அகஸ்த்தியர் நயனவிதி 400)**

**தேவையான பொருட்கள் :**

1. துளசிச்சாறு - 800 கி
2. திருநீற்றுப் பச்சிலை - 800 கி
3. நல்லெண்ணெய் - 800 கி
4. பசும்பால் - 800 கி
5. விளக்கெண்ணெய் - 1.6 கி
6. மஞ்சள் - 10.5 கி
7. மரமஞ்சள் - 10.5 கி
8. சுக்கு - 10.5 கி
9. முத்தக்காசு - 10.5 கி
10. வெட்டி வேர் - 10.5 கி
11. விலாமிச்சம் வேர் - 10.5 கி
12. சீரகம் - 10.5 கி
13. அதிமதுரம் - 10.5 கி
14. கற்கடக சிருங்கி - 10.5 கி
15. லவங்கப்பட்டை - 10.5 கி
16. வலம்புரிக்காய் - 10.5 கி
17. ஜாதிக்காய் - 10.5 கி
18. தக்கோலம் - 10.5 கி
19. சடாமஞ்சில் - 10.5 கி





20. ஓமம் - 10.5 கி
21. பரங்கிப்பட்டை - 10.5 கி
22. செண்பகபூ - 10.5 கி
23. கசகசா - 10.5 கி
24. அதிவிடயம் - 10.5 கி
25. கடுகு ரோகிணி - 10.5 கி
26. தேவதாரம் - 10.5 கி
27. சந்தனக்கட்டை - 10.5 கி
28. சிறுநாகப்பூ - 10.5 கி

**தயாரிக்கும் விதம் :**

மேற்கண்ட கடைச்சரக்குகளை பசும்பாலில் அரைத்து நல்லெண்ணெய், விளக்கெண்ணெய் துளசி சாறுடன் காய்ச்சி பதத்தில் வடித்து பத்திரப்படுத்தவும்.

உபயோக முறை :

உள் மற்றும் வெளி உபயோகம்.

தீரும் வியாதி :

கிரந்தி, சூலை, வயிற்றெரிவு, நெஞ்சு நோய், தேக வறட்சி, நீர்க்கடுப்பு குணமாகும். தேகம் குளிரும்.

## கீழா நெல்லித் தைலம்

**(தேரையர் தைல வர்க்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. விளக்கெண்ணெய் - 500 மி.லி.
2. வாழைச்சாறு - 500 மி.லி.
3. இளநீர் - 500 மி.லி.
4. சீரகம் - 70 கி

5. பால் - தேவையான அளவு.

**செய்முறை :**

கீழா நெல்லி சமூலத்தை இடித்து சாறு எடுத்து வாழைத் தண்டுச்சாறும், நல்லெண்ணெய், ஆவின் பால் மற்றும் சீரகம் அரைத்துப் போட்டு காய்ச்சி மெழுக பதமாய் வடித்து பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

தலைக்கு தேய்த்து குளிக்கவும்.

**தீரும் நோய்கள் :**

பித்த வெட்டை, மஞ்சட்காமாலை, வாந்தி, மயக்கம், வாய் நீருறல், உட்சுரம், நடுக்கம் தீரும்.





## சூரணங்கள்

நன்கு உலர்ந்த மருந்துச் சரக்குகள் நன்கு பொடியாக்கப்பட்ட நிலையில் சூரணங்கள் என அழைக்கப்படும். சூரணங்கள் உட்கொள்ளவும் மேற்பூச்சாகவும் நசியமிடவும் பயன்படுத்தப் படுகின்றன.

உலர்ந்த சரக்குகளை மீண்டும் உலர்த்தாமலும் ஈரச் சரக்குகளானால் உலர்த்தியும் வறுக்க வேண்டியவைகளை வறுத்தும் உலக்கையால் நன்கு தூளாக்கி கொள்ள வேண்டும்.

சில சரக்குகளை இலேசாக வறுத்துக் கொள்வதால் அவற்றின் நொறுங்கும் தன்மை மிகுவதோடு அவற்றின் நறுமணமும் மிகைப்படுகின்றன.

சூரணங்களில் சேர்க்கப்படும் மருந்துச் சரக்குகளை தனித்தனியே இடித்துச் சலித்து பிறகு எல்லாவற்றயும் ஒன்றாக்கி கலந்து சூரணமாக்கிக் கொள்ள வேண்டும்.

சூரணம் செய்ய பயன்படுத்தப்படும் மூலப்பொருட்கள் மிகப் பழமையானவையாகவோ, இயற்கையான நிறம் மங்கியவை யாகவோ மணம் சுவையில் இயற்கைக்குப் புறம்பாகவோ, பூச்சி அரித்ததாகவோ, காளான் பூத்ததாகவோ இருத்தல் கூடாது.

சர்க்கரை, கற்கண்டு, கற்பூரம்,காவிக்கல், மூசாம்பரம், திராட்சை, பேரிச்சங்காய், பெருங்காயம், வெங்காயம், படிகாரம் உப்பு வகைகள் போன்றவற்றை எல்லா சரக்குகளுடன் பொடித்தல் கூடாது. அவைகளை தனித்தனியே இடித்துப் பொடித்துச் சலித்துக் கடைசியில் சேர்க்க வேண்டும்.

சதாவரி (தண்ணீர் விட்டான் கிழங்கு) சீந்தில் கொடி போன்றவைகளை பசைப் போலரைத்து உலர்த்திச் சேர்க்க வேண்டும். திப்பிலியை சற்றே வறுத்து சேர்க்க வேண்டும்.

பின்னர் எல்லாவற்றயும் ஒன்றுபடக் கலந்து தூய்மையான ஈரப்பதமற்ற காற்றுப்புகாத பீங்கான் அல்லது கண்ணாடி ஜாடியில் மூடி வைத்தல் வேண்டும். சூரணங்கள் கட்டிகளாவோ ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டோ ஈரம் படிந்தோ இருத்தல்





கூடாது. எவ்வளவுக்கெவ்வளவு நுண்துகளாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு மருந்தின் பயனும் அதிகமாக இருக்கும்.

**பாதுகாப்பும் காலக்கெடுவும் :**

சூரணங்களை நன்கு பரப்பி சூடு ஆற வைத்து கலந்து கொண்ட பின்னரே சிறு சிறு பொட்டலங்களில் அடைத்தல் வேண்டும்.

இவற்றை நல்ல மூடியுடன் கூடிய ப்ளாஸ்டிக் டப்பாக்கள், கண்ணாடி பாட்டில்கள், பாலீதின் பைகள் போன்றவற்றில் அடைத்து சில செய்துவிட வேண்டும்.

சூரணங்கள் மூன்று மாதம் வரை வன்மை உடையன.

## அமுக்கரா சூரணம்

**(அகஸ்தியர் வைத்திய ரத்தின சுருக்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. இலவங்கம் - 10 கி
2. சிறுநாகப்பூ - 20 கி
3. ஏலம் - 40 கி
4. மிளகு - 80 கி
5. திப்பிலி - 160 கி
6. சுக்கு - 320 கி
7. அமுக்கரா - 640 கி
8. சர்க்கரை - 1280 கி

**செய்முறை :**

இவற்றைத் தனித்தனியே பொடித்துச் சலிக்கவும். சர்க்கரையைத் தனியே பொடித்துச் சலித்து எல்லாவற்றையும் ஒன்று கலந்து பத்திரப்படுத்தவும்.

**தீரும் நோய்கள் :**

தினம் இருவேளை 1-2 கிராம் வரை தேன், பால் அல்லது





வெந்நீருடன் கொடுக்க ஈரல் நோய், குத்து வாய்வு, வெள்ளை, வறட்சி, கைகால், எரிவு, கபம், இரைப்பு, இளைப்பு, சயம், விக்கல், பாண்டு ஆகியன தீரும். உடல் பருக்கும்.

## அக்கினிச் சூரணம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. கொடிவேலி வேர் - 35 கி
2. திரிகடுகு - 35 கி
3. ஓமம் - 35 கி
4. சிறுதேக்கு - 35 கி
5. ஆனைத் திப்பிலி - 35 கி
6. கோஷ்டம் - 35 கி
7. இந்துப்பு - 35 கி
8. பெருங்காயம் - 70 கி
9. வசம்பு சுட்ட கரி - 70 கி
10. கடுகு - 70 கி
11. சர்க்கரை - 455 கி

**தயாரிக்கும் விதம் :**

1-11 வரையுள்ள சரக்குகளையும் சூரணித்து னைத்து சூரணங்களையும் சேர்த்து கலந்து வைக்கவும்.

**தீரும் நோய்கள் :**

நீரில் சாப்பிட மாந்தம், கழிச்சல் தீரும். தேனில் சாப்பிட சன்னி மற்றும் சீதளமும், பனை வெல்லத்தில் சாப்பிட வயிற்று நோய் தீரும்.

## அஷ்ட சூரணம்

**(அகஸ்தியர் வைத்திய காவியம்)**

**தேவையான பொருட்கள் :**

1. பருத்தி விதை - 3.5 கி
2. கிராம் - 10.5 கி
3. கல்லுப்பு - 10.5 கி
4. கருவேப்பிலை - 10.5 கி
5. திரிகடுகு - 35 கி
6. சீரகம் - 35 கி
7. ஓமம் - 35 கி
8. இலவங்கப்பத்திரி - 35 கி

**செய்முறை :**

இவற்றை தனித்தனியே இடித்து சூரணித்த ஒன்று சேர்த்து கலந்து வைக்கவும்.

**தீரும் நோய்கள் :**

அஜீரணம், பசியின்மை, ருசியின்மை, வயிற்று வலி, மாந்த குன்மம், வயிற்றுப் போக்குடன் கூடிய அஜீரணம் நீங்கும்.

## நிலாவரைச் சூரணம்

**(அகஸ்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. நிலாவரை - 10 கி
2. சுக்கு - 10 கி
3. மிளகு - 10 கி
4. ஓமம் - 10 கி
5. வாய்விடங்கம் - 10 கி
6. சர்க்கரை - 10 கி





**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக பொடித்து சலிக்கவும். பின் அவற்றை ஒன்றாக கலந்து வைக்கவும்.

**அளவு :**

ஒன்று முதல் இரண்டு கிராம் வரை வெந்நீருடன் இரு வேளைகள் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

வாயு, பொருமல், விம்மல், விக்கல், வெப்பநோய், உடல், எரிச்சல், வாந்தி மலக்கட்டு, பித்தம் முதலியன குணமாகும்.

## பஞ்சதீபாக்கினிச் சூரணம்

**(அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. சுக்கு - 100 கி
2. மிளகு - 100 கி
3. திப்பிலி - 100 கி
4. ஏலம் - 100 கி
5. சீரகம் - 100 கி
6. சர்க்கரை - 500 கி

**செய்முறை :**

1 - 5 வரையுள்ள சரக்குகளை இளவறுப்பாக வறுத்து இடித்துச் சலித்து வைக்கவும். பின்னர் 500 கிராம் சர்க்கரையைத் தனியே பொடித்து சலித்து எல்லாவற்றையும் நன்கு கலந்து வைக்கவும்.

**அளவு :**

1 - 2 கிராம் வரை 2 அல்லது 3 வேளைகள் நெய் அல்லது தேனுடன் கொடுக்கவும்.





**தீரும் நோய்கள் :**

வாயு, பித்தம், பொருமல், வெப்ப நோய், சூலை, பித்த வாயு, செரியாமை, மயக்கம், மூலவாயு, உஷ்ணம், அஜீரணம் மற்றும் பசியின்மை முதலியவை குணமாகும்.

**பத்தியம் :**

புளி, புகை, கசப்பு சுவையுள்ள பதார்த்தங்கள் ஆகியவை நீக்கவும்.

## பரங்கிப்பட்டைச் சூரணம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. பரங்கிப்பட்டை - 100 கி
2. கருந்துளசிச் சாறு - 50 மி.லி.
3. சர்க்கரை - 100 கி

**செய்முறை :**

சுத்தி செய்த பரங்கிப் பட்டையைக் கருந்துளசிச் சாற்றில் ஊறவைத்து உலர்ந்த பின் பொடித்து சலித்து வைக்கவும். பின் சர்க்கரையைத் தனியே பொடித்து சலித்து கலந்து வைக்கவும்.

**அளவு :**

1-2 கிராம் வரை சர்க்கரையும் பாலும் சேர்த்து தினம் இரு வேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மேகம், வெண்குஷ்டம், கருங்குஷ்டம் தோல் நோய்கள் ஆகியன குணமாகும். ஒளி துலங்கும். பசியெடுக்கும்.





## சீந்தில் சூரணம்

**(அகஸ்தியர் வைத்திய காவியம்)**

**தேவையான பொருட்கள் :**

1. வஸ்திர காயம் செய்யப்பட்ட சீந்தில் பொடி - 350 கி
2. மஞ்சட் கரிசாலை சூரணம் - 350 கி
3. நாகப் பூச்சி சூரணம் - 105 கி

**செய்முறை :**

மேற்கண்ட சூரணங்களை நன்கு கலந்து வைக்கவும்.

**அளவு :**

1 - 2 கிராம் தேனுடன் உண்ணவும்.

**குணமாகும் நோய்கள் :**

சர்க்கரையுடன் கலந்து உண்ண மயிர்வெட்டு, புழுவெட்டு, பொடுகு, சுரம் மற்றும் கண்ணில் உண்டாகும் நோய்களையும் குணப்படுத்தும். நீரிழிவு நோய்க்குச் சிறந்தது.

## தாளிசாதிச் சூரணம்

**(சித்த வைத்தி திரட்டு)**

**தேவையானவை :**

1. தாளிச பத்திரி - 10 கி
2. இலவங்கப்பட்டை - 10 கி
3. ஏலம் - 10 கி
4. சுக்கு - 10 கி
5. அதிமதுரம் - 10 கி
6. பெருங்காயம் - 10 கி
7. நெல்லி முள்ளி - 10 கி

8. கோஷ்டம் - 10 கி
9. திப்பிலி - 10 கி
10. சீரகம் - 10 கி
11. சதகுப்பை - 10 கி
12. கருஞ்சீரகம் - 10 கி
13. திப்பிலிக்கட்டை - 10 கி
14. கிராம்பு - 10 கி
15. ஜாதிபத்திரி - 10 கி
16. கற்கடக சிருங்கி - 10 கி
17. ஜாதிக்காய் - 10 கி
18. தான்றிக்காய் - 10 கி
19. கடுக்காய் - 10 கி
20. சடாமஞ்சில் - 10 கி
21. மிளகு - 10 கி
22. சிறுநாகப்பூ - 10 கி
23. செண்பக மொட்டு - 10 கி
24. வாய்விடங்கம் - 10 கி
25. இலவங்கப்பத்திரி - 10 கி
26. ஓமம் - 10 கி
27. தனியா - 60 கி
28. சர்க்கரை - 120 கி

**செய்முறை :**

எல்லா சரக்குகளையும் இளவறுப்பாக வறுத்து பொடித்து சலித்து வைக்கவும், சர்க்கரையைத் தனியே பொடித்துச் சலித்து முன்பு சூரணித்த சரக்குகளுடன் நன்கு கலந்து வைக்கவும்.





**அளவு :**

1 - 2 கிராம் தேனுடன் தினமும் இரு வேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

வாத, பித்த, கப நோய்கள், சொறி சிரங்கு, வயிற்றெரிவு, குன்மம், வயிற்று வலி, நீர்ச்சுருக்கு, காமாலை, சுரம், வாயில் நீர் சுரத்தல், வெள்ளை, தாகம், பொருமல், காதிரைச்சர், இருமல், கைகால் குடைச்சல், வெப்பம், தொண்டைக்கட்டு, நீர்க்கட்டு, மயக்கம், நீர்க்கடுப்பு, நெஞ்சரிப்பு, கைகால் கடுப்பு, நீர் எரிச்சல், அஜீரணம் முதலியன குணமாகும்.

## திரிகடுகு சூரணம்

**(அகஸ்தியர் பரிபூரணம் 400)**

**தேவையான பொருட்கள் :**

1. தோல் நீக்கிய சுக்கு - 200 கி
2. மிளகு - 200 கி
3. திப்பிலி - 200 கி

**செய்முறை :**

மேற்கண்ட மூன்றையும் எடுத்து சுத்தம் செய்து தனித்தனியே இடித்து சலித்து பிறகு ஒன்று சேர்த்து கலந்து வைக்கவும்.

**அளவு :**

தினமும் 2 - 3 வேளைகள் 1 - 2 கிராம் வரை தேன், நெய் அல்லது தண்ணீருடன் கொடுக்கவும்.

**குணமாகும் நோய்கள் :**

பசியின்மை, செரியாமை, வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, இருமல், சுரம் போன்ற நோய்கள் தீரும்.





## திரிபலா சூரணம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. கடுக்காய் தோல் - 200 கி
2. விதை நீக்கிய நெல்லி வற்றல் - 200 கி
3. தான்றிக்காய்த் தோல் - 200 கி

**செய்முறை :**

மூன்றையும் தனித்தனியே இடித்து, சலித்து ஒன்று சேர்த்து கலந்து வைக்கவும்.

**அளவு :**

1 முதல் 3 கிராம் வரை 2 - 3 வேளைகள் தேன் மற்றும் நெய்யுடன் கலந்து கொடுக்க கண் ஒளி பெறும். சுடு தண்ணீருடன் கொடுக்க மலச்சிக்கல் குணமாகும். வாய்ப்புண், வயிற்றுப்புண் குணமாகும்.

**தீரும் நோய்கள் :**

சூரணத்தை கஷாயமாக்கி, புண்களையும், இரணங்களையும் கழுவலாம். நீரும் பீளையும் வடியும் கண்ணைக் கழுவலாம். வாய்ப்புண்ணிற்கு கொப்பளிக்கவும் பயன்படுத்தலாம்.

## ஏலாதி சூரணம்

**(அகஸ்தியர் ரத்தினச் சுருக்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. இலவங்கம் - 10 கி
2. மிளகு - 10 கி
3. சிறுநாகப்பூ - 40 கி
4. தாளிசபத்திரி - 80 கி
5. கூகைநீர் - 160 கி





6. சுக்கு - 320 கி
7. ஏலம் - 640 கி
8. சர்க்கரை - 1270 கி

**செய்முறை :**

இவற்றை தூய்மை செய்து பொடித்து சலித்து பின்னர் சர்க்கரையைத் தனியே பொடித்துச் சலித்துக் கலந்து வைக்கவும்.

**அளவு / தீரும் வியாதிகள் :**

1 முதல் 2 கிராம் வரை தேனுடன் தினமும் இரு வேளைகள் கொடுக்க வாத, பித்த ரோகம், பித்தவாயு, ஊறல், நச்சுக்கடி, எலும்புருக்கி, சொறி, சிரங்கு ஆகியன குணமாகும்.

## மதுமேக கற்பம் சூரணம்

**தேவையான பொருட்கள் :**

1. சிறுகுறிஞ்சான் - 10 மி.கி.
2. வேப்பிலை - 10 மி.கி.
3. சீந்தில் - 10 மி.கி.
4. நாவல் கொட்டை - 10 மி.கி.
5. துளசி - 5 மி.கி.
6. அத்தி - 5 மி.கி.
7. பாகற்காய் - 10 மி.கி.
8. திரிபலாதி - 10 மி.கி.
9. கோவைக்காய் - 10 மி.கி.
10. கரிசாலை - 10 மி.கி.
11. அமுக்கரா - 10 மி.கி

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை நன்கு சூரணித்து கலந்து வைக்கவும்.

**அளவு :**

2 - 5 கிராம் வீதம் 2 வேளைகள் உணவிற்கு முன் நீருடன் உட்கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :**

நீரிழிவு, உடற்சோர்வு, தாகவறட்சி மற்றும் அனைத்து வித சர்க்கரை நோய்கள்.

## கழற்சி சூரணம்

**(சித்த பார்முலரி ஆப் இந்தியா பார்ட் 1)**

**தேவையான பொருட்கள் :**

1. கழற்சி பருப்புத் தூள் - 100 கி
2. மிளகுத் தூள் - 125 கி

**செய்முறை :**

மேற்கண்ட இரு தூள்களையும் கலந்து வைக்கவும்.

**அளவு :**

300 - 400 மி.கி. வெந்நீரில் உட்கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :**

விரைவாதம், யானைக்கால் நோய் முதலியன.

## வல்லாரை சூரணம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. வல்லாரை - 70 கி
2. கிராம்பு - 35 கி
3. ஏலம் - 35 கி





4. ஜாதிக்காய் - 35 கி
5. ஜாதி பத்திரி - 35 கி
6. தாளிச பத்திரி - 35 கி
7. திரிபலாதி - 35 கி
8. மாசிக்காய் - 35 கி
9. சர்க்கரை - 35 கி

**தயாரிக்கும் முறை :**

வல்லாரையை பாலிலுலர்த்தி இடித்து பொடித்த சூரணம், கிராம்பு, ஏலம், ஜாதிக்காய், ஜாதிபத்திரி, மாசிக்காய், தாளிசபத்திரி, திரிபலாதி போன்றவற்றைப் பொடித்து ஒன்றாய் கலந்து சர்க்கரையுடன் கலந்து வைக்கவும்.

**அளவும் தீரும் நோயும் :**

2 கிராம் முதல் 5 கிராம் வரை திரிகடி பிரமாணம் நெய்யில் உண்ண மேககாங்கை மூலச்சூடு, உடம்பெரிவு தீர்ந்து தேகம் குளிரும்.

## சிவதை சூரணம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. சிவதை வேர் - 400 கி
2. திரிபலா - 100 கி
3. திரிகடுகு - 100 கி
4. ஏலம் - 100 கி
5. சிறுநாகப்பூ - 100 கி
6. கோரைக்கிழங்கு - 100 கி
7. லவங்கம் - 100 கி
8. பால் - 1 லி





**செய்முறை :**

சிவதை வேரை பாலில் வேக வைத்து சுத்திகரிக்கவும். எல்லாவற்றையும் தனித்தனியே பொடித்து கலந்து கொள்ளவும்.

**அளவு :**

2 - 4 கிராம் தேன் அல்லது சர்க்கரையில் கலந்து கொடுக்கலாம்.

**தீரும் வியாதிகள் :**

மலக்கட்டு, வெப்பு, வாயுத் தொல்லை தீரும்.

## கற்பூராதி சூரணம்

**(ஆத்மரட்சாமிர்தம்)**

**தேவையான பொருட்கள் :**

1. கற்பூரம் - 100 கி
2. கோஷ்டம் - 100 கி
3. கல்நார் - 100 கி
4. ஜாதிக்காய் - 100 கி
5. குங்குமப்பூ - 100 கி
6. சந்தனம் - 100 கி
7. சீரகம் - 100 கி
8. மல்லி - 100 கி
9. அமுக்கரா - 100 கி
10. சீந்தில் சர்க்கரை - 100 கி
11. முந்திரி - 100 கி
12. பேரீச்சை - 100 கி
13. சிலாசத்து பற்பம் - 100 கி





14. நெருஞ்சில் வேர் - 100 கி
15. வில்வ வேர் - 100 கி
16. நீர்முள்ளி விதை - 100 கி
17. இலவம் பிசின் - 50 கி
18. முத்தக்காசு - 100 கி
19. விலாச்சம் வேர் - 100 கி
20. இந்துப்பு - 100 கி
21. வெண்காரம் - 100 கி
22. ஆவாரை அரிசி - 100 கி
23. கஸ்தூரி மஞ்சள் - 100 கி
24. சிறுநாகப்பூ - 100 கி
25. நிலப்பனக்கிழங்கு - 100 கி
26. காஞ்சோன் கீரை - 100 கி
27. சிவப்பு சந்தனம் - 100 கி
28. தக்கோலம் - 100 கி
29. அதிமதுரம் - 100 கி
30. வால்மிளகு - 100 கி

**தயாரிக்கும் முறை :**

மேற்கண்ட சரக்குகளை தனித்தனியே பொடித்து அனைத்தையும் ஒன்றாகக் கலந்து வைத்து பயன்படுத்தவும்.

**அளவு :**

1-2 கிராம் வீதம், 3-4 வேளைகள் தினமும் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

சிறுநீரக சம்பந்தப்பட்ட நோய்களான மூத்திர எரிவு, சிறுநீரகக் கல், நீரிழிவு போன்ற நோய்களை குணப்படுத்த வல்லது.

## சீரக சூரணம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சீரகம் - 400 கி
2. சர்க்கரை - 100 கி

**செய்முறை :**

சுத்தம் செய்த சீரகத்தை நன்றாக இடித்துத் தூளாக்கி வந்த எடைக்கு, கால் பங்கு, சர்க்கரை சேர்த்துக் கலந்து கொள்ளவும்.

**அளவு :**

1-2 கி காலை மாலை 40 நாட்கள் உட்கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :**

கிறுகிறுப்பு, வாந்தி, மந்தம், உஷ்ணம், காங்கை முதலியவை தீரும்.

## திராட்சாதி சூரணம்

**(தேரையர் கரிசல் - 300)**

**தேவையான பொருட்கள் :**

1. உலர் திராட்சை - 100 கி
2. பேரீச்சை - 100 கி
3. கோரைக் கிழங்கு - 100 கி
4. காட்டு மிளகு - 100 கி
5. சந்தனம் - 100 கி
6. நெற்பொறி - 100 கி
7. கூகைநீர் - 100 கி





8. ஏலம் - 100 கி
9. நற்சீரகம் - 100 கி
10. வெட்டிவேர் - 100 கி
11. திரிகடுகு - 100 கி
12. பேராமுட்டி வேர் - 100 கி
13. திரிபலாதி - 100 கி
14. அதிமதுரம் - 100 கி
15. சிற்றாமுட்டி வேர் - 100 கி
16. சீந்தில் சர்க்கரை - 100 கி
17. நிலக்குமிழ் வேர் - 100 கி
18. நெருஞ்சில் வேர் - 100 கி
19. விலாமிச்சம் வேர் - 100 கி
20. மரமஞ்சள் - 100 கி
21. கிராம்பு - 100 கி
22. நெய்தல் கிழங்கு - 100 கி
23. கஸ்தூரி மஞ்சள் - 100 கி
24. பூலாங்கிழங்கு - 100 கி
25. தாமரை வளையம் - 100 கி
26. சர்க்கரை - 3.2 கி
27. குங்குமப்பூ - 100 கி
28. கோஷ்டம் - 100 கி
29. சிற்றாமல்லி வேர் - 100 கி

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை தனித்தனியே இடித்து பொடித்து சலித்து அனைத்தையும் ஒன்றுபட கலந்து வைக்கவும்.





**அளவு :**

1-2 கிராம் தேனில் உட்கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :**

இளைப்பு, இருமல், பொருமல், சுவாசம், காசம், குன்மம், கொடிய வயிற்று நோய், அரோகம், வாந்தி, பயித்தியம், பாண்டு, சுரத்துடன் கூடிய சயம், ஜன்னி, மயக்கம், நாற்பது வகைப் பித்தம் இவை தீரும்.





## பற்பங்கள்

பற்பம் என்பதற்கு நீறு அல்லது சாம்பல் என்று பொருள். இச் செய்முறையால் பக்குவத்தப்பட்டவைகள் பெரும்பாலும் வெண்ணிறமாகவே அமைவதால் இவைகள் இப்பெயரைக் கொண்டே குறிப்பிடுகின்றன. பற்பங்கள் புடமிட்டு தயாரிக்கப்படுகின்றன.

மிகக் கடினமானவையும் எளிதில் உட்கொள்ள முடியாததுமான உலோகங்கள், பாஷாணங்கள், உபசரங்கள் போன்றவற்றைச் சில மூலிகைச் சாறுகளாவது, உப்புப் புகை நீரினாலாவது (திரவகத்தில் அரைத்து புடமிட்டாவது) எரித்தாவது, ஊதியாவது, வெளுக்கும்படி செய்து எடுத்துக் கொள்வதே இதன் செயல்முறையாகும்.

செய்முறை :

பற்பம் செய்யும் செயல்முறை சோதனம் (சுத்தி செய்தல்) மாரணம் (மடியச் செய்தல்) என இரு பிரிவுகளாகக் கொண்டது.

புடமிட வேண்டிய பொருட்களில் இயற்கையாகவும், பலவிதமான செயற்கைக் காரணங்களினாலும் அமைந்துள்ள கசடுகளை சிலக் குறிப்பிட்ட செயல்முறைகளுக்கு உட்படுத்தி அகற்ற சோதனைம் (சுத்தி செய்தல் (அல்லது) தூய்மையாக்கல்) என்றும் மேற்படி தூயதாக்கியவற்றை பற்பல மூலிகைச் சாறுகள் (அல்லது) உப்பப் புகை நீர்கள் (திராவகங்கள்) ஜெயநீர்களால் அரைத்து முறைப்படி பன்முறை புடமிட்டு நீராக்குவதை மாரணம் (மடியச் செய்தல்) என்றும் கூறுவர்.

பழுக்கக் காய்ச்சி குறிப்பிட்ட திரவத்தில் தோயத்தல், ஊற வைத்தல் என பொருள்களுக்கேற்ப சோதனம் பல வகைப்படும். ஆனால் பற்பமாக மாற்றும் மாரண முறை சற்றேறக்குறைய எல்லாப் பொருட்களுக்கும் பொதுவானதே. ஏனெனில் அவைகள் எல்லாமே புடமிடும் செயல்முறைகளால் பற்பமாக்கப்படுகின்றன.

முதலில் சுத்தி செய்த பொருட்களை கல்வத்திலிட்டு நன்கு அரைப்பதற்கு ஏற்ற வண்ணம் நன்கு பொடித்துச் சலித்து பொடியாக்கி கொள்ள வேண்டும். பிறகு அவற்றைக்

கல்வத்திலிட்டு செய்முறையில் குறிப்பிட்ட கால அளவு வரை அரைத்துச் சிறிய வில்லைகளாகத் தட்டி வெயிலில் உலர்த்த வேண்டும். வில்லைகள் ஈரம் இருந்தால் பற்பத்தின் நிறம் சரியாக அமையாது. நன்கு உலர்ந்த வில்லைகளை மண்அகலில் பரப்பி அதே அளவுள்ள மற்றோர் அகலால் மேலே கவிழ்த்து மூடி அவைகளை சேரும் இடத்தை சீலை மண் கொண்டு பூசி உலர்ந்த பின் உலோகங்கள், பாஷாணங்கள், உபசரங்கள் போன்றவற்றின் உருகு நிலைக்கேற்ப நிர்ணயித்துள்ள புடங்களில் அமைத்துப் பக்குவப்படுத்த வேண்டும். (புடமிடல் வேண்டும்) புடம் நன்கு ஆறிய பின்னரே அகல்களையும் அவற்றினுள் இருக்கும் மருந்துப் பொருள்களையும் பிரித்தெடுத்தல் வேண்டும். பின்னர் எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். புடமிட்ட வில்லைகளை அகலில் அடுக்கும் போது அவற்றை குவியலாகவோ அல்லது இரண்டு அடுக்குகளுக்கு அதிகமாகவோ அமைத்தல் கூடாது. அப்போதுதான் வெப்பம் நன்கு செயல்படும். பற்பமும் நன்கு அமையும். பயன்படுத்தும் அகல்கள் மருந்தின் அளவுக்குத் தேவையான அளவை விட மிகப் பெரியதாகவும் அதிக ஆழம் உள்ளதாகவும் இருத்தல் கூடாது.

அரைப்பின் தரத்திற்கேற்பவே பற்பங்களின் நிறம், குணம், நுண்மை முதலியன சிறந்து அமையும். ஆதலால் அவற்றை நன்கு அரைக்க வேண்டியது அவசியமாகிறது.

மிதமான காற்றோட்டமுள்ள இடங்களை தேர்வு செய்த அங்கு பூமியின் வட்ட வடிவமான குழிகளை வெட்டி குழிகளை மண் சரியாக வண்ணம் அவற்றைச் சுற்றிலும் செங்கற்களைக் கொண்டு கட்டி எரிபொருளை அமைத்துப் புடமிட வேண்டும்.

புடங்களில் வரட்டிகளே எரிபொருளாக உபயோகிக்கப் படுகின்றன. எனினும் சில பற்பங்களுக்கு சில வகை மரப்பட்டைகள் ஆட்டுச் சாணம் போன்றவற்றைப் பயன்படுத்த வேண்டுமென நூல்களில் கூறப்பட்டுள்ளன. தற்போது கிடைக்கும் வரட்டிகளில் மண் போன்ற கலப்படங்கள் அதிகமாயுள்ளன. ஆகையால் இம்முறைகளில் பொருட்களுக்கு ஏற்ப வெப்ப





நிலையை ஆராய்ந்து நிர்ணயித்து அதற்கேற்ப எண்ணிக்கையை கூட்டியோ குறைவாகவோ வரட்டிகளை அவ்வப்போது உபயோகிக் வேண்டும். இதில் அனுபவம் இன்றியமையாததாகும். பழக்கத்தின் வாயிலாகவே நிதானம் ஏற்படும்.

இவ்விதம் நிர்ணயித்த அளவு வரட்டிகளின் அளவில் பாதிப் பகுதியைக் குழியில் பரப்பி அடுக்கி அவற்றிற்கு நடுவே சீலை செய்து உலர்த்திய அகல்களை வைத்து அதன் மேல் எஞ்சியுள்ள வரட்டிகளைப் பரப்பி மூடி மேல்பாகத்தில் தீயிடவும்.

கடும் வெப்பத்தைப் பொறுக்காத கந்தகம், தாளகம் போன்றவைகளை குறிப்பிட்ட சில தாவரச் சாம்பல்களில் மணல் மறைத்துப் புடமிடுவது வழக்கம். அவ்விடங்களில் செய்முறையில் குறிப்பிட்டுள்ள சாம்பலை அகல்களில் பரப்பி அதன் மேல் உலர்ந்த வில்லைகளை வைத்து அதன் மேல் அதே சாம்பல் கொண்டு மூடி மறைத்து மேலே அகல் இட்டு மூடி, சீலை செய்து, உலர்ந்த பின் புடமிட வேண்டும்.

ரசம், லிங்கம், வெள்ளைப் பாஷாணம், கந்தகம், தாளகம், மனோசீலை போன்ற வெப்பம் தாங்காத பொருட்களைச் சேர்த்து வேறு பொருட்களை பற்பமாக்கும் போது அகல்கள் சேருமிடத்தை நன்கு சீலைமண்ட பூசி புடமிடும் போது அவற்றை வீணாக்காமல் வெளியேற விடாது செய்திடல் வேண்டும்.

பொருட்களின் உருகுநிலை மற்றும் ஆவியாகும் நிலைகளுக்கு ஏற்பவே புடங்கள் வேறுபடுகின்றன. தங்கம், வெள்ளி, காரீயம், வெள்ளீயம், துத்தநாகம் இவைகள் பற்பமாக குறைந்த அளவு வெப்பம்தான் தேவைப்படுகிறது. தீ அதிகமானால் அவைகள் கற்கள் போல் கடினமாகிவிடுகின்றன. எனவே சிறு தீயில் ஆரம்பித்து அதிகத் தீயை தாங்கும் அளவிற்கு அவற்றை முறைப்படி பக்குவப்படுத்த வேண்டும்.

அப்பிரகம், அயம், மண்டூரம், பொன்னிமிளை, காந்தம், தாமிரம் போன்றவைகளுக்கு தீவிரமாக அதிக வெப்பம் தேவைப்படுகிறது. ரசம், தாளகம் போன்றவைகளுக்கோ மிகமிகக் குறைந்த உஷ்ணமே தேவைப்படுகிறது.





அப்பிரகம், தாமிரம், நாகம், அயம், தங்கம், வெள்ளி போன்றவை புடங்களின் எண்ணிக்கை அதிகமாக அதிகமாக குணத்தில் சிறந்து விளங்குகின்றன.

பவளம், முத்து, முத்துச் சிப்பி, பலகரை, சங்கு, ரத்தினங்கள், உபரத்தனங்கள் ஆகியன புடங்களின் எண்ணிக்கை அதிகமாக அதிகமாக நற்குணங்கள் இழக்கின்றன.

முத்துச் சிற்பி, சங்கு, பலகரை போன்ற பற்பங்களின் காரம் சிறிது அடங்க அவற்றை எலுமிச்சம் பழச்சாற்றில் ஊற வைத்து உலர்த்தி பொடித்து உபயோகித்தல் வேண்டும். இது அவற்றிலுள்ள நாக்கைப் புண்ணாக்கும் சுண்ணாம்புக்குச் சமமான கூரிய சக்தியைக் குறைக்கும்.

**பற்பங்களின் பண்புகள் :**

1. பொதுவாகப் பற்பங்கள் வெண்ணிறமுடையவை. விதி விலக்குகளும் உண்டு. உதாரணமாக தங்க பற்பம் இள மஞ்சள் நிறமுடையது.

2. பற்பங்கள் பெரும்பாலும் மணம், சுவை அற்றன.

3. உலோக பளபளப்பு சிறிதும் இல்லாமல் இருக்க வேண்டும்.

4. பற்பங்கள் நாட்கள் ஆக ஆக சக்தி வாய்ந்தவைகள் ஆகிவிடுகின்றன. பண்பியல் சோதனைகளை பற்பங்கள் நன்கு முடித்துள்ளனவோ என்று அறிய கீழ்க்காணும் சோதனை முறைகள் சித்த மருத்துவ நூலில் வரையறுக்கப்பட்டுள்ளன.

1. பற்பத்தில் உலோகத் தலுக்கு அதாவது மினுமினுப்பு சிறிது கூட இருத்தல் கூடாது.

2. பற்பத்தை ஆள்காட்டி விரலுக்கும் கட்டை விரலுக்கும் நடுவில் இட்டு தேய்த்தால் பற்பம் விரல்களின் ரேகை இடுக்குகளில் பதிய வேண்டும். அதாவது அவ்வளவு மென்மையாக இருக்க வேண்டும்.

3. சிறிதளவு பற்பத்தை நீரின் மேலிட்டால் உடனே அது நீரில் மூழ்கக் கூடாது. தண்ணீரில் மிதக்கும். மேற்படி பற்பத்தின் மீது





நெல் போன்ற தானிய மணியை மெதுவாக வைக்க அதையும் சுமந்து கொண்டு பற்பம் நீரில் மூழ்காமல் மிதந்து வர வேண்டும்.

4. பற்பத்தை தீயிலிட்டு ஊதினால் அதனின்றும் பற்பம் தன்னுடைய பழைய மூலப்பொருள் நிலைக்குத் திரும்பக் கூடாது.

5. பற்பத்திற்குப் பேதமான (வித்தியாசமான) சுவை இருக்கலாகாது.

**பாதுகாப்பு முறையும் காலக் கெடுவும் :**

சுத்தமான ஈரப்பதமற்ற கண்ணாடி குடுவையில் காற்றுப்புகா வண்ணம் இவற்றை மூடி வைத்தல் வேண்டும். பற்பங்கள் நூறு ஆண்டுகள் வரை எண்ணம் உடையவை.

## ஆமை ஓடு பற்பம்

### (சித்த வைத்திய திரட்டு)

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தித்த ஆமை ஓடு - 300 கி
2. உத்தாமணிச் சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

சுத்தி செய்த ஆமை ஓட்டை ஒன்றிரண்டாய் உடைத்து ஒரு சட்டியிலிட்டு உத்தாமணிச் சாற்றை நிரப்பி அகலால் மூடி சீலை செய்து 100 விரட்டிகளைக் கொண்டு புடமிடவும். ஆறிய பிறகு ஆமை ஓட்டைப் பொடித்து கல்வத்திலிட்டு உதிதாமணிச் சாற்றால் நன்கு அரைத்து வில்லைகள் தட்டி உலர்ந்த பின் 100 வரட்டிகளைக் கொண்டு புடமிட்டெடுக்க வெண்ணிற பற்பமாகும. தேவையானால் மேலும் ஒன்றிரண்டு புடங்களிடலாம்.

**அளவு :**

100 - 200 மி.கி. தேன் (அல்லது) பசும்பால் மற்றும் பொடுதலைக் குடீநீர், பேய்மிரட்டி இலைக் குடிநீர் மற்றும் ஓமக் குடிநீருடன் தினம் இரு வேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

இதனால் மாந்தம், குழந்தைகளின் மாத பேதி குணமாகும்.

## கந்தக பற்பம்

### (அப்துல்லா அனுபவ வைத்திய நவநீதம்)

**தேவையானவை :**

1. கந்தகம் - பற்பம் செய்யத் தேவையான அளவு
2. பால் - சுத்தி செய்ய தேவையான அளவு
3. குப்பைமேனிச்சாறு - தேவையான அளவு
4. மருதம்பட்டை செயநீர் - தேவையான அளவு
5. மருதம்பட்டை சாம்பல் - தேவையான அளவு

**செய்முறை :**

சுத்தி செய்த கந்தகத்தை ஓர் அகலில் வைத்து மருதம்பட்டை செயநீரால் சுருக்கிடவும். இது ஓரளவுக்கு கட்டாகும். பின் கந்தகத்தை கல்வத்திலிட்டு குப்பைமேனிச் சாற்றால் அரைத்து வில்லைகள் தட்டி உலர்ந்த பின் வில்லைகளை ஒரு அகலில் மருதம்பட்டை சாம்பலுக்குள் மறைத்து சிறு தீயால் எரிக்கவும். கந்த வாசனை வரும்போது எரிப்பை நிறுத்திக் குளிர வைக்கவும். ஆறிய பின் வில்லைகளை எடுத்துத் திருப்பி வைத்து மறுபடியும் சிறு தீயால் எரிக்கவும். பின் குளிர்ந்த வில்லைகளை எடுத்து கல்வத்திலிட்டு பொடித்து வைக்கவும்.

**அளவு :**

25 - 50 மி.கி. வரை நெய் அல்லது எண்ணெயுடன் தினம் இரு வேளைகளுக்குக் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

சொறி, சிரங்கு, தோல் மரப்பு, தேமல், தேகப்பட்டை, குஷ்டம், பௌத்திரம் ஆகியவை குணமாகும்.





## குங்கிலிய பற்பம்

### (சித்த வைத்திய திரட்டு)

**தேவையான பொருட்கள் :**

1. வெள்ளை குங்கிலியம் - 700 கி
2. இளநீர் - 7 எண்ணிக்கை

**செய்முறை :**

இளநீரை ஒரு பாத்திரத்திலிட்டு அதில் 700 கிராம் வெள்ளை குங்கிலியத்தை சேர்த்து அடுப்பிலேற்றி எரித்துக் கொண்டே கிளறி வர குங்கிலியம் உருகும்.

உருகிய குங்கிலியத்தை ஆற வைத்து உடைத்துப் போட்டு அதில் இளநீர் சேர்த்து முன்போல் ஏழுமுறைகள் செய்து எடுத்து கல்வத்திலிட்டு பொடித்து வைக்கவும்.

**அளவு :**

200-500 மி.கி. வரை நெய் அல்லது வெண்ணெய் அல்லது இளநீருடன் மற்றும் சீத வீரிய மூலிகைகளின் சாறுகள் (அல்லது) குடிநீருடன் தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

வெள்ளை, நீர் எரிவு, நீர்க்கட்டு, வெட்டை, சீதபேதி இவை குணமாகும்.

## முத்து சிப்பி பற்பம்

### (சித்த வைத்திய திரட்டு)

**தேவையான பொருட்கள் :**

1. முத்துச்சிப்பி - 150 கி
2. ஆடாதோடா இலைச்சாறு - தேவையான அளவு
3. நொச்சியிலைச் சாறு - தேவையான அளவு
4. நிலப்பனைச் சாறு - தேவையான அளவு





**செய்முறை :**

சுத்தி செய்த முத்துச் சிப்பியை கல்வத்திலிட்டு ஆடாதோடா இலைச்சாறு கொண்டரைத்து ஒரு புடம், நொச்சி இலைச்சாறு கொண்டரைத்து ஒரு புடம், நிலப்பனை சாறு கொண்டு அரைத்து புடம் இடவும். 150 கிராம் எடையுள்ள முத்துச் சிப்பியை புடமிட 30 வரட்டிகள் போதுமானது.

**அளவு :**

200 - 400 மி.கி. வீதம் நெய் அல்லது வெண்ணெயுடன் தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மூலம், பவுத்திரம் முதலியவை குணமாகும்.

## நண்டுக்கல் பற்பம்

### (சித்த வைத்திய திரட்டு)

**தேவையான பொருட்கள் :**

1. நண்டுக்கல் (அ) கல்கண்டு - தேவையான அளவு
2. கல் சுண்ணாம்பு - தேவையான அளவு
3. முள்ளங்கிச் சாறு - தேவையான அளவு
4. பூநீறு - தேவையான அளவு
5. சிறு பீளைச் சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

கல்நண்டை, கல் சுண்ணாம்பு தெளிவு நீர் மற்றும் பூநீறு கரைத்த நீர் இவற்றில் 3 மணி நேரம் கொதிக்க வைத்து தண்ணீரில் அலசி, சுத்தப்படுத்திக் கொள்ளவும். பின் சுத்தி செய்த கல்நண்டை முள்ளங்கிச் சாற்றில் 3 நாட்கள் அரைத்து புடமிடவும். பின் சிறுபீளை சாற்றில் 3 நாட்கள் புடமிடவும். பின் எடுத்து அரைத்து வைத்துக் கொள்ளவும்.





**அளவு :**

200 - 400 மி.கி. வீதம் முள்ளங்கி சாறு அல்லது சிறு பீளைச் சாற்றில் உட்கொள்ளவும்.

**தீரும் நோய்கள் :**

நீர்க்கடுப்பு நீங்கும். சிறுநீரக கல்லை கரைத்து, சிறுநீர் நன்கு பிரியும்.

## நத்தை பற்பம்

### (சித்த வைத்திய திரட்டு)

**தேவையான பொருட்கள் :**

1. நத்தை - புடமிடத் தேவையான அளவு
2. துத்தியிலைச்சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

நத்தைகளை அழுக்கு போக சுத்தம் செய்து ஒரு பானையில் பாதி அளவுக்கு அவற்றை நிரப்பி பானையை வாய்க்குப் பொருத்தமான ஒரு அகலைக் கொண்டு மூடி சீலை செய்து உலர்ந்த பின் புடமிடவும்.

ஆறிய பின் பானையில் இருக்கும் நத்தையின் சாம்பலை எடுத்துக் கல்வத்திலிட்டுத் துத்தியிலைச் சாற்றால் நன்கு அரைத்து வில்லைகளை தட்டி உலர்ந்த பின் புடமிடவும். இதே போல் பற்பம் வெண்மையாகும் வரை இரண்டு அல்லது மூன்று முறை புடமிடவும்.

**அளவு :**

200 - 400 மி.கி. வீதம் நெய் அல்லது வெண்ணெயுடன் தினமும் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

இரத்த மூலம், சீதபேதி, ஆசனக் கடுப்பு முதலியவை நீங்கும்.

## பவள பற்பம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. நற்பவளம் - 35 கி
2. கரும்பு ரசம் - 420 கி

**செய்முறை :**

சுத்தி செய்த நற்பவளத்தினை கரும்பு ரசம் விட்டு நன்றாக 7 நாள் அரைத்து வில்லை செய்து, உலர்த்தி ஓட்டிலிட்டு சீலை செய்து 34 வரட்டியில் புடமிட்டு, ஆறவிட்டு எடுக்க பற்பமாகும்.

**அளவு :** 50 மி.கி. தேனில் உட்கொள்ளவும்.

**தீரும் நோய்கள் :**

ஈளை, கபம், விக்கல், சுரம், சுவாசம் இவை தீரும்.

## பலகரை பற்பம்

**(தேரையர் கரிசல்)**

**தேவையான பொருட்கள் :**

1. பலகரை - 1.1 கி.கி.
2. எலுமிச்சம் பழம் - 50

**செய்முறை :**

சுத்தி செய்த பலகரையை கல்வத்திலிட்டு 50 எலுமிச்சம் பழங்களின் சாற்றால் நன்கு அரைத்து வில்லைகள் தட்டி உலர்ந்த பின் 150 வரட்டிகளைக் கொண்டு புடமிடவும். இவ்வாறு 2 அல்லது 3 புடங்களின் பலகரை வெண்ணிற பற்பமாகும்.

**அளவு :**

50 - 100 மி.கி. வரை நெய் அல்லது வெண்ணெயுடன் தினமும் இருவேளை கொடுக்கவும்.





**தீரும் நோய்கள் :**

வெட்டை, மேகசூடு, நீர்க்கட்டு, சூலை, சதையடைப்பு, விஷம் வயிறு விஷமித்தல் போன்ற நச்சு நிலைகள் நீங்கும்.

## நாக பற்பம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. நத்தை - பற்பம் செய்யத் தேவையான அளவு
2. குமரிச் சாறு - பற்பம் செய்யத் தேவையான அளவு
3. கரிசாலைச்சாறு - பற்பம் செய்யத் தேவையான அளவு

**செய்முறை :**

நத்தைகளை அடிகனத்த சட்டியிலிட்டு உலையில் வைத்து ஊதி நாகம் உருகும் போது கரிசாலைச் சாற்றை கொஞ்சம் கொஞ்சமாக சேர்த்து நாகம் பொடியாகம் வரை வறுத்து எடுக்கவும். இந்த நாகப் பொடியை கல்வத்திலிட்டு குமரிச்சாற்றல் நன்கு அரைத்து வில்லைகள் தட்டி உலர்ந்த பின் புடமிடவும். இதே போன்று மூன்று அல்லது நான்கு புடங்களிட பச்சை நிறம் மாறி பற்பமாகும்.

**அளவு :**

200 - 400 மி.கி. வீதம் வெண்ணெய் அல்லது நெய்யுடன் தினம் இரு வேளைகள் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

பௌத்திரம், பேதி, மூலம், இளைப்பிருமல், இருமல் ஆகியன குணமாகும்.

## நாக பற்பம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த படிகாரம் - 300 கி





2. கோழி முட்டையின் வெண்கரு - தேவையான அளவு

**செய்முறை :**

சுத்தி செய்த படிகாரத்தை கோழி முட்டையின் வெண்கருவால் இருபத்து நான்கு மணி நேரம் கல்வத்திலிட்டு நன்கு அரைத்து புகையாதபடி புடமிடவும்.

**அளவு :**

200 - 300 மி.கி. வீதம் தினம் இரு வேளைகளுக்கு நெய் அல்லது வெண்ணெயுடன் கொடுக்க, வெட்டை, இரத்த மூலம், நீரெரிவு, நீரடைப்பு, சதையடைப்பு, பெரும்பாடு, வாய்ப்புண் ஆகியவை குணமாகும்.

## சிருங்கி பற்பம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. மான் கொம்பு - 300 கி
2. அகத்தி இலைச்சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

மான் கொம்புகளை சிறு சிறு துண்டுகளாக வெட்டி ஒரு சட்டியிலிட்டு அகத்தி இலைச்சாற்றை ஊற்றி ஒரு நாள் முழுவதும் ஊற வைத்து தண்ணீர் விட்டு கழுவி எடுக்கவும். இவ்வாறு ஏழு நாட்கள் செய்ய மான் கொம்பு சுத்தியாகும். சுத்தி செய்த மான் கொம்புகளை அகலில் வைத்து மூடி சீலை செய்து 30 வரட்டிகளில் புடமிடவும். ஆறிய பின் அகலைப் பிரித்து மான் கொம்புகளை கல்வத்திலிட்டு அகத்தி இலைச்சாற்றால் நன்கு அரைத்து வில்லைகள் தட்டி பின்னர் 30 வரட்டிகளில் ஒன்று (அல்லது) இரண்டு புடங்களிட மான் கொம்பு பற்பமாகும்.

**அளவு :**

200 - 400 மி.கி. வீதம் வெண்ணெய் (அல்லது) நெய்யுடன் தினமும் இருவேளைகள் கொடுக்கவும்.





**தீரும் நோய்கள் :**

இருமல், மார்பு நோய், பித்தத்தால் வந்த நோய்கள், எலும்புருக்கி நோய் போன்ற நோய்கள் நீங்கும். மேலும் இது மார்பு வலிக்கு சிறந்த மருந்து.

## சிலாசத்து பற்பம்

**(அகஸ்தியர் வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. கற்பூர சிலாசத்து - 300 கி
2. சிறு செருப்படைச் சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

சுத்தி செய்த கற்பூர சிலாசத்தைக் கல்வத்திலிட்டு சிறு செருப்படைச் சாற்றால் நன்கு அரைத்து வில்லைகள் தட்டி உலர்ந்த பின் 50 வரட்டிகளில் புடமிடவும். இவ்வாறு மூன்று புடமிட சிலாசத்து பற்பமாகும்.

**அளவு :**

0.5 கி - 1 கி. வீதம் வெண்ணெய் அல்லது நெய்யுடன் தினம் இரு வேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மூத்திர எரிவு, வெள்ளை, நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு, பித்த வியாதிகள், உடலெரிச்சல் ஆகியவை குணமாகும்.

## சங்கு பற்பம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சங்கு - 1 கிலோ
2. எலுமிச்சம் பழச்சாறு - தேவையான அளவு
3. ஆகாயத் தாமரை கல்கம் - 5 கிலோ

4. ஆகாயத் தாமரைச் சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

சங்கினை எலுமிச்சம்பழ சாறு கொண்டு சுத்தி செய்த ஆகாயத் தாமரைக் கல்வத்தின் நடுவில் வைத்து உலர்ந்த பின் 50 வரட்டிகளில் புடமிடவும். பின்னர் பொடித்து, ஆகாயத் தாமரை சாற்றில் அரைத்து புடமிட்டு எடுக்கவும்.

**அளவு :**

100 - 200 மி.கி. பால் (அல்லது) நெய் (அல்லது) வெண்ணெயுடன் தினமும் இருவேளை கொடுக்க, வயிற்றுக் கோளாறுகள், தோல் நோய்கள் முதலியவை நீங்கும்.

**தீரும் நோய்கள் :**

நெய்யுடன் உண்ண உடல் பொன்னிற மடையும். துளசி சாற்றில் சாப்பிட நெருப்பு போல் காய்கின்ற வெப்பில் ஜன்னில் ஏற்பட்டு கபம் அதிகமாகவது தீரும். மற்றும் கண் புகைச்சலும் பைத்தியமும் நெய்யில் உட்கொள்ளத்தீரும்.

## வெங்கார பற்பம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. வெங்காரம் - 50 கி
2. கோழி முட்டை - தேவையான அளவு

**செய்முறை :**

சுத்தி செய்த வெங்காரத்தை கல்வத்திலிட்டு கோழி முட்டையின் வெண்கருவால் நன்கு அரைத்து வில்லை தட்டி உலர்ந்த பின் 25 வரட்டிகளில் புடமிட வெங்காரம் பற்பமாகும்.

**அளவும் தீரும் நோய்களும் :**

200 - 300 மி.கி. வீதம் வெண்ணெய் நெய் அல்லது இளநீருடன் தினமும் இரண்டு வேளைகளுக்கு கொடுக்க வெள்ளை, நீர்க்கட்டு சதையடைப்பு, நீரடைப்பு குணமாகும்.





## செந்தூரம்

உலோகங்கள், பாஷாணாதிகள், இரச, உபரசங்கள், உப்புகள் ஆகியவற்றை சில வகை மூலிகைச் சாறுகளிலாவது புகை நீரிலாவது அரைத்து புடமிட்டோ அல்லது எரித்தோ அல்லது வறுத்தோ அல்லது நன்கு அரைத்து வெயிலில் வைத்துச் சிவக்கும்படியாக செய்தோ எடுத்துக் கொள்வதே சித்த மருத்துவப்படி செந்தூரம் செய்யும் முறையாகும்.

இதில் முறைப்படி நன்கு சுத்தி செய்த மூலப் பொருள்களே செந்தூரம் செய்ய உபயோகப்படுத்தப்படுகின்றன.

செந்தூரங்கள் இரண்டு விதமான முறைகளில் செய்யப்படுகின்றன.

1. குப்பி எரிப்பு அல்லது பதங்கிக்கும் முறை.
2. புடமிடும் முறை

**1. குப்பி எரிப்பு (அல்லது) பதங்க முறை :**

இம்முறையில் இரசமும், கந்தகமும், பங்கு கொள்வதாக இருந்தால் முதலில் கந்தகத்தை கல்வத்திலிட்டு பொடித்தப் பின்னர் அத்துடன் ரசத்தை சேர்த்து இரண்டும் கஜ்ஜணி என்று கூறப்படும் கருமை நிறத்தூளாகும் வரை நன்கு அரைத்த பின்னரே அதில் மற்ற சரக்குகளை ஒவ்வொன்றாகக் கலந்து நன்கு அரைத்துக் கொள்ள வேண்டும்.

அவற்றுடன் வெள்ளி அல்லது தங்கம் சேர்வதாக இருந்தால் அவைகளை ரேக்காகச் செய்துகொண்டு முதலில் இரசத்துடன் சேர்த்தரைத்து அதன் பின்னர் கந்தகத்தையும் அதில் அரைத்து கஜ்ஜளியாக்கவும்.

இம்முறையில் காசிக்குப்பி அல்லது எனாமல் கிண்ணங்கள் உபயோகப்படுத்தப்படுகின்றன. இக்கலங்களைப் பயன் படுத்துவதற்கு முன்னர் அவைகளின் வாய் விளிம்பைத் தவிர மற்ற பாங்கள் மறையும் அளவிற்கு ஏழு சீலை மண் செய்த துணிகளைக் கொண்டு ஒன்றன் மேல் ஒன்றாக சீலை செய்து நன்கு உலர்த்திக் கொள்ள வேண்டும்.





பின்னர் அவற்றை ஒன்றின் மேல் ஒன்று கவிழ்ந்த நிலையில் வைக்கவும். பின்னர் அந்த ஜதைக் கிண்ணங்களின் உதட்டு விளிம்புகள் பொருந்தும் இடங்களில் மேலும் கீழுமாக சிறு துவாரமிட்டு அதன்வழியே கம்பியைச் செலுத்தி இரண்டையும் நன்றாகப் பிணைத்து கட்டிவிடவும். மருந்தை உள்ளே செலுத்தவும். பாகம் அறியும் வகைசெய்யும் விதத்தில் மேல் கிண்ணத்தில் நடுமையத்தில் சிறு துவாரம் ஒன்றிணையும் இட வேண்டும். சீலை செய்யும் போது இந்த துவாரத்தை மூடக்கூடாது.

ஓர் அகன்ற மண் பாத்திரத்தின் அடியில் 1/2 - 1 அங்குலம் உயரம் வரை மணலைப்பரப்பி அதன் மேல் பாதி அளவுக்கு பொடித்த மருந்துச் சரக்குள் நிரம்பிய சீலை செய்த கலங்களை வைத்துச் சுற்றிலும் மணல் கொண்டு மூடவும்.

பின் மண்பாத்திரத்தை அடுப்பிலேற்றி எரிக்கவும். செந்தூர செய்முறையில் 3 வித எரிப்பு முறைகள் பின்பற்றப்படும். விளக்கு சுடர் போன்ற எரிபொருள்களின் தீநாக்குகள் ஒன்று சேர்ந்து சிறிதளவில் எரிவதை தீபாக்கினி எனவும், மலர்ந்த தாமரைப்பூ போலத் தோன்றுமாறு பலதீநாக்குகள் தனித்துத் தோன்றும் வளர்ந்து சிறிது தீவிரமாக எரிவதை கமலாக்கினி எனவும் தீ நாக்குகள் இடைவெளியற்று அடப்பின் உட்புறம் முழுவதும் பரப்பி அடத்தியாக சப்தத்துடன் தீவிரமாக எரிவதை காடாக்கினி எனவும் கொள்ளவும். பெரும்பாலும் செந்தூரங்கள் மூன்று நாட்கள் எரிக்கப்படுகின்றன. அப்படி எரிக்க வேண்டியிருந்தால் முதல் 24 மணி நேரம் தீபாக்கினியாலும் அடுத்த 24 மணி நேரம் கமலாக்கினியாலும் அதற்கு அடுத்த 24 மணி நேரம் காடாக்கினியாலும் எரித்தல் வேண்டும்.

எரிக்கப்படும் சரக்குகளில் கலந்துள்ள கந்தகத்தின் அளவிற்கேற்ப அவை சீக்கிரமாகவோ, தாமதித்தோ உருக ஆரம்பிக்கும். உருகிய பின் கந்தகம் மஞ்சள் புகையாக வெளியேறும். தீயைமேலே குறிப்பிட்ட படி அதிகரித்த கமலாக்கினியாலும், காடாக்கினியாலும் எரிக்க வேண்டும். இவ்வாறு எரிக்கும் போது நீல நிற சுவாலைகள் வெளிப்படுவது முழுவதும் நின்றவுடன் இரும்புக் கம்பியை கலங்களின் வாய்வழியே செலுத்தி எடுத்துப் பார்க்கவும்.

உட்சென்ற பாகம் வெண்ணிறமாகத் தோற்றம் அளிக்கும். கந்தகம் நன்கு எரிந்து விடுவதால் அது சம்பந்தப்பட்ட கம்பியில் தோன்றுவதில்லை. இந்நிலை தான் செந்தூரம் பதங்கிக்கும் நிலை. இச்சமயத்தில் சிறிதும் தாமதமின்றி கலங்களின் வாய்க்குப் பொருத்தமான மூடிகளை வைத்து மூடி சீலை செய்யவும்.

இவ்விதமாக சீலை செய்த பின்னர் ஒன்று முதல் 2 மணி நேரம் வரை தொடர்ந்து காடாக்கினியால் எரித்துப் பின்னர் நிறுத்தவும். தானாகவே குளிர்ந்த பின்னர் அக்குப்பிகளை அல்லது எனாமல் கிண்ணங்களை எடுத்துச் சீலைகளைப் பிரித்து கிண்ணங்களின் மேல் பதிந்துள்ள செந்தூரத்தை உலோகத் தகட்டால் மெல்ல தட்டி பெயர்த்தெடுத்து செந்தூரத்தை சேகரித்து கல்வத்திலிட்டு நன்கு அரைத்து வைக்கவும்.

**புடமிடும் முறை :**

புடமிட்டுச் செய்யப்படும் செந்தூரங்களை பற்பங்களுக்குக் கூறப்பட்டுள்ள செய்முறையில் புடமிட வேண்டும். அதாவது சாறுகளையோ அல்லது கியாழங்களையோ குறிப்பிட்ட கால அளவு வரை நன்கு அரைத்து வில்லைகள் தட்டி உலர்ந்த பின்னர் வில்லைகளை முறைப்படி அகல்களில் வைத்து மேல் அகல் மூடி சீலை செய்து வைக்கவும்.

புடமிட நிர்ணயித்துள்ள அளவு வரட்டிகளில் பாதி அளவைக் குழியில் பரப்பி, அதன் மேல் நடுவே சீலை செய்து உலர்ந்த அகல்களை வைத்துமேல் மேல் மிஞ்சியுள்ள வரட்டிகளைப் பரப்பி மூடி மேல்பாகத்தில் நான்கு பக்கங்களிலும் தீயிடவும்.

புடம் நன்கு ஆறிய பின்னர் அகல்களை எடுத்து சீலையைப் பிரித்து அதனுள் இருக்கும் வில்லைகளை எடுத்து கல்வத்திலிட்டு நன்கு அரைத்து வைக்கவும்.

பொதுவாக செந்தூரங்கள் எல்லாம் சிவப்பாக இருந்தாலும் கௌரி சிந்தாமணி செந்தூரம் மட்டும் பூலாம்பழ நிறமாக இருக்கும். மேலே கூறப்பட்டுள்ள இருவகைச் செந்தூரங்களைத் தவிர எரிப்புச் செந்தூரம், வறுப்புச் செந்தூரம், சூரிய புடச் செந்தூரம் என்ற வகைகளும் உண்டு.





**பண்பும் பாதுகாப்பும் :**

இவற்றின் பண்புகள் பெரும்பாலும் பற்பங்களை ஒத்திருக்கும் செந்தூரங்களுக்கான சோதனை முறைகளும் பெரும்பாலும் பற்பங்களுக்கு உள்ளவற்றைப் போன்றவையாகும். செந்தூரங்கள் பெரும்பாலும் சிவப்பாகவே இருக்கும். விதி விலக்குகளும் உண்டு.

இவற்றைச் சுத்தமான ஈரப்பதமற்ற கண்ணாடிக் குடுவைகளில் காற்றுப்புகா வண்ணம் மூடி வைக்க வேண்டும். செந்தூரங்கள் 75 ஆண்டுகள் வரை வன்மையுடையன.

## அன்னபேதி செந்தூரம் நெ. 1

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. தூய்மை செய்த அன்னபேதி - தேவையான அளவு
2. காடி நீர் - தேவையான அளவு

**செய்முறை :**

சுத்தம் செய்த அன்னபேதியை கல்வத்திலிட்டு காடியைக் கொண்டு நன்கு அரைத்து மெல்லிய வில்லைகளாய்த் தடடி அகலிலிடடு சீலை செய்து இரண்டு அல்லது மூன்று புடமிட செந்தூரமாகும்.

**அளவு :**

100 - 200 மி.லி. வரை தினம் இருவேளை தேனுடன் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

சுரம், வெளுப்பு நோய், காமாலை, சோகை குணமாகும். நெய்யுடன் கொடுக்க சீதபேதி குணமாகும்.





## அன்னபேதி செந்தூரம் நெ. 2

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த அன்னபேதி - 40 கி
2. சுத்தி செய்த வெடியுப்பு - 40 கி
3. எலுமிச்சம்பழச்சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

முதல் இரண்டு சரக்குகளை கலந்து கல்வத்திலிட்டு எலுமிச்சாம்பழச்சாற்றினால் நன்கு அரைத்து வில்லைகளாகத் தட்டி உலர்ந்தபின் கஜபுடமிடவும். இதே போல் இரண்டாவது முறையும் செய்து புடமிட்டெடுக்க செந்தூரமாகும்.

**அளவு :**

100 - 200 மி.கி. வரை தேனுடன் தினம் இருவேளைகள் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

சோகை, பாண்டு, காமாலை முதலிய நோய்கள் தீரும்.

## அயகாந்தச் செந்தூரம் நெ. 3

**(அகஸ்தியர் செந்தூரம் - 300)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த அயம் - 80 கி
2. சுத்தி செய்த கந்தகம் - 80 கி
3. சுத்தி செய்த காந்தம் - 20 கி
4. சுத்தி செய்த லிங்கம் - 10 கி
5. சுத்தி செய்த வெங்காரம் - 10 கி
6. சுத்தி செய்த படிகாரம் - 10 கி





7. சுத்தி செய்த பூநீறு - 10 கி
8. சுத்தி செய்த சோற்றுப்பு - 10 கி
9. சுத்தி செய்த இந்துப்பு - 10 கி
10. சுத்தி செய்த நவாச்சரம் - 10 கி
11. சுத்தி செய்த கற்பூரம் - 10 கி
12. எலுமிச்சம்பழ சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை நன்கு பொடித்து அரைத்து ஒன்று சேர்ந்து கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் இரண்டு நாட்கள் அரைத்து வில்லைகளாகத் தட்டி உலர்த்த பின் 100 வரட்டிகளில் புடமிடவும். செந்தூரம் சிவப்பு நிறமாக இருக்க வேண்டும். செந்தூரத்தில் நிறம் சிவப்பாக அமையாவிடின் மற்றொரு முறை புடமிடச் செந்தூரமாகும்.

**அளவு :**

100 - 20 மி.கி. வரை தேனுடனோ, நெய்யுடனோ அல்லது பஞ்ச தீபாக்கினிச் சூரணத்துடன் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

எல்லா வகையான பாண்டு நோய்களும் குணமாகும்.

## அயகாந்த செந்தூரம் நெ. 2

**(அனுபவ வைத்திய முறை)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த இரும்புத்தூள் - 100 கி
2. சுத்தி செய்த கந்தகம் - 100 கி
3. சுத்தி செய்த லிங்கம் - 100 கி
4. மஞ்சள் கரிசாலைச் சாறு - தேவையான அளவு
5. வெடியுப்பு திராவகம் - தேவையான அளவு

**செய்முறை :**

முதல் மூன்று சரக்குகளை கல்வத்திலிட்டு நன்கு பொடித்து பின்னர் தயார் செய்த வெடியுப்பு திராவகம் கொண்டும் மஞ்சள் கரிசாலை சாறு கொண்டும் தனித்தனியே நன்கு அரைத்துப் பொருத்தமான அகல் கொண்டு மேற்கூறிய எரிப்புச் சட்டியை மூடி சீலை செய்து உலர்ந்த பின் அடுப்பிலேற்றி 12 மணி நேரம் தீபாக்னி, கமலாக்கினிகளால் அடுத்த 12 மணி நேரம் கமலாக்கினி, காடாக்னியியாலும் அடுத்த 12 மணி நேரம் தொர்ந்து காடாக்கினியாலும் எரிக்கவும். பிறகு குளிர்ந்த கலன்களைப் பிடித்து அதனுள் அகலில் பதங்கியிருக்கும் பதங்கத்தையும் அடியில் தங்கியுள்ள செந்தூரத்தையும் தனித்தெடுத்து செந்தூரத்தை மட்டும் நன்கு பொடித்து உபயோகிக்கவும்.

**அளவு :**

*100 - 200* மி.கி. வரை தேன் அல்லது நெய்யுடன் தினமும் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

சகலவித பாண்டு ரோகங்களும் மற்றும் நீராம்பல் தீரும்.

## ஆறுமுகச் செந்தூரம்

***(சித்த வைத்திய திரட்டு)***

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த கந்தகம் - 90 கி
2. சுத்தி செய்த காந்தம் - 70 கி
3. அயப்பொடி - 120 கி
4. இந்துப்பு - 40 கி
5. வெங்காரம் - 80 கி
6. இரசம் - 50 கி
7. கற்றாழைச் சாறு - தேவையான அளவு





**செய்முறை :**

இரசத்துடன் கந்தகத்தைச் சேர்த்து அரைத்து அத்துடன் மற்ற சரக்குகளையும் சேர்த்து கற்றாழைச் சாற்றை விட்டு நன்றாக உறவாகும்படி 5 நாள் வரை அரைத்து வில்லை தட்டி நன்றாக காய வைக்கவும். பின்னர் அதனை வாய் அகன்ற சட்டியில் வைத்து வாய் பொருத்தமான மற்றொரு சட்டியில் மூடி ஏழு சீலை மண்வன்மையாய் செய்து 24 மணி நேரம் அடுப்பிலிட்டு எரித்து ஆறிய பின் எடுத்துப் பார்க்க செந்தூரம் மாதுளம் பூ நிறம் பெற்றிருக்கும். இதனைப் பொடித்துக் குப்பியில் அடைக்கவும்.

**அளவு :**

*100 - 200* மி.கி. வரை தேன், திரிகடுகு சூரணம் சேர்த்து தினம் இரு வேளைக்கு கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

வெளுப்பு, கிரந்தி, குடல் வாதம், தொண்டை வலி, மூலம், கண்டமாலை,வறட்சி, சூலை ஆகியன குணமாகும்.

## சண்ட மாருத செந்தூரம்

***(சித்த வைத்திய திரட்டு)***

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த லிங்கம் - 10 கி
2. சுத்தி செய்த பூரம் - 20 கி
3. சுத்தி செய்த வீரம் - 10 கி
4. சுத்தி செய்த கந்தகம் - 10 கி
5. சுத்தி செய்த இரச செந்தூரம் - 10 கி

**செய்முறை :**

சுத்தி செய்த பொருட்களை கல்வத்திலிட்டு பொடித்து முட்டையின் வெண்கரு விட்டு 5 நாள் வரை நன்கு அரைத்து பின் பால் சேர்க்காமல் விழுது போன்று இருக்கும் மருந்து பொடியாகும்.





வரை அரைத்து எடுக்கவும். முதலில் கந்தகம் பின்னர் வீரம் மூன்றாவதாய் பூரம், நான்காவதாய் இரசச் செந்தூரம், இறுதியில் லிங்கம் என்ற வரிசைப்படி சேர்த்து அரைத்து பவள நிறம் வரும் வரை அரைக்கவும்.

**அளவு :**

*50 - 100* மி.கி. வரை தேன், இஞ்சிச்சாறு, பனை வெல்லம், திரிகடுகு, சூரணம் சேர்த்து தினம் இரு வேளைகள் வீதம் குறைந்தது 5 நாட்களுக்குக் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

சகலவித பாண்டு ரோகங்களும் மற்றும் நீராம்பல் தீரும்.

## கௌரி சிந்தாமணி

***(அகஸ்தியர் வைத்திய காவியம் - 1500)***

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த இரசம் - 30 கி
2. சுத்தி செய்த கந்தகம் - 30 கி
3. பொரித்த வெங்காரம் - 20 கி

**செய்முறை :**

முதலில் கந்தகத்தை கல்வத்திலிட்டு நன்கு அரைத்துக் கொள்ளவும். பிறகு இரசத்தைச் சிறிது சிறிதாக சேர்த்து எல்லா மருந்தும் கருப்பாகும் வரை அரைத்துப் பொரித்து வெங்காரத்தைச் சேர்க்கவும்.

அரைத்து கெட்டியான துணியில் பாக்களவு, உருண்டையான மூட்டைகள் கட்டி சீலை செய்து மண் சட்டியில் பரப்பியுள்ள மணலுக்குள் வரிசையாக வைத்து மூடி 10 வரட்டிகளை மேலே வைத்துப் புடமிட்டு எடுத்து ஆற வைக்கவும்.

பிறகு மேல் கவசம் நீக்கி மருந்தை எடுத்து நன்கு அரைத்து வைக்கவும். மருந்து பூலாம்பழம் போன்று கருப்பாயிருக்கும்.





**அளவு :**

*100 - 200* மி.கி. வீதம் இரு வேளைகளுக்கு நாற்பது நாட்கள் வரை தேன், திரிகடுகு சூரணத்துடன் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

திரிகடுகு சூர்ணமும், தேனும் சேர்த்துக் குழைத்துக் கொடுக் சூலை - 18, வாயு - 26, குன்மம் - 16, குடலிளைப்பு நோய் (உளை மாந்தம்) தீராச் சுரங்கள், எலிக்கடி, மாந்தாரகாசம், ஈளை இருமல், எலும்புருக்கி, காசசுவாசம், சுரமாந்தை, எருவாய் மூலம், அரையாப்பு, காமாலை, ஆண்குறிச்சூலை, பெண்குறிச்சூலை, விரைவாதம், தொடை வாழை பதது வகை, விப்புருதி முதலியவை குணமாகும்.

## லிங்கச் செந்தூரம் - நெ. 1

***(போகர் வைத்தியம் - 700)***

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த இலிங்கம் - 40 கி
2. ஆற்றுத் தும்மட்டிச் சாறு - 2 லி

**செய்முறை :**

சுத்தி செய்த லிங்கத்தை சட்டியிலிட்டு ஆற்றுத் தும்மட்டிச் சாறு சிறிது சிறிதாகக் கலந்து சாறு தீரும் வரை சுருக்கிட்டுக் கழுவி எடுத்துத் தூள் செய்து வைக்கவும்.

**அளவு தீரும் நோய்களும் :**

*50 - 100* மி.கி. வரை தேன் சேர்த்து தினம் இரு வேளைகளுக்கு கொடுக்க குளிர்சுரம், வாத, கப நோய்கள், தோல் நோய்கள், மேக நோய்கள் இவை குணமாகும்.

## லிங்கச் செந்தூரம் நெ. 2

**(சித்தி வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த லிங்கம் - 30 கி
2. சாம்பிராணி - 210 கி
3. கற்பூரம் - 210 கி
4. மஞ்சணத்திப்பட்டை சூரணம் - தேவையான அளவு

**செய்முறை :**

சாம்பிராணி மற்றும் கற்பூரம் இரண்டையும் நன்கு அரைத்து மெழுகு பதத்தில் எடுத்து அதனை ஒரு நீல நிறத் துணியில் தடவி லிங்கக் கட்டிக்குச் சுற்றி எரிக்கவும். எரிந்து கருகி சீலையை நீக்கி விட்டு ஆறிய பிறகு மறுபடியும் இவ்விதமாக 5-7 முறை மேற்படி மெழுகை துணியில் தடவி லிங்க கட்டிக்குச் சுற்றி எரித்து ஆறிய பின் கழுவி உலர்த்தவும். பின்னர் ஒரு அகலில் இலிங்கத்தை வைத்து நுணாபட்டைச் சூரணம் கொண்டு கீழும் மேலுமாக வைத்து மூடி சீலை செய்து 5 வரட்டிகளைக் கொண்டு புடமிட்டெடுக்கவும். வில்லைகளைக் கல்வத்திலிட்டு அரைத்து வைக்கவும்.

**அளவு :**

50 - 100 மி.கி. வரை தேன் அல்லது அனுபானங்களுடன் தினம் இருவேளைகள் கொடுக்க தோல் நோய்கள் வாத, கப நோய்கள், குளிர்சுரம் எல்லாதவிதமான சுரம் ஆகியவை தீரும்.

## மண்டூரச் செந்தூரம்

**(அகஸ்தியர் வைத்திய ரத்தின சுருக்கம்)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த மண்டூரம் - 100 கி
2. சுத்தி செய்த ரசம் - 10 கி





3. சுத்தி செய்த கந்தகம் - 10 கி
4. சுத்தி செய்த இலிங்கம் - 10 கி
5. உப்பு - 10 கி
6. வெங்காரம் - 10கி
7. எலுமிச்சம்பழச்சாறு - தேவையான அளவு
8. கரிசாலைச்சாறு - தேவையான அளவு
9. சிறு செருப்படைச்சாறு - தேவையான அளவு
10. கருஞ்செம்படைச்சாறு - தேவையான அளவு
11. அரசம்பட்டைச் சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

1 - 6 வரையுள்ள சரக்குகளை 7 - 11 வரையிலான சாறுகளாக தனித்தனியாக நன்கு அரைத்து வில்லைகள் தட்டி உலர்த்தி ஒவ்வொரு சாற்றிலும் 100 வரட்டியில் 10 புடமிட்டெடுக்கவும்.

**அளவு :**

50 - 100 மி.கி. வரை தினமும் இரு வேளைகளுக்கு தேன், திரிகடுகு சூரணம் சேர்த்துக் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

விஷபாண்டு, காமாலை, பாண்டு நோய்கள், அஜீரணம், அன்னதுவேசம், தீராவாந்தி,விக்கல், வாய்வு, நீர்தோஷம் ஆகியன குணமாகும்.

## படிக லிங்கச் செந்தூரம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. படிகாரம் - 80 கி
2. சுத்தி செய்த லிங்கம் - 10 கி





3. கடுக்காய் பூ - 10 கி
4. காட்டத்திப் பூ - 30 கி

**செய்முறை :**

படிகாரம், லிங்கம் இரண்டையும் தனித்தனியே பொடித்து ஒன்று சேர்த்து கல்வத்திலிட்டு ஒரு லிட்டர் தண்ணீரில் கடுக்காய் பூ மற்றும் காட்டத்திப்பூ போட்டு 125 மி.லி. ஆக சுண்ட வைத்து வடிகட்டிய கியாழத்தால் இரண்டு நாட்கள் வரை நன்கு அரைத்து நிழலில் உலர்த்தி பொடித்து வைக்கவும்.

**அளவு :**

1/2 முதல் 1 கிராம் வரை தினமும் இரு வேளைக்கு நெய் அல்லது வெண்ணெய் சேர்த்துக் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

அதிசாரம், சீதபேதி, பெரும்பாடு நோய்கள் விலகும்.

## பூர்ண சந்திரோதயம்

**(தேரையர் கரிசல் - 300)**

**தேவையான பொருட்கள் :**

1. தங்க ரேக் - 10 கி
2. கந்தகம் - 160 கி
3. செம்பருத்திச்சாறு - தேவையான அளவு
4. வாழைக்கிழங்கு சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

தங்க ரேக்கை இரசத்தில் தொந்திக்கச் செய்து நன்கு கலந்த பிறகு அத்துடன் கந்தகத்தைச் சேர்த்து நன்கு அரைத்து கஜ்ஜிளி செய்து வைக்கவும். பிறகு இதை கல்வத்திலிட்டு செம்பருத்திப் பூச்சாற்றால் இரண்டு நாட்களும், வாழைக்கிழங்கு சாற்றால் இரண்டு நாட்களும் அரைத்து உலர்ந்த பின் தூள் செய்து முறைப்படி சீலை செய்த காசிக் குப்பியில் அடைத்து, மணல் சட்டியில் வைத்து முத்தீயால் மூன்று





நாட்கள் விடாமல் எரித்து ஆறிய பின்னர் செந்தூரத்தை எடுத்து அரைத்து வைக்கவும்.

**அளவு :**

100 - 200 மி.கி. வரை தேன் அல்லது கற்பூராதிச் சூரணம் அல்லது வெற்றிலைச்சாறு சேர்த்து தினமும் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மலச்சிக்கல், எலிக்கடி, பித்தம், கபம், காமாலை, குடைச்சல், கெட்ட சதை வளர்தல் ஆகிய நோய்கள் தீரும்.

## படிகாரச் செந்தூரம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. பொரித்த படிகாரம் - 100 கி
2. பூங்காவி - 100 கி

**செய்முறை :**

இரண்டையும் கல்வத்திலிட்டு நன்கு அரைத்து வைக்கவும்.

**அளவு :**

200 - 400 மி.கி. வீதம் தினம் இருவேளை வெண்ணெய் (அல்லது) நெய் சேர்த்துக் கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :**

சீதபேதி, பெரும்பாடு நோய்கள் விலகும்.

## மாத்திரை

மாத்திரையை உருண்டை எனவும் குளிகை எனவும் கூறுவர். சிலவகை மருந்துச் சரக்குகளை சுத்தி செய்து சிலவகை மூலிகைச் சாற்றினால் குறிப்பிட்ட அளவுள்ள எடையில் வடிவத்தில் உருட்டி நிழலில் உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்வதே மாத்திரையாகும்.

முதலில் தூய்மை செய்ய வேண்டிய சரக்குகளை தூய்மை செய்தும் சுத்தி முறைப்படி சுத்தி செய்ய வேண்டியவற்றை சுத்தி செய்ய வேண்டும். மருந்து சரக்குகளை தனித்தோ அல்லது ஒன்றாக சேர்த்து இடித்துச் சலித்துகல்வத்திலிட்டு தண்ணீர் அல்லது வேறுவகை சாறுகளை சேர்த்துக் குறிப்பிட்ட காலம் வரை நன்றாக அரைத்து விழுதாகி உருட்டும் பக்குவம் வந்தபின் அளவான மாத்திரைகளாக உருட்டும் போது விரல்களில் சிறிது நெய் தடவிக் கொள்ளலாம். இந்த மாத்திரைகளை முறைப்படி நிழலிலோ அல்லது சூரிய வெளிச்சத்திலோ உலர்த்தி வைக்க வேண்டும்.

அரைத்த மருந்து மாத்திரையாக உருட்டப்படும் போது விரல்களுக்கு இடையில் ஒட்டாமலிருப்பதே மாத்திரை உருட்டும் பக்குவம் ஆகும்.

மாத்திரைகள் தங்களுடைய நிறத்தையோ மணத்தையோ சுவையையோ, உருவத்தையோ இழக்காமல் இருத்தல் வேண்டும். மாறுபாடு அடைந்தால் அவற்றை பயன்படுத்தக் கூடாது.

### பால சஞ்சீவி மாத்திரை

**(அகஸ்தியர் பால வாகடம்)**

**தேவையான பொருட்கள் :**

1. சுக்கு - 10 கி
2. மிளகு - 10 கி
3. திப்பிலி - 10 கி
4. பொரித்த வெங்காரம் - 10 கி
5. சுத்தி செய்த லிங்கம் - 10 கி





6. எலுமிச்சம்பழச்சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

அனைத்து சரக்குகளையும் எலுமிச்சம்பழச்சாறில் மூன்று மணி நேரம் நன்கு அரைத்துப் பதத்தில் 700 மி.கி. மாத்திரையாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

மாசி பத்திரி பட்டையியல் சாற்றுடன் திரிகடுகு சூரணம் 1 முதல் 2 கிராம் அத்துடன் ஒரு மாத்திரையும் கலந்து கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

மந்தம், கணம், வயிற்றோட்டம், பித்தம், வாந்தி, இருமல் இவை தீரும்.

கோரோசனையுடன் சேர்த்துக் கொடுக்க சுரம், இருமல் தீரும். சாதிக்காய், புளியங்கொட்டைத் தோல் பொடியுடன் சேர்த்துக் கொடுக்க மூலம் தீரும்.

### குங்குமப் பூ மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. குங்குமப் பூ - 100 கி (கியாழத்திற்கு)
2. சுக்கு - 100 கி
3. வெண் மிளகு - 100 கி
4. வால் மிளகு - 100 கி
5. கோஷ்டம் - 100 கி
6. ஓமம் - 100 கி
7. சுத்தி செய்த லிங்கம் - 100 கி
8. கோரோசனை - 100 கி
9. திப்பிலி - 100 கி





10. இலவங்கம் - 100 கி
11. ஏலம் - 100 கி
12. வெங்காரம் - 100 கி
13. குங்குமப்பூ - 100 கி
14. சாம்பிராணி பூ - 100 கி

**செய்முறை :**

அனைத்தையும் கல்வத்திலிட்டு பொடித்து குங்குமப்பூ கியாழத்தில் மூன்று மணி நேரம் நன்கு அரைத்து 50 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பயன்படுத்தவும்.

**அளவு :**

1 - 2 மாத்திரைகள் தேனுடன் இரு வேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

நீர்க்கோவை, ஜலதோஷம், நாட்பட்ட மலக்கட்டு, அதிக வியர்வை ஆகியவை தீரும்.

### மேகநாத குளிகை

**(அகஸ்தியர் சில்லரை கோவை)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த லிங்கம் - 30 கி
2. கருஞ்சிவதை வேர் - 30 கி
3. வசம்பு - 30 கி
4. சுக்கு - 30 கி
5. இந்துப்பு - 30 கி
6. வாய்விடங்கம் - 30 கி
7. ஓமம் - 30 கி
8. பொரித்த பெருங்காயம் - 30 கி





9. வெள்ளை காட்டாமணக்கு வேர்ப்பட்டை - 30 கி
10. எலுமிச்சம்பழச்சாறு - தேவையான அளவு
11. நேர்வாளம் - 30 கி
12. வெங்காரம் - 30 கி

**செய்முறை :**

1 - 9 வரையுள்ள சரக்குகளை எடுத்துத் தனித்தனியே பொடித்துச் சேர்த்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றினால் நன்கு அரைக்கவும். பின்பு அதனுடன் சுத்தி செய்த நேர்வாளத்தை சேர்த்து அரைத்து மாத்திரை செய்யக் கூடிய பதத்தில் 100 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி வைக்கவும்.

**அளவு :**

2 - 4 மாத்திரைகள் வீதம் சுக்கு கியாழத்துடன் இரு வேளைகள் கொடுக்க குளிர் சுரம்,வாயு, பித்த நீர், பாண்டு சோகை, வயிற்று வலி, செரியாமை, மலப்பந்தத்துடன் கூடிய சுரத்தில் உண்டாகம். மலக்கட்டு நீங்கி நோய் தணியும்.

### மகா ஏலாதிக் குளிகை

**(அகஸ்தியர் வைத்திய காவியம்)**

**தேவையான பொருட்கள் :**

1. ஏலம் - 10 கி
2. இலவங்கம் - 10 கி
3. வால்மிளகு - 10 கி
4. சந்தனம் - 10 கி
5. வெட்டி வேர் - 10 கி
6. விலாமிச்சம் வேர் - 10 கி
7. அகில் கட்டை - 10 கி
8. தாமரை மகரந்தம் - 10 கி

9. தாமரைவளையம் - 10 கி
10. அதிமதுரம் - 10 கி
11. அக்கரகாரம் - 10 கி
12. நாட்டு அமுக்கரா - 10 கி
13. குங்குமப்பூ - 10 கி
14. பச்சை கற்பூரம் - 10 கி
15. கஸ்தூரி - 10 கி
16. மான் கொம்பு - 10 கி
17. சடாமாஞ்சில் - 10 கி
18. உருத்திராட்ஷம் - 10 கி
19. கோரோசனை - 10 கி
20. அம்பர் - 10 கி
21. சாம்பிராணிப் பூ - 10 கி
22. அப்பிரகப் பற்பம் - 10 கி
23. வெள்ளி பற்பம் - 10 கி
24. முத்து பற்பம் - 5 கி
25. பவள பற்பம் - 5 கி
26. மாதுளம் பழச்சாறு - தேவையான அளவு
27. இளநீர் - தேவையான அளவு
28. ஆவின் பால் - தேவையான அளவு

**செய்முறை :**

தூய்மை செய்ய வேண்டிய சரக்குகளை தூய்மை செய்து கொண்டு கடினமான சரக்குகளை தனித்தனியே பொடித்துச் சேர்த்து கல்வத்திலிட வேண்டும்.

மாதுளம் பழச்சாறு, இளநீர் மற்றும் ஆவின்பால் ஒவ்வொன்றிலும் 24 மணி நேரமும் அரைத்து 50 மி.கி. மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்தவும்.





**அளவு :**

1-2 மாத்திரைகள் வீதம் இரு வேளைக்கு 45 நாட்கள் இளநீர் அல்லது பாலும் சர்க்கரையும் அல்லது தேன் அல்லது பழ ரசத்துடன் சேர்த்துக் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

கண் நோய், கண் காசம், காமாலை, பாண்டு, சோகை, கல்லடைப்பு, கடுங்காய்ச்சல், தொண்டைக்கட்டு, நீரிழிவு, கசப்புடன் கூடிய வாந்தி ஆகியன குணமாகும். ஆறுவாரங்கள் தொடர்ந்து உட்கொண்டால் முக அழகு, நல்லதொனி நீண்ட ஆயுள் ஆகியன உண்டாகும்.

## முருக்கன் விதை மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சுக்கு - 10 கி
2. மிளகு - 10 கி
3. திப்பிலி - 10 கி
4. கடுகு ரோஹினி - 10 கி
5. முருக்கன் விதை - 10 கி
6. சீரகம் - 10 கி
7. சுத்தி செய்த நேர்வாளம் - 60 கி

**செய்முறை :**

மேற்படி சரக்குகளைப் பொடித்து கல்வத்திலிட்டு தண்ணீர் சேர்த்து அரைத்து 500 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி வைக்கவும்.

**அளவு :**

1 முதல் 2 மாத்திரைகள் வீதம் படுக்கும் முன் தண்ணீரும்,





சர்க்கரையும் அல்லது பனை வெல்லமும் சேர்த்துக் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

குடற்புண்கள், மாந்தம், வயிறு உப்புசம், கபக்கட்டு, சீதக்கட்டு முதலியன குணமாகும்.

## நீர்கோவை மாத்திரை

**(சித்தி வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. கப்பு மஞ்சள் - 40 கி
2. கஸ்தூரி மஞ்சள் - 40 கி
3. பொரித்த வெங்காரம் - 40 கி
4. சாம்பிராணி - 20 கி
5. மிளகு - 20 கி
6. சுக்கு - 20 கி
7. ஜாதிக்காய் - 20 கி
8. ஓமம் - 20 கி
9. இலவங்கம் - 20 கி
10. கற்பூரம் - 20 கி
11. எலுமிச்சம்பழச்சாறு - தேவையான அளவு

**செய்முறை :**

எல்லா சரக்குகளையும் சூரணித்து கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றினால் 6 மணி நேரமோ அல்லது பழச்சாறு வற்றும் வரையோ அரைத்து 500 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி வைக்கவும்.

**அளவு / தீரும் நோய்கள் :**

வெளி உபயோகமாக இதனை தண்ணீரில் இழைத்து நெற்றியில்





பற்று போடத் தலைவலி, தலையில் நீரேற்றம், ஜலதோஷம் ஆகியவை நீங்கும்.

## சுவாச குடோரி மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. வெள்ளருக்கன் பூ - 60 கி
2. மிளகு - 60 கி

**செய்முறை :**

வெள்ளருக்கன் பூ மற்றும் மிளகை கல்வத்திலிட்டு நன்கு அரைத்து 200 மி.கி. மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்தி வேண்டும்.

**அளவு :**

1-2 மாத்திரைகள் வீதம் தாளீச பத்திரிக் குடிநீருடன் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

இளைப்பு இருமல் போன்ற நோய்கள் குணமாகும்.

## வெங்கார மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. பொரித்த வெங்காரம் - 100 கி
2. சுக்கு - 100 கி
3. மிளகு - 100 கி
4. திப்பிலி - 100 கி
5. இந்துப்பு - 100 கி
6. சுத்தி செய்த நேர்வாளம் - 100 கி

7. சுத்தி செய்த காந்தம் - 100 கி

8. பெருங்காயம் - 100 கி

9. கழற்சிப்பருப்பு - 100 கி

**செய்முறை :**

அனைத்தையும் எடுத்துப் பொடித்து கல்வத்திலிட்டு தண்ணீர் சேர்த்து அரைத்து உண்டை செய்து மேல்மூடி இட்டு சீலை செய்து குக்குட புடமிட்டெடுத்து ஆறிய பிறகு மருந்தை கல்வத்திலிட்டு கடுக்காய் கியாழத்தால் நன்கு அரைத்து 500 மி.கி. மாத்திரைகளாக உருட்டி வைக்கவும்.

**அளவு :**

1-2 மாத்திரைகள் இரு வேளைகள் சாப்பிடவும்.

**தீரும் நோய்கள் :**

விளக்கெண்ணெயில் சேர்த்துக்கொடுக்க பேதியாகும். தண்ணீரில் கலந்து கொடுக்க குன்மம், சூலை, அண்டவாதம், பாண்டு, மகோதரம் இவை தீரும்.

## வசந்த குசுமகரம் மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த லிங்கம் - 25 கி
2. பொரித்த வெங்காரம் - 25 கி
3. சுத்தி செய்த கந்தகம் - 25 கி
4. திப்பிலி - 25 கி
5. கோஷ்டம் - 25 கி
6. அக்கரகாரம் - 25 கி
7. அதிமதுரம் - 25 கி
8. கோரேசனை - 10 கி





9. குங்குமப்பூ - 10 கி

10. பச்சை கற்பூரம் - 10 கி

11. லவங்கம் - 10 கி

**செய்முறை :**

சுத்தி செய்த லிங்கம், பொரித்த வெங்காரம், சுத்தி செய்த கந்தகம், திப்பிலி, கோஷ்டம் போன்ற அனைத்து சரக்கினையும் முறைப்படி கல்வத்திலிட்டு பொடித்து இஞ்சிச் சாற்றினால் இரண்டு நாட்களும் பசும்பாலால் இரண்டு நாட்களும் நன்கு அரைத்து 100 மி.கி. மாத்திரைகளாக உருட்டி வைக்கவும்.

**அளவு :**

2-5 மாத்திரைகள் வீதம் தினம் இரு வேளைக்கு தேன், இஞ்சிச் சாறு அல்லது பசும்பாலுடன் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

நாட்பட்ட சுரங்கள், கபகாசம், தாகம், தும்மல், ஏப்பம், சிறுநீர் நோய்கள் முதலியவை நீங்கும்.

## வாத ராஷசன் மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. ஏலம் - 500 மி.கி.
2. கந்தகம் - 500 மி.கி.
3. அப்பிரக பற்பம் - 500 மி.கி.
4. தாமிர பற்பம் - 500 மி.கி.
5. சீந்தில்சாறு - 500 மி.கி.
6. துளசிச்சாறு - 100 மி.கி.
7. நெல்லிக்காய் சாறு - 100 மி.கி.
8. கடுக்காய் - 100 மி.கி.





9. தான்றிக்காய் - 100 மி.கி.

10. சாரணைச்சாறு - 100 மி.கி.

11. சுத்தி செய்த காந்தம் - 500 மி.கி.

12. சுத்தி ரசம் - 500 மி.கி.

13. சித்திர மூல வேர்ப்பட்டை குடிநீர் - தேவையான அளவு

**தயாரிக்கும் விதம் :**

1-4 வரையுள்ள சரக்கினை சுத்திகரித்து கல்வத்திலிட்டு பொடித்து தனித்தனியே வெள்ளைச் சாரணை சாற்றாலும், சீந்தில் குடிநீரினாலும் முறையே 6 மணி நேரம் அரைத்து ஒரே உருண்டையாக உருட்டி சாரணை இலை கற்கத்தின் நடுவில் வைத்து இலை கருகும்படி ஒரு இலகுபுடம் போட்டு ஆறவிட்டு எடுத்து சித்தி மூல வேர்ப்பட்டை குடிநீரினால் 12 மணி நேரம் அரைத்து 100 மி.கி. அளவாக மாத்திரைகள் உருட்டி நிழலில் உலர்த்தவும்.

**அளவு :**

1-2 மாத்திரைகள் தண்ணீருடன் அருந்தவும்.

**தீரும் நோய்கள் :**

ஜன்னி, வாதம் முதலியன தீரும்.

## கபாட மாத்திரை

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. ஜாதிக்காய் - 200 கி
2. ஜாதி பத்திரி - 200 கி
3. பெருங்காயம் - 200 கி
4. சீரகம் - 200 கி
5. அதிவிடயம் - 200 கி
6. இலவங்கம் - 200 கி





7. வெந்தயம் - 200 கி

8. கழற்சி பருப்பு - 200 கி

9. குரோசினி ஓமம் - 200 கி

10. லிங்கம் - 200 கி

11. சுத்தமான நீர் - 200 கி

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை பொடித்து கலந்து நீரை தெளித்து பிசைந்து 100 மி.கி. மாத்திரைகளாக உருட்டி காய வைத்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

1-2 மாத்திரைகள் 2-3 வேளைகள் வீதம் தினமும் உட்கொள்ளவும்.

**செய்முறை :**

வயிற்று கோளாறினையும், மூலத்தையும் நீக்க வல்லது.

## சந்தன மாத்திரை

**தேவையான பொருட்கள் :**

சந்தனப்பொடி - 20 கி

மிளகுப் பொடி - 15 கி

வெள்ளை மிளகுப் பொடி - 15 கி

கருவேலம் பிசின் - 10 கி

பூனைக் குங்குலியம் - 10 கி

பன்னீர் - 10 மி.லி.

சந்தன தைலம் - 10 மி.லி.

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை சுத்தம் செய்து இடித்து, பொடித்து

சலித்து பன்னீரில் கலந்து இறுதியில் சந்தனத் தைலத்துடன் கலந்து 500 மி.லி. மாத்திரைகளாக உருட்டவும்.

**அளவு :**

2-4 மாத்திரைகள் வீதம் தினமும் 2 வேளைகள் தேன் அல்லது நீருடன் உட்கொள்ளவும்.

**தீரும் நோய்கள் :**

நீர்க்கடுப்பு, உடல் உஷ்ணம், பயணச்சூடு, சிறுநீரக கற்கள், தாக வறட்சி நீங்கி உடல் குளிர்ச்சி உண்டாகும்.





## மணப்பாகு

சுவையும் மணமும் கொண்ட மருந்து பானகத்திற்கு மணப்பாகு என்று பெயர்.

இது மூலிகைச் சாறுகள், பழச்சாறுகளுடன் கற்கண்டு அல்லது சர்க்கரையைக் கரைத்து சூடாக்கி மணப்பாகு பதம் வந்ததும் நிறுத்தி எடுத்துக் கொள்வதாகும்.

சில மணப்பாகுகளில் சர்க்கரையுடன் தேனும் சேர்க்கப்படும். மணப்பாகு செய்யும் போது சேர்க்கப்படும் சர்க்கரை கற்கண்டு தேன் இவைகள் மருந்துக்கு சுவை தருவது மட்டுமின்றி மருந்து கெட்டு விடாமல் நீண்ட நாள் இருக்கவும் துணை செய்கின்றன.

1. சர்க்கரை கருகி பாத்திரத்தின் அடியில் கெட்டியாக பிடித்துக் கொள்ளாமலும் அதனை விளைவாக கசப்புச் சுவையை அடையாமல் இருக்க வேண்டுமானால் சர்க்கரையை முதலில் பாத்திரத்திலிட்டுக் கொதிக்க வைக்கக் கூடாது.

சாறு வகைகள் போன்ற நீர்ம ஊடகங்கள் தான் முதலில் கொதிக்க வைக்கப்பட வேண்டும்.

பின்னரே அதில் சர்க்கரையை சிறிது சிறிதாகச் சேர்த்து விடாமல் கிளற வேண்டும்.

2. கலவைக்கு அதிகமான தீயையிடாமல் மிதமான தீயையே இட வேண்டும். கலவையை அதிகமாக கொதிக்க விடாமல் ஏறக்குறைய ஒரே கொதிநிலையில் வைத்திருத்தல் வேண்டும்.

3. பாகை, பதம் வந்தவுடன் பாத்திரத்தை அடுப்பில் இருந்து இறக்கிவிட வேண்டும். அப்போது தீயை முற்றிலுமான நீக்கி விட வேண்டும்.

4. தேவையேற்பட்டால் சூடாக இருக்கும் போதே மணப்பாகை வடிகட்டிவிட வேண்டும்.

5. பாகுபதத்தை நிர்ணயிப்பது சற்று கடினம். ஆகையால் அதற்கு இடைஞ்சல் ஏற்படாவண்ணம் சாறுகள், குடிநீர்கள், கியாழங்கள், பழரசங்களை கொதிக்க வைப்பதற்கு முன்பே நன்றாக வடிகட்டிவிட





வேண்டும்.

6. கொதிக்க வைக்கும் போது பானகத்தின் மேல் நுரை கட்டினால் அவற்றை ஜாக்கிரதையாக அப்புறப்படுத்த வேண்டும்.

இவற்றை தூய ஈரப்பதமற்ற, கண்ணாடிப் பாத்திரங்களிலோ பாலீதின் கொள்கலன்களிலோ பத்திரப்படுத்தலாம். ஆறிய பின்னர் கொள்கலன்களில் நிரப்ப வேண்டும்.

கொள்கலன்களின் மூடி விளிம்பு வரை நிரப்பாமல் மூடிக்கும் கழுத்துப் பகுதிக்கும் நடுவே சற்று இடைவெளி இருக்கும்படி நிரப்பப்பட வேண்டும்.

இவற்றை ஆறு மாதங்களுக்குள் பயன்படுத்துவதே நல்லது.

## மாதுளை மணப்பாகு

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. கற்கண்டு - 2 கி.கி.
2. பன்னீர் - 2 லி
3. மாதுளம் பழச்சாறு - 2 லி
4. தேன் - 2 லி

**செய்முறை :**

மேற்கூறிய எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி, பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :**

8-15 கிராம் வீதம் தினம் இரண்டு அல்லது மூன்று வேளைகள் இரண்டு மடங்கு நீருடன் கலந்து கொள்ளவும்.

**தீரும் நோய்கள்:**

எல்லாவிதமான பாண்டு நோய்கள், வாந்தி, கை, கால் எரிதல் ஆகியன தீரும். கர்பஸ்திரிகளுக்கு தேவையான டானிக்.





## துருஞ்சி மணப்பாகு

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. துருஞ்சி பழச்சாறு - 1 கி.கி.
2. சர்க்கரை - 2 கி.கி.

**செய்முறை :**

இரண்டையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி பாகு பதத்தில் எடுத்து வைக்கவும்.

**அளவு :**

1-2 தேக்கரண்டி வீதம் இரு மடங்கு தண்ணீருடன் தினம் 2-3 வேளைகள்.

**தீரும் நோய்கள் :**

பித்தம், பித்த நோய்கள், வாந்தி, பித்த அஜீரணம் ஆகியன தீரும்.

## வெண்ணெய்

வெண்ணெய் போன்ற தோற்றமும் குழகுழப்புத் தன்மையும் கொண்ட மருந்து வகைகளுக்கு வெண்ணெய் என்று பெயர்.

1. வெண்ணெயுடன் மற்ற மருந்துச் சரக்குகளைச் சேர்த்து நன்கு அரைத்து எடுத்துக் கொள்ளப்படும் மருந்து வகைகளும்.

2. பிசின் போன்ற மருந்துச் சரக்குகளை எண்ணெய் வகைகளுடனோ பசு நெய்யுடனோ சேர்த்து உறவுபடக் காய்ச்சி தண்ணீருள்ள மற்றொரு பாத்திரத்தில் ஊற்றி மத்திட்டு கடைந்து எடுத்துக் கொள்ளப்படும் மருந்து வகைளும்.

3. செயல்முறையில் குறிப்பிட்டுள்ள தனி மருந்து சரக்கையோ அல்லது பல மருந்துச் சரக்குகளையோ வெண்ணெய்யுடன் சேர்த்து பக்குவப்படுத்தி எடுத்துக் கொண்ட மருந்த வகைகளும் ஆகியன அனைத்தும் வெண்ணெய் என்றே கூறப்படும்.

## அமிர்த வெண்ணெய்

**(அகஸ்தியர் வைத்திய காவியம்)**

**தேவையான பொருட்கள் :**

1. வீரம் - 3.5 கி
2. பசு வெண்ணெய் - 454 கி

**செயல்முறை :**

வீரத்தை கல்வத்திலிட்டு நன்றாகப்பட்டு போல் அரைத்து அத்துடன் வெண்ணெயை சேர்த்து ஆறு மணி நேரம் வரை நன்கு அரைத்துப் பின்னர் தண்ணீரில் ஏழு முறை பிசைந்து கழுவி எடுத்து வைக்கவும்.

**அளவு :**

வெளி உபயோகம்.

**தீரும் நோய்கள் :**

விரணம், பிளவை, மார்பாணி, மூலவேக்காடு, புண் ஆகியன தீரும்.

## குங்கிலிய வெண்ணெய்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

குங்கிலியம் - 175 கி

நல்லெண்ணெய் - 350 கி

**செய்முறை :**

குங்கிலியத்தை நல்லெண்ணெயிலிட்டு காய்ச்சும் போது குங்கிலியம் உருகி எண்ணெயில் கலந்து விடும். உடனே அக்கலவையை தண்ணீர் நிரம்பிய பாத்திரத்தில் கொட்டி மத்தினால் கடைய, வெண்ணெய் போல் குங்கிலியம் தண்ணீரில் மிதக்கும்.





இந்த வெண்ணெயை எடுத்து வாயகன்ற ஜாடியில் உள்ள தண்ணீரில் இட்டு பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

3-6 கிராம் வீதம் ஏலரசிப் பொடியுடன்தினம் இரு வேளை கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மேக வெள்ளை, நீர்க்கடுப்பு, உட்காங்கை, வயிற்றெரிச்சல், மேக விரணம், கீழ்ப்பிடிப்பு, காசம், முக எரிவு, கை கால் காந்தல் போன்ற நோய்கள் குணமாகும்.

## கருப்பு

கருப்பு நிறத்தை அடையும்படி செய்யப்படுகின்ற மருந்து வகைளுக்கு கருப்பு என்று பெயர். இவற்றில் இரசமும் கந்தமும் தனித்தோ அல்லது அவைகள் ஏதாவது ஒரு உப்பு வடிவிலோ மருந்தில் தவறாது இடம் பெறுகின்றன. இவைகளே மருந்து கருமை நிறம் அடைவதற்கு காரணம் ஆகின்றன. கருப்பு வகைகள் நுண்ணிய துகள்கள் வடிவிலிருக்கும்.

## கஸ்தூரி கருப்பு

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. கஸ்தூரி - 5 கி
2. பச்சை கற்பூரம் - 25கி
3. கோரோசனை - 25 கி
4. குங்குமப்பூ - 25 கி
5. திப்பிலி - 25 கி
6. ஓமம் - 25 கி
7. இரசம் - 25 கி





8. கந்தகம் - 25 கி
9. லிங்கம் - 25 கி
10. பூரம் - 25 கி
11. இரசச் செந்தூரம் - 25 கி
12. தாளகம் - 25 கி
13. மனோசிலை - 25 கி

**செய்முறை :**

1 முதல் 4 வரையிலான சரக்கினை பொடித்து பத்திரப்படுத்தவும். 5-6 வரை உள்ளவற்றை பொன்வறுவலாக வறுத்துக் கொள்ளவும். பின்னர் ரசம், கந்தகம் இரண்டையும் கல்வத்திலிட்டு, கஜ்ஜளி செய்து கொண்டு, அத்துடன் லிங்கம், பூரம், இரச்செந்தூரம், தாளகம், மனோசிலை இவற்றை தனித்தனியே பொடித்து அரைக்கவும். பின்பு முதலில் பொடித்த கலவையை கலந்து அரைத்து, காற்றுப்புகாத குப்பியில் அடைத்து வைக்கவும்.

**அளவு :**

50-100 மி.கி வீதம் 2-3 வேளைகள் தேன் அல்லது பால் இஞ்சி சாறுடன் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

வாதம், கபம், சுரம், இருமல், இரைப்பு, தொண்டைக்கட்டு ஆகிய நோய்கள் தீரும்.

## சிவனார் அமிர்தம்

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த இரசம் - 10 கி
2. சுத்தி செய்த கந்தகம் - 10 கி
3. சுத்தி செய்த இருவில - 10 கி





4. சுத்தி செய்த கருநாபி - 10 கி
5. சுத்தி செய்த மனோசிலை - 10 கி
6. பொரித்த வெங்காரம் - 10 கி
7. சுக்கு - 10 கி
8. மிளகு - 10 கி
9. திப்பிலி - 10 கி

**செய்முறை :**

முதலில் இரசம், கந்தகம் இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு கஜ்ஜிளி செய்து கொண்டு அத்துடன் தனித்தனியே பொடித்துப் பிறகு ஒன்று சேர்த்து மற்ற சரக்குகளின் சூரணத்தைச் சிறிது சிறிதாகச் சேர்த்து ஏழு நாட்கள் வரை கருப்பு நிறம் அடையும் வரை நன்கு அரைத்து வைக்கவும்.

**அளவும் அனுபவமும் :**

200-400 மி.கி. வீதம் தக்க அனுபானத்துடன் தேன், இஞ்சிச் சாறு, தாய்ப்பால் ஆகியவற்றுடன் 2-3 வேளைகள் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

80 வகை வாதம், 40 வகை பித்தம், 20 வகை கபம், 5 வகை சுவாசம் (இரைப்பிருமல்) குஷ்டம், குன்மம், சன்னி மூலம், சயம், மகோதரம் முதலியன.

அரணைக்கடி, குமரகண்ட வலி, தேள்கடி இவற்றிற்கு நஸ்யமாக உபயோகிக்கவும்.

**குறிப்பு :**

இந்த மருந்தை இருவியைச் சேர்க்காமலும் செய்வதுண்டு. இருவி சேர்ந்த மருந்தை சாப்பிடும் போது உப்பு புளி நீக்கவும்.

# மெழுகு

## இடிவல்லாதி மெழுகு

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| சுத்தி செய்த சேராங்கொட்டை | - | 300 கி |
| எள்ளு | - | 150 கி |
| தேங்காய் | - | 150 கி |
| பறங்கிப்பட்டை | - | 30 கி |
| அமுக்கரா | - | 30 கி |
| சித்திர மூல வேர்ப்பட்டை | - | 30 கி |
| கஸ்தூரி மஞ்சள் | - | 30 கி |
| கருஞ்சீரகம் | - | 30 கி |
| வாலுளுவை அரிசி | - | 30 கி |
| குரோசானி ஓமம் | - | 30 கி |
| வெற்றிலைக் காம்பு | - | 30 கி |
| கடுக்காய்த் தோல் | - | 30 கி |
| திப்பிலி | - | 30 கி |
| கோஷ்டம் | - | 30 கி |
| சுத்தி செய்த ராசக் கற்பூரம் | - | 15 கி |
| பனைவெல்லம் | - | 150 கி |

**செய்முறை :**

முதல் மூன்று சரக்குகளை உரலிலிட்டு இடித்து பின் அதனுடன் மற்ற சரக்குகளை இடித்து, சலித்து கற்பூரத்தை தூள் செய்து சேர்த்து கடைசியில் பனைவெல்லத்தையும் கலந்து எல்லாவற்றையும் மெழுகு போல அரைத்துக் கொள்ளவும்.





**அளவு :**

200-500 மி.கி. வீதம் தினமும் 2 வேளைகள் பனை வெல்லத்துடன் 40 நாட்கள் உட்கொள்ள வேண்டும். உணவில் மீன், உப்பு தவிர்க்க வேண்டும். விளக்கெண்ணெய்யை தேய்த்து தலை முழுக வேண்டும்.

**தீரும் வியாதிகள் :**

வாயுத் தொல்லை, தொழு நோய், படை, கருமேகம், அக்னி, 8 வகை குன்மம், விரணம், அனைத்து வாத நோய்கள், சூதக சூலை, அரையாப்பு, வெள்ளை கிரந்தி, சூலை முதலியன.

**குறிப்பு :**

மேற்கண்ட மருந்தை தயாரித்த 3 மாதங்களுக்குப் பிறகுதான் உபயோகிக்க வேண்டும்.

## குன்மகுடோரி மெழுகு

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. இந்துப்பு | - | 30 கி |
| 2. கல்லுப்பு | - | 30 கி |
| 3. சோற்றுப்பு | - | 30 கி |
| 4. பூநிறு | - | 30 கி |
| 5. வளையலுப்பு | - | 30 கி |
| 6. பொரித்த வெங்காரம் | - | 30 கி |
| 7. நவச்சாரம் | - | 30 கி |
| 8. வெடியுப்பு | - | 30 கி |
| 9. சுக்கு | - | 30 கி |
| 10. திப்பிலி | - | 30 கி |
| 11. மிளகு | - | 30 கி |





| | | |
|---|---|---|
| 12. ஓமம் | - | 30 கி |
| 13. கிராம்பு | - | 30 கி |
| 14. திப்பிலி வேர் | - | 30 கி |
| 15. கோஷ்டம் | - | 30 கி |
| 16. பெருங்காயம் | - | 30 கி |
| 17. உரித்த வெள்ளைப் பூண்டு | - | 30 கி |
| 18. பனை வெல்லம் | - | 150 கி |
| 19. தேன் | - | 150 கி |

**செய்முறை :**

முதல் பதினாறு சரக்குகளையும் நன்கு சூரணத்தை சலித்து வைக்கவும். வெள்ளைப் பூண்டைப் பசுவின் பாலில் புட்டவியல் செய்து பனை வெல்லத்தை பாகு வைத்து எல்லாவற்றையும் ஒன்று கூட்டி தேன் சேர்த்து மெழுகுபதமாக அரைத்துக் கொள்ளவும்.

**அளவு :**

1-2 கிராம் வீதம் தண்ணீருடன் தினமும் இரு வேளைகள் கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

குன்மம், பித்த வாயு, அஜீரணம், மந்தம் மற்றும் பூப்பு காலத்திலுண்டாகும் சூதக வாயுவினால் ஏற்படும் வலி ஆகியன.

## மலக்குடார மெழுகு

**(சித்த வைத்திய திரட்டு)**

**தேவையான மருந்துகள் :**

| | | |
|---|---|---|
| 1. சூரத்து நிலாவரை | - | 60 கி |
| 2. குல்கந்து | - | 80 கி |
| 3. கொட்டை திராட்சை | - | 50 கி |





| | | |
|---|---|---|
| 4. பாதாம் பருப்பு | - | 25 கி |
| 5. அதிமதுரம் | - | 10 கி |
| 6. கடுக்காய் பிஞ்சு | - | 25 கி |

**செய்முறை :**

நெ. 1, 5, 6 எண்ணுள்ள இம்மூன்று சரக்குகளையும், சூரணித்து சலித்து வைக்கவும். நெ. 2, 3, 4 இம்மூன்றையும் கல்வத்திலிட்டு மை போல் அரைத்து, அத்துடன் சூரணத்தை சேர்த்து நன்கு மெழுகு போல் அரைத்து எடுத்து வைக்கவும்.

**அளவு :**

6-12 கிராம் வரை படுக்கும் முன் வெந்நீர் அல்லது பாலுடன் கொடுக்கவும்.

**தீரும் நோய்கள் :**

மலக்கட்டு, பசியின்மை மற்றும் வயிற்று உப்பிசம்.

## இரச கெந்தி மெழுகு

**(புலிப்பாணி வைத்தியம்)**

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| 1. சுத்தி செய்த இரசம் | - | 10 கி |
| 2. சுத்தி செய்த கந்தகம் | - | 10 கி |
| 3. சுத்தி செய்த இரசக் கற்பூரம் | - | 10 கி |
| 4. சுத்தி செய்த தாளகம் | - | 10 கி |
| 5. சுத்தி செய்த காந்தம் | - | 10 கி |
| 6. சுத்தி செய்த துருசு | - | 10 கி |
| 7. சுத்தி செய்த மிருதார் சங்கி | - | 10 கி |
| 8. சுக்கு | - | 10 கி |
| 9. ஓமம் | - | 10 கி |

10. மஞ்சள் - 10 கி
11. வாய்விடங்கம் - 10 கி
12. வசம்பு - 10 கி
13. இலவங்கம் - 10 கி
14. பறங்கிப்பட்டை - 10 கி
15. சுத்தி செய்த சேராங்கொட்டை - 10 கி
16. கடுக்காய்த் தோல் - 10 கி
17. கருஞ்சீரகம் - 10 கி
18. காட்டுச் சீரகம் - 10 கி
19. சிறுதேக்கு - 10 கி
20. தாளீச பத்திரி - 10 கி
21. உலர் திராட்சை - 10 கி
22. திப்பிலி - 10 கி
23. அரத்தை - 10 கி
24. கோஷ்டம் - 10 கி
25. வாலுளுவை அரிசி - 10 கி
26. சோம்பு - 10 கி
27. ஏலம் - 10 கி
28. ஜாதிக்காய் - 10 கி
29. மிளகு - 10 கி
30. சீரகம் - 10 கி
31. கார்போக அரிசி - 10 கி
32. மாசிக்காய் - 10 கி
33. திப்பிலிக் கட்டை - 10 கி
34. பிரப்பன் கிழங்கு - 10 கி





35. எட்டிக் கொட்டை - 10 கி
36. தேற்றான் விதை - 10 கி
37. நீர்முள்ளி வித்து - 10 கி
38. எள்ளு - 10 கி
39. கொள்ளு - 10 கி
40. கொப்பரைத் தேங்காய் - 10 கி
41. சிறுசின்னி வேர் - 10 கி
42. முட்சங்கன் வேர் - 10 கி
43. அமுக்கரா கிழங்கு - 10 கி
44. ஆகாயகருடன் கிழங்கு - 10 கி
45. சித்திமூல வேர்ப்பட்டை - 10 கி
46. கோழி முட்டை - 7 எண்ணம்
47. பனை வெல்லம் - 400 கி
48. சுத்தி செய்த துத்தம் - 10 கி

**செய்முறை :**

நெ. 1 முதல் 8 வரையுள்ள சரக்குகளை கல்வத்திலிட்டு அரைத்து வைக்கவும். நெ. 9 முதல் 46 வரையுள்ள சரக்குகளையும் இடித்துச் சலித்து சூரணத்தையும் பொடித்த சரக்குகளையும் ஒன்று சேர்த்து ஒரு பாத்திரத்திலிட்டு கோழி முட்டைகளை உடைத்து ஊற்றி எல்லாவற்றையும் ஒன்றுபடக் கலந்து உலர்த்தியபின், பனை வெல்லத்தைத் தண்ணீரில் கரைத்து, வடிகட்டி, பாகு செய்து சூரணத்தில் விட்டுக் கிளறி பிறகு உரலிலிட்டு பன்னிரெண்டு மணி நேரம் நன்கு இடித்து மெழுகு பதத்தில் எடுத்து வைக்கவும்.

**அளவு :**

1/2 - 1 கிராம் பனை வெல்லத்துடன் தினம் இரு வேளைகள் தயிர்சாதம் சாப்பிட்ட பிறகு கொடுக்கவும. 40 நாட்களுக்கு உட்கொள்ள வேண்டும்.





**தீரும் வியாதிகள் :**

வெடி சூலை, மேக சூலை, இடிசூலை, புடை சூலை, துடி சூலை, வாத சூலை, கால் குடைச்சல், கரணை, விப்புருதி, கண்ட மாலை, தொழுநோய், விஷநீர், குறை நோய்.

சிரங்கு, புழுவெட்டு,தடிப்பு, பெண்குறிச்சிலந்தி, ஆண்குறிச் சிலந்தி, மேகம், செங்கிரந்தி, கருங்கிரந்தி, அரிகிரந்தி, படுகிரந்தி, இடி கிரந்தி, புரையோடும் புண், அரைக்கடி, ஆண்குறித்தண்டில் புண், தொடை வாழை, மூட்டு வாழை, முதுகு வாழை, புழு வாழை, விலாவில் வாழை.

தமர்க்காயாச் சிலந்தி, மார்புச் சிலந்தி, ஆண்குறிப்புற்று, பெண்குறிப்புற்று, இடிப்புற்று, சுன்னப்புற்று, சிலந்தி, ராஜபிளவை, கண்பிளவை, தடிச்சிலந்தி, புடை சிலந்தி, சதை வளரும் பௌத்திரம், மூலம், பாதச் சக்கரம், நாசிப் பிளவை, மேகம், ஆமை அடி முதலியன.

**குறிப்பு :** தலை முழுகும் நாளின் போது மருந்து உட்கொள்ளக் கூடாது. பத்தியம் இல்லை.

மருந்து செய்த 40 நாட்களுக்குப் பிறகே இதனைப் பயன்படுத்தவும்.

## சுண்ணம்

### வெடியுப்பு சுண்ணம்

### (சித்தா பார் முலரி ஆப் இந்தியா பார்ட் 1)

**தேவையான பொருட்கள் :**

1. சுத்தி செய்த வெடியுப்பு - 70 கி
2. சுத்தி செய்த ஆமை ஓட்டு தூள் - 350 கி

**செய்முறை :**

ஆமை ஓடுத்தூளை ஒரு சட்டியிலிட்டு பரப்பி அதன் நடுவில் வெடியுப்பை வைத்து மீதியுள்ள ஆமை ஓட்டு தூளை அதன் மேல் இட்டுப் பரப்பி சட்டியின் மேல் பாகத்தை நன்கு தகுந்த





முடிகொண்டு மூடி சீலை செய்து உலர்ந்த பின் 40 வரட்டிகளைக் கொண்டு புடமிடவும்.

**தீரும் நோய்கள் :**

நீரடைப்பு, நீர் எரிவு, நீர்க்கட்டு, சதையடைப்பு, வீக்கம் முதலியன.

## பற்பொடி

### 1. அரவிந்த் பிருந்தா பற்பொடி

**தேவையான பொருட்கள் :**

1. இயற்கை கால்ஷியப் பொடி - 1 கி.கி
2. கிராம்பு தைலம் - 25 கி
3. புதினா உப்பு - 25 கி
4. கண்டங்கத்திரி பழம் - 250 கி
5. கடுக்காய் - 250 கி
6. துளசி - 100 கி
7. கற்பூரம் - 25 கி

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை உலர்த்தி இடித்து, பொடித்து, சலித்து ஒன்றாக கலந்து வைக்கவும்.

**அளவு :**

வெளி உபயோகம், தேவையான அளவு பற்பொடியை எடுத்து கைவிரல்களால் பல்லை துலக்கவும். சிறிது நேரம் ஊற வைத்து வாய் கொப்பளிக்கவும். தேவைப்பட்டால் பிரஷ் கொண்டு தேய்த்து விடலாம். தினமும் 2 வேளைகள் உபயோகிக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

பல் வலி, பல் பலஹீனம்.

## சிகப்பு பற்பொடி

**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| காவிக்கால் பொடி | - | *1 கி.கி* |
| மிளகு | - | *50 கி* |
| திப்பிலி | - | *50 கி* |
| கற்பூரம் | - | *25 கி* |
| வேப்பிலை | - | *50 கி* |
| கடுக்காய் | - | *100 கி* |
| கிராம்புத் தைலம் | - | *25 கி* |

**செய்முறை :**

கிராம்புத் தைலத்தை தவிர மற்ற சரக்குகளை உலர்த்தி இடித்து, பொடித்து, சலித்து, இறுதியில் கிராம்புத் தைலத்தில் நன்றாக கலந்து டப்பாவில் பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

வெளி உபயோகம். பல் வலிக்கு இப் பற்பொடியை உபயோகிக்கலாம்.

**தீரும் வியாதிகள் :**

பல் கரை, பல் வலி, பற் சிதைவு தீரும்.

## சாக்லேட்

## தூதுவளை சாக்லேட்

**தேவையான பொருட்கள் :**

1. சுக்கு - *50 கி*
2. மிளகு - *50 கி*
3. திப்பிலி - *50 கி*





4. தூதுவளை - *250 கி*
5. சர்க்கரை - *750 கி*
6. குளுக்கோஸ் - *250 கி*
7. தேன் - *100 கி*

**செய்முறை :**

சர்க்கரை முற்றிய பாகுபதத்தில் எடுத்துக் கொண்டு மற்ற சரக்குகளை சேர்த்து அச்சுக்களில் வார்த்து மிட்டாய்களாக எடுத்துக் கொள்ளவும்.

**அளவு :**

தினமும் 4-5 சாக்லேட்டுகள் சுவைத்து சாப்பிடலாம்.

**தீரும் வியாதிகள் :**

இருமல், ஜலதோஷம், புகையிலையினால் ஏற்படும் விஷம் நீங்கும்.

## வல்லாரை சாக்லேட்

**தேவையான பொருட்கள் :**

1. வல்லாரை - *300 மி.கி.*
2. தேங்காய் - *100 கி*
3. குளுக்கோஸ் - *4.5 கி*
4. சர்க்கரை - *4.5 கி*
5. தேன் - *600 மி.கி.*

**செய்முறை :**

சர்க்கரை முற்றிய பாகுபதத்தில் எடுத்துக் கொண்டு மற்ற சரக்குகளை சேர்த்து அச்சுக்களில் வார்த்து மிட்டாய்களாக எடுத்துக் கொள்ளவும்.





**அளவு :**

தினமும் 4 - 5 சாக்லேட்டுகள் சுவைத்து சாப்பிடவும்.

**தீரும் வியாதிகள் :**

ஞாபக மறதி, உடல் பலஹீனம் முதலியன நீங்கி இரத்தத்தை சுத்தம் செய்கிறது.

## பேன் கொல்லி பொடி

**தேவையான பொருட்கள் :**

1. காக்கை கொல்லி விதை - *100 கி*
2. வசம்பு - *100 கி*
3. துளசி - *100 கி*
4. வேப்பிலை - *100 கி*
5. பூந்திக் கொட்டை - *100 கி*

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை உலர்த்தி இடித்து பொடித்து சலித்து நன்கு கலந்து கொள்ளவும்.

**அளவு :**

தேவையான அளவு பேன் கொல்லிப் பொடியை மோர், தயிர், தேங்காய் எண்ணெய் இவற்றில் ஏதேனும் ஒன்றுடன் கலந்து தலையில் தேய்த்து சிறிது நேரம் கழித்து குளிக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

பேன், பொடுகு, ஈறுகள் நீங்கும்.

## ஃபேஸ் பேக்

### *(முகப் பொலிவு பொடி)*

**தேவையான பொருட்கள் :**

1. சந்தனக்கட்டை - *20 மி.கி*





2. அருகன் புல் - *20 மி.கி*
3. குங்குமப்பூ - *1 கி*
4. திருநீற்றுப் பச்சிலை - *10 கி*
5. முல்தாணிமுட்டி - *30 கி*
6. ரோஜாப்பூ - *15 கி*

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை உலர்த்தி, சுத்தம் செய்து இடித்து, பொடி செய்து சலித்து ஒன்றாக கலந்து வைக்கவும்.

**அளவு :**

தேவையான அளவு பொடியை எடுத்து பன்னீரில் கலந்து முகத்தில் தடவி 15 நிமிடங்கள் கழித்து இளம் சூடான நீரினால் கழுவவும்.

**தீரும் வியாதிகள் :**

பரு, கரும்புள்ளி, முகப் பொலிவின்மை முதலியவற்றை நீக்கி முகம் பளபளப்புடன் இருக்கச் செய்யும்.

## அரவிந்த் கோல்டு பில்ஸ்

**தேவையான பொருட்கள் :**

1. அஸ்வகந்தா - *5 கி*
2. நீர்முள்ளி - *5 கி*
3. கட்டுக்கொடி - *5 கி*
4. ஓரிதழ் தாமரை - *5 கி*
5. ஜாதிக்காய் - *5 கி*
6. பாதாம் பருப்பு - *5 கி*
7. பிஸ்தா பருப்பு - *5 கி*
8. ஏலம் - *5 கி*

9. கிராம்பு - 5 கி
10. லவங்கப்பட்டை - 5 கி
11. தேன் - 50 கி
12. ஸ்வர்ணவங்கம் - 1 கி

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை இடித்து, பொடித்து, சலித்து தேனுடன் கலந்து உருண்டைகளாக்கவும் இறுதியில் ஸ்வர்ண வங்கத்தை உருண்டையில் சேர்த்து உருட்டி பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

தினமும் காலையிலும் இரவிலும் உணவிற்கு பின் 1 வீதம் சுவைத்து சாப்பிட்டு பால் அருந்த வேண்டும்.

**தீரும் வியாதிகள் :**

உடல் பலஹீனம், அடிக்கடி விந்து வெளியேறுதல், விந்தணு குறைபாடு, உடலுறவில் விருப்பமின்மை முதலியன.

## சொட்டு மருந்துகள்

### பல் சொட்டு மருந்து

**தேவையான பொருட்கள் :**

1. துளசி எண்ணெய் - 10 கி
2. கிராம்பு - 10 கி
3. வேப்பெண்ணெய் - 10 கி

**செய்முறை :**

மூன்றையும் கலந்து காற்று புகாத குப்பியில் அடைக்கவும்.

**அளவு :**

மருந்தை பஞ்சில் நனைத்து, வலியுள்ள பல்லில் சிறிது நேரம் வைத்திருந்து, வெந்நீரால் வாய் கொப்பளிக்கவும்.





**தீரும் வியாதிகள் :**

பல்வலி, எளிர்வீக்கம், பல் சொத்தை, பல் கூச்சம்.

### காது சொட்டு மருந்து

**தேவையான பொருட்கள் :**

1. ஆமணக்கு எண்ணெய் - 100 கி
2. சுக்கு - 100 கி
3. நொச்சி - 100 கி
4. வெள்ளைப்பூண்டு - 10 கி

**செய்முறை :**

ஆமணக்கு எண்ணெயில் மற்ற சரக்குகளை இடித்து, காய்ச்சி, தைல பதத்தில் எடுத்துக் கொள்ளவும்.

**அளவு :**

வெளி உபயோகம். வலியுற்ற காதியில் 2-3 சொட்டுகள் வீதம் தினமும் 2 வேளைகள் விடவும்.

**தீரும் வியாதிகள் :**

காது வலி, காதில் நீர் வடிதல், காது குடைச்சல், காது இரைச்சல் முதலியன.

### கண் சொட்டு மருந்து

**தேவையான பொருட்கள் :**

1. ரோஜா தீநீர் - 90 கி
2. படிகாரம் - 5 கி
3. நேத்திரப்பூண்டு இலை - 5 கி

**செய்முறை :**

நேத்திப் பூண்டு இலையை சுத்தம் செய்து ரோஜா தீநிரில் போட்டு அதில் படிகாரத்தை கரைத்து 10 நாட்களுக்கு சூரிய





புடத்தில் வைத்து பின்னர் சுத்தமான மெல்லிய சிறு துளைகளுள் துணியினால் வடிகட்டி பத்திரப்படுத்தவும்.

**அளவு :**

பாதிக்கப்பட்ட கண்ணில் 2 சொட்டுகள் விடவும். கண் குவளையில் நீர் ஊற்றி அதில் 5 சொட்டுகள் கண் சொட்டு மருந்தை விட்டு கண்களை கழுவலாம்.

**தீரும் வியாதிகள் :**

கண் எரிச்சல், கண் புரை, சதையடைப்பு போன்ற கண் நோய்கள்.

### பேபி கிரைப் மிக்ஸர்

**தேவையான பொருட்கள் :**

1. சதகுப்பை தீநீர் - 500 மி.லி.
2. சோம்பு தீநீர் - 300 மி.லி.
3. வளையல் உப்பு - 1 கி
4. கிளிசரின் - 50 மி.லி.

**செய்முறை :**

வளையல் உப்பை இடித்து பொடி செய்து சதகுப்பை தீநீர், சோம்பு தீநீரினுடன் கலந்து வடிகட்டி கிளிசரினுடன் சேர்த்துக் கொள்ளவும்.

**அளவு :**

25 மி.லி. வீதம் தினமும் 2 வேளைகள் உணவிற்கு முன் உட்கொள்ள வேண்டும்.

**தீரும் வியாதிகள் :**

குழந்தைகளின் அஜீரணம் மற்றும் வயிற்றுக் கோளாறுகள்.





### நியூட்ரோ புட்

### (சத்து மாவு)

**தேவையான பொருட்கள் :**

1. முளை கட்டிய கேப்பை - 150 கி
2. கம்பு - 250 கி
3. பாசிப்பயிறு - 200 கி
4. கொண்டைக்கடலை - 200 கி
5. கோதுமை - 150 கி
6. முந்திரி - 15 கி
7. சாரப்பருப்பு - 15 கி
8. பாதாம் பருப்பு - 10 கி
9. பிஸ்தா பருப்பு - 20 கி

**செய்முறை :**

மேற்கண்ட சரக்குகளை உலர்த்தி பொடி செய்து லித்து பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறைகள் :**

வெந்நீருடன் கலந்து ஒரு வேளை உணவாக உட்கொள்ளலாம். நெய், நீருடன் கலந்து உருண்டைகளாக்கி சத்தான சிற்றுண்டியாக உண்ணலாம். தோசை மாவுடன் கலந்து சுவையான தோசையாக வார்த்தும் உண்ணலாம்.

**பயன்கள் :**

உடல் பலஹீனத்தை போக்கி உடலிற்கு தேவையான சத்தை அளிக்கிறது.

## ஆலோ ஜாம்

**(கற்றாழை ஜாம்)**

**தேவையான பொருட்கள் :**

1. கற்றாழைச் சாறு - 1 கி.கி.
2. சர்க்கரை - 500 கி
3. சுக்குப் பொடி - 10கி
4. ஏலப்பொடி - 10 கி
5. விதை நீக்கிய பேரிச்சம்பழம் - 250 கி

**செய்முறை :**

கற்றாழைச் சோற்றை சிறு சிறு துண்டுகளாக நறுக்கி 7 முறை நன்றாக கழுவி சுத்தம் செய்து சர்க்கரையுடன் சேர்த்து காய்ச்சி பதத்தில் எடுத்து, சுக்குப் பொடி, ஏலப்பொடி, பேரிச்சம்பழம் கலந்து பத்திரப்படுத்தவும்.

**உபயோக முறை :**

இனிப்பிற்கு பதிலாகவும், உணவாகவும் உட்கொள்ளலாம்.

**தீரும் வியாதிகள் :**

உடல் உஷ்ணம், உடல் பலஹீனம்.

## நோய்கள் பற்றிய விளக்கம்

**விருப்புதி :** கட்டிகள்

**அதிசாரம் :** வயிற்றுப் போக்கு

**மதுமேகம் :** விரையும் தண்டும் கழுத்தும் மஞ்சளாகி அடிக்கடி நாழியளவில் நீரிறங்கும்.

**பிரமேகம் :** தேன் போல் குறுணியளவில் நீரிறங்கும்.

**பாண்டு :** இரத்த சோகை.





**பௌத்திரம் :**

ஆசனவாயின் உள்ளேயும் வெளியேயும் பக்கவாட்டிலும் விரையிலும் ஆண்குறியிலும் முளைகளாகவும் கட்டிகளாகவும் தோன்றி வீங்கி மிக வேதனையுடன் காணப்படும்.

**மூலம் :**

மூலம் என்பது முத்தோட மாறுபட்டால் சருமமும், மாமிச கொழுப்புத் தாதுக்களும் கோளாறடைந்து ஆசன வாயினுள்ளும் வெளியிலும் மாமிச முளைகள் கண்டு குதவாயிலை அடைத்துத் துன்புறுத்துவதாகும்.

**குன்மம் :**

மிக்க ஏப்பம், மலக்கட்டு, வயிறு நிறைந்த உணர்வு, உப்பிசம், குடலிரைச்சல், பலவீனம், வயிற்றுவலி, அஜீரணம், வாந்தி, அசதி முதலியன தோன்றும்.

**அள்ளு நோய் :**

விலாப்புறங்களிலும் கபம் கூடி அதனால் அடிக்கடி மூச்சு வாங்கி உடனே இழுப்பு வந்து துன்புறுத்தும்.

**மேகசூலை :**

கைகால் கடுத்தல், குடைதல், கீழ்களில் சிவந்து வீங்கி, சூலத்தாற் குத்துவது போன்ற ஒலியுண்டாதல், நீட்டவும், மடக்கவும் முடியாமை, சில நேரங்களில் சுரம் காய்தல், மயக்கம், வியர்த்தலாகிய குறிகுணங்களுண்டாகும்.

**நரித்தலை வாதம் :**

இந்நோயில் முழங்கால் மூட்டில் செந்நீர் நிரம்பி சிவந்தி வீங்கி மடக்கவும், நீட்டவும், நிற்கவும் முடியாமல் வலி மிகுதியுடன் வீங்கி காணும். நாடி படபடத் தோடும்.

**வளி நோய் :**

வளிக் குற்றம் (வாதம்) தன்னளவில் மிகுந்து அல்லது குறைந்து கேட்டையும் உடம்பில் குத்தல், குடைதல், நோதல், நடுக்கல்





முதலிய குண பேதங்களையுண்டாக்கி பல வகைப்பட்ட துன்பங்களையும் பிறப்பிக்கும்.

**சிரகம்பம் :**

வாயு மிகுதியால் குருதி பொங்கி நரம்புகளில் புகுந்து தலை முதல் உடம்பு முழுவதையும் தாக்கி காது கேளாமை, கை கால்கள் வசமிழத்தல், நினைவு கலங்கல், நெடுமூச்சு, கொட்டாவி, தலை நடுங்கல் ஆகிய குறி குணங்களைப் பெறும்.

**மந்தார காசம் :**

A PROXIMAL DYSPHNOEA attacking one in a cloudy weather A Kind of ashthma.

**அரையாப்பு :**

தொடை இடுக்குகளில் அல்லது கவட்டில் நெறிக்கட்டி பெருத்து கட்டையைப் போற் காணுமோர் வகை விரண நோய்.

**இடி சூலை :**

மண்டையடி, மண்டை குத்தல்.

**ஈளை :**

சுவாசக் குழல்கள் சுருக்கமடைந்து அதனால் மூச்சுத் திணறலையும் நெஞ்சில் கபம் அடைத்துக் கொண்டும் துன்புறுத்தும் ஓர் சுவாச நோய்.

**ஆம வாதம் :**

அஜீரணத்தால் வாயு குடலில் சேர்ந்து மலபந்தமாகி வயிறுப்பும் ஓர் வகை வாத நோய்.

**முதுகு வாளை :** முதுகில் உண்டாகும் ராஜ பிளவை.

**விலா வளை :**

விலாப்பக்கத்தில் எழும்பும் ஓர் கட்டி.

**வெட்டைச் சூடு :** பெண் பேகத்தினாலேற்பட்ட சூடு.





**வெள்ளை :** பெண்களின் மாதாந்திர வெள்ளை ஒழுக்கு.

**வெண்குஷ்டம் :**

உடம்பில் வட்ட வட்டமாய் பல இடங்களில் வெள்ளை விழுந்து விகாரமாக்கி அவைகளின் ஓரம் தடித்து விரிவாய் படர்ந்து காணப்படும்.

**விரணம் :**

திறந்த புண்.

**சூதக சூலை :**

மலடிகளுக்கு சூதகத்தினால் ஏற்படும் குத்தல் நோய்.

**சூலை :** குத்தல்.

**கருங்குட்டம் :**

முழங்கால், மூக்கு, இவ்விடங்களில் ஸ்பரிசமற்று கருப்பாய் படர்ந்து உடம்பு முழுவதும் தீப்போல் காந்தாலும் நமைச்சலு முண்டாகிச் சாம்பல் தூள் போல் உதிரச் செய்யும்.

**கண்டமாலை :**

தாய் தந்தையரின் உடம்பின் விகற்பத்தாலும் இரத்தக் கேட்டினாலும் கழுத்தை சுற்றியிருக்கும் கோளங்கள் வீங்கி, வலித்துச் சீழ் கொண்டு உடைந்து இரணமாகி நெடு நாளைக்கும் ஆறாமலோ கிளைத்து துன்புறுக்கும் நோய்.

**கபால குட்டம் :**

சிறிய ரணக் கொப்புளங்கள் கண்டு சிவந்து பிறகு கறுத்தும் குழி விழுந்தும், சீழும், தண்ணீரும் ஒழுகி தலை மண்டை ஓட்டின் நிறம் போல் உடம்பெல்லாம் வெளுத்துக் காணும் ஒரு வகை குட்ட நோய்.

**கீழ் நோய் :**

ஒவ்வாமை பொருந்துகளில் வலியையும், வீக்கத்தையும் உண்டாக்கும் நோய் ஆகும்.

## சுத்தி செய்யும் முறைகள்

**இஞ்சி :**

மேல் தோல் நீக்கி, கழுவி உபயோகிக்கவும்.

**எட்டிக் கொட்டை :**

எட்டிக் கொட்டையை சிறு சிறு துண்டுகளாக வெட்டி, ஆமணக்கு வேர் கஷாயத்தில் நன்றாக கெகித்த வைத்து, கழுவி உலர்த்திப் பின்னர் நெய்யில் பொரித்துக் கொள்ளவும்.

**கஞ்சா :**

விதை, காம்பு இவற்றை நன்றாகச் சுத்தம் செய்து நீக்கி விட்டு நீரில் ஊற வைத்துப் பிசைந்து வடிகட்டி மறுபடியும் புதிய நீரில் ஊற வைத்து முன் செய்த முறைப்படி பிசைந்தெடுக்க வேண்டும். இவ்வாறு 7-10 முறை வெயிலில் உலர்த்தி பசு நெய் விட்டு இளவறுப்பாக வறுத்து எடுத்துக் கொள்ளவும்.

**கடுக்காய் :**

கடுக்காயின் உள்ளேயிருக்கும் கொட்டையை மட்டும் நீக்கி விட வேண்டும்.

**கலப்பைக் கிழங்கு :**

கலப்பைக் கிழங்கு சிறு சிறு துண்டுகளாக நறுக்கப்பட்டு கோமூத்திரத்தில் 24 மணி நேரம் வரை ஊறவைத்து பின்னர் நீரில் கழுவி எடுத்து உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**சிவதை வேர் :**

இதை பாலில் வேக வைத்து உள்கட்டையை மட்டும் நீக்கி விட்டு மற்றதை உலர்த்தக் கொள்ளவும்.

**சுக்கு :** மேல் தோல் உலர்த்திக் கொள்ளவும்.

**சேராங்கொட்டை :**

சேராங்கொட்டையை கத்திரி (அ) நீண்டி பிடியுடன் கூடிய பாக்கு வெட்டியால் பாக்கு வெட்டுவது போல் நான்கு துண்டுகளாக





வெட்டி பசுவின் சாணம் கரைத்த நீரில் மூன்று நாட்கள் ஊற வைத்து ஊறிய சேராங்கொட்டையைப் பிரித்தெடுத்து முதலில் சுத்தமான நீரிலும் பின்னர் இளநீரிலும் கழுவி வெயிலில் உலர்த்த வேண்டும். இதனை சரிவர செய்யாவிடில் உடலில் தடிப்புகள் உண்டாகும்.

**தான்றிக்காய் :**

தான்றிக்காய் உள்ளேயிருக்கும் கொட்டையை மட்டும் நீக்கி விட வேண்டும்.

**தேற்றான் கொட்டை :**

இதனை பசும்பாலில் 7 மணி நேரம் ஊற வைத்து நீரில் கழுவிக் கொள்ளவும்.

**நாபி :**

நாபியை சிறு சிறு துண்டுகளாக வெட்டி பசுவின் சிறுநீரில் மூன்று நாட்கள் வரை ஊற வைக்கவும். தினமும் புதிய சிறுநீரைப் பயன்படுத்தவும். வெய்யிலில் உலர்த்திய பின் பசுவின் சிறுநீராலேயே ஆறுமணி நேரம் வரை கொதிக்க வைத்தெடுத்து நல்ல சூடான நீரில் கழுவி உலர்த்தவும். சரியாக சுத்தி செய்யாவிடில் நச்சுத் தன்மை உடையது.

**நீரடி முத்து :**

இதனையுடைத்து அதன் ஓடுகளை நீக்கிவிட்டு பருப்பில் மேல் தோல் நீக்க வேண்டும். சரிவர சுத்தி செய்யத் தவறினால் நஞ்சாகும்.

**நெல்லிக்காய் :**

உள்ளே இருக்கம் கொட்டையை நீக்கிவிட வேண்டும்.

**நேர்வாளம் :**

பசுஞ்சாணம், புளியிலை, செம்மண் ஆகியவற்றை வேண்டிய அளவு எடுத்து ஒரு பாத்திரத்திலிட்டு நீர்விட்டுக் கரைத்து அத்துடன் நேர்வாளத்தையும் சேர்த்து ஆறுமணி நேரம் வரை கொதிக்க வைத்து பின்னர் நேர்வாளத்தை மட்டும் அதிலிருந்து பிரித்தெடுத்து அதன் புற ஓடுகளையும் பருப்புகளுக்கு உள்ளே உள்ள நாக்கு, முளை





போன்றவற்றையும் நீக்கிவிட்டு பருப்புகளை மட்டும் எடுத்துக் கொள்ளவும்.

பின்னர் அதனைப் பச்சரிசியுடன் சேர்த்து நன்கு வேக வைத்து கருப்புகளை மட்டும் பிரித்தெடுத்து நீரில் கழுவி எலுமிச்சம் பழச்சாறுடன் சேர்த்தரைத்து உலர்த்தவும். சுத்தி செய்யாமல் உபயோகித்தால் வயிற்றுப் போக்கினை உண்டாக்கும்.

**முருக்கன்விதை (அ) பலாசு விதை :**

இதனை நீரில் ஊற வைத்து அதன் மேல் தோலை நீக்கிவிட வேண்டும். சரிவர சுத்தி செய்யவில்லையெனில் நஞ்சாகும்.

**பெருங்காயம் :**

இதனை நெய்யில் பொரித்தெடுத்து உபயோகிக்கலாம்.

**வெள்ளைப் பூண்டு :**

இதனை திரித்திரியாக உடைத்து வெய்யில் உலர்த்தித் தோல் நீக்கிக் கொள்ளவும்.

**முட்டை ஓடு :**

சோற்றுப்பை நன்றாக நீரில் கரைத்து ஒரு மணி நேரம் கழித்து அதன் தெளிவினை மட்டும் இறுத்து எடுத்துக் கொண்டு அதன் அண்ட ஓடுகளைப் போட்டு ஒருநாள் வரை ஆறவிட்டு சவ்வு போகக் கழுவி உலர்த்தவும்.

*(அல்லது)*

குஞ்சு பொரித்த கோழி முட்டையின் ஓடுகளை அப்பளாகரத்தைக் கரைத்தத் தண்ணீரிலிட்டு வேக வைத்து ஓடுகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் சவ்வுகளைப் போக்கி வேறு நீர் விட்டு நன்றாகக் கழுவி அலம்பித் தூய்மை செய்து வெய்யிலுலர்த்தி எடுத்துத் தூள் செய்து துணியில் சலித்துப் பளிங்குக் குப்பியில் பத்திரப்படுத்திக் கொள்ள வேண்டும். இதுவே அண்ட சுத்தியாகும். இவ்விதம் சுத்தி செய்த அண்டத்தைப் பற்பமாக அல்லது சுண்ணமாகச் செய்து உபயோகப்படுத்தினால் அதிக சிறப்பு மிகுந்த குணங்களைத் தரும்.





**அம்பர் :**

இதில் கல், மண், தூசி ஆகியன இருப்பின் எடுத்துவிட வேண்டும்.

**ஆமையோடு :**

பூநீறும், கற்சுண்ணாம்பும் சமனெடையெடுத்து அதற்கு பின்னர் எட்டு மடங்கு நல்ல நீர்விட்டுக் கலக்கி அதன் தெளிவெடுத்து அதில் சிறு சிறு துண்டுகளாக ஆமையோட்டை நறுக்கிப் போட்டு எண்ணெய்க் கசிவு நீங்கும் வரை எரித்து சுத்த நீரில் கழுவி உலர்த்தவும்.

**கொம்பரக்கு :**

இதிலிருக்கும் கட்டை, மக்கல், நூலாடல், உழவு போன்றவைகளை நீக்கி உபயோகிக்கலாம்.

**சங்கு :**

உடைத்த சங்குத் துண்டுகளை கற்சுண்ணாம்பு குவியருலுக்குள் வைத்து மூடி நீரைத் தெளித்து சற்று நேரம் கழித்தெடுத்து கழுவி உலர்த்தவும்.

*(அல்லது)*

கற்சுண்ணம், உவர்மண் ஆகியற்றை சமனெடை எடுத்து அதற்கு 8 மடங்கு நீர்விட்டுக்கலக்கித் தெளிவெடுத்து அதில் சங்கைப் போட்டு கொதிக்க வைத்து கழுவி வைத்து உலர்த்தவும்.

*(அல்லது)*

முட்சங்கைப் பருமனான துண்டுகளாகச் செய்து தண்ணீரில் அல்லது 6 மணி நேரம் ஊறவைத்துச் செம்மையாக அலசி அதிலிருக்கும் கல் மண் முதலியவைகளை நீக்கிவிடுவதே இதன் சுத்தியாகும்.

**சிருங்கி (மான் கொம்பு) :**

மான் கொம்பை சிறு சிறு துண்டுகளாகக்கிப் பிளந்து அகத்தியிலைச் சாற்றில் ஒருநாள் முழுவதும் ஊறவைத்து எடுத்துத்

துண்டுகளை நீரில் கழுவி உலர்த்தி எடுக்கவும். இவ்வாறு ஏழு தடவைகள் செய்யவும்.

*(அல்லது)*

கலைமான் கொம்பைப் பெரிய துண்டுகளாகச் செய்து ஒரு மண்பாத்திரத்திற் போட்டு அது ஆழ்ந்திருக்கும் படியாகப் பசுவின் மூத்திரத்தைவிட்டுப் பாத்திரத்தின் வாயை மண் தாலத்தால் மூடி இரண்டொரு சீலைமண் செய்து நீரானது சுண்டும்படியாகப் புடமிட்டு எடுத்துக் கொள்வது வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி இரண்டு அல்லது மூன்று புடமிட்டெடுத்தால் சிருங்கியானது சுத்தியாகி இருக்கும்.

*(அல்லது)*

கலைமான் கொம்பைச் சிறு துண்டுகளாக செய்து ஒரு பாத்திரத்திற்போட்டு ஒரு பலத்திற்கு ஒரு ஆழாக்கு வீதமாகப் பசுவின் பாலைவிட்டு விட்டு பால் சுண்டும் படியாக எரித்து எடுத்துக் கொள்ள வேண்டும். பின் இளநீரைவிட்டு வேக வைத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் செய்தெடுத்தாற் சிருங்கியானது சுத்தியாகிவிடும்.

**தேன் :**

தேனை நீர் எந்திரத்தில் வைத்துக் காய்ச்சி சூடாக இருக்கும் போதே ஈரக் கம்பளித் துணியிலிட்டு வடிகட்டிக் கொள்ளவும்.

**நண்டுக்கல் :**

கல், சுண்ணாம்பு, பூநீறு ஆகியவற்றைச் சமனெடை எடுத்து அதற்கு 8 மடங்கு நல்ல நீர்விட்டுக் கலக்கித் தெளிவெடுத்து அதில் நண்டுக்கல்லைச் சேர்த்து மூன்று மணி நேரம் வரை நன்றாக கொதிக்க வைத்துத் தண்ணீரில் நீர்விட்டுக் கழுவி எடுக்கவும்.

**நத்தை :**

நத்தையை நன்றாக நீர்விட்டுக் கழுவி எடுக்கவும்.

**பலகரை :**

பலகரைகளையுடைத்து அவற்றில் பொதிந்துள்ள மண் முதலிய





அழுக்குகளை நீரில் நன்றாகக் கழுவிப் போக்கிலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றில் ஊறவைத்துக் கழுவி எடுத்து உலர்த்தவும்.

**பவளம் :**

பவளங்களை சிறு சிறு துண்டுகளாக உடைத்து எலுமிச்சம் பழச்சாற்றில் ஊறவைத்து கழுவி எடுத்து உலர்த்திக் கொள்ளவும்.

நற்பவளம் 1 கால் பலம் பேரிசங்காய் 15 பலம் (5 பரசி) இதிலுள்ள விதைகளை நீக்கி நையச் சிதைத்து நான்குபடி நீரிற் போட்டுப் புதுப்பானையில் விட்டு வெய்யில் வைக்க வேண்டும். நாள் ஒன்றிற்கு இரண்டு மூன்று தடவை செம்மையாகக் கலக்கியும் வர வேண்டும். மறுநாள் வேறு புது மண் பாண்டத்தில் விட்டு வெய்யிலில் வைத்து முன்போல் கலக்கி வர வேண்டும். முன் இவ்விதம் நாள்தோறும் பானையை மாற்றி வெய்யிலில் வைத்து உலர்த்திக் கொள்ள வேண்டும். இவ்விதம் ஒரு வாரம் அல்லது பத்து நாள் சென்றால் நீரில் புளிப்பேற்றிக் காடி வாசனை உண்டாகிவிடும். அந்தச் சமயத்தில் அடுப்பேற்றி நான்கில் ஒரு பாகமாகச் சுண்ட வைத்து வடிகட்டித் திருப்பி நீக்கின குடிநீரை மூன்று பாகமாகப் பிரித்து ஒரு பாகத்தில் நற்பவளத்தை ஒன்றிரண்டாக உடைத்து அதில் போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து அந்தக் குடிநீரெல்லாம் சென்ற பின்பு குடிநீரின் மறுபாகத்தை விட்டு அதையும் சுண்ட வைத்து இறக்கிக் குளிர ஆறின பின்பு நீரை விட்டுக் கழுவி வெய்யிலில் வைத்து ஈரமில்லாமல் உலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும்.

**புனுகு :**

புறங்களையிலிட்டு பிளந்த ஈர்க்கால் தேய்த்து அதில் உள்ள ரோமங்களை எடுத்தெறிந்துவிட வேண்டும்.

**பூ நாகம் :**

இவற்றை ஒரு பாத்திரத்திலிட்டு இவைகள் மூழ்கும் அளவுக்கு பால் அல்லது மோர் நிரப்பி வைக்க அவைகள் அவற்றை உண்டு கொண்டு மண்ணை கக்கிவிடும். பின்னர் இவற்றை நல்ல நீரில் கழுவியெடுத்து கொண்டு அவற்றின் மீது சுண்ணாம்புத் தெளிநீரைத்





தெளிக்க அவைகள் இறந்துவிடும். பின் அவற்றை மருந்து செய்ய பயன்படுத்தலாம்.

**முத்து :**

முத்துக்களை 24 மணி நேரம் வரை பசுவின் தயிரில் ஊறவைத்துத் தெடுத்து நல்ல தண்ணீர் கழுவி எடுக்க சுத்தியாகும்.

## சித்த மருந்துவ சுத்தி முறைகள்

**இரசக் கற்பூரம் :**

இரசக் கற்பூரம் 35 கிராம், முசு முசுக்கைச் சாறு கால் படி, பசும்பால் 400 மி.லி. இரசக் கற்பூரத்தை ஒட்டிலிட்டு அடுப்பேற்றி பின்னர் முசுமுசுக்கைச் சாற்றைவிட்டுச் சுருக்குச் கொடுத்து அச்சாறெல்லாம் வற்றிய பின் பாலால் சுருக்கிட வேண்டும். பாலெல்லாம் வற்றிய பின் கட்டியை எடுத்து உபயோகிக்கவும்.

*(அல்லது)*

இரசக் கற்பூரம் 35 கிராம் அல்லது பசுவின் பால் 400 மி.லி. இரசக் கற்பூரக் கட்டியை ஒட்டிலிட்டு மேற்படி பாலைச் சிறுகச் சிறுகவிட்டுச் சுருக்கிட வேண்டும்.

பாலெல்லாஞ் சுண்டின பின்பு கட்டியை எடுத்து கட்டியிலுள்ள கருக்க முதலியவைகளைச் சுரண்டி நீக்கி 800 மி.லி. சிற்றாமணக்கெண்ணையைக் குழிவான ஒரு பாத்திரத்தில் விட்டு முன் சுத்தப்படுத்தின கட்டியை ஒரு மெல்லிய துணியில் முடிந்து கிழிகட்டி எண்ணெய் பாண்டத்தில் தொங்கவிட்டு பானையில் அடிப்புறத்தில் படாமல் செய்ய வேண்டும். 6 (அ) 9 மணி நேரம் மெதுவாக எரித்து ஆறவிட்டு எடுத்து எண்ணெய்ப் பசை இல்லாமல் மெல்லிய துணியில் துடைத்துக் கொள்வதும் ஒரு வகை சுத்தியாகும்.

**இரசசெந்தூரம் :**

சிறு சிறு துண்டுகளாக உடைத்த இரசச் செந்தூரத்தைப் பாலில் ஒருநாளும் எலமிச்சம் பழசாறில் ஒருநாளும் ஊறவைத்து கழுவி எடுத்து உலர்த்திக் கொள்ளவும்.





**கந்தகம் :**

கந்தகத்தை ஒரு கரண்டியிலிட்டு வெண்ணெய்யைச் சேர்த்து உருக்கி கந்தகம் நன்கு உருகியதும் பசும்பாலில் சாய்க்கவும். இப்படியாக முப்பது தடவை செய்து தண்ணீரில் கழுவி உலர்த்தவும்

*(அல்லது)*

கந்தகத்தை இரும்புக் கரண்டியில் வைத்துக் கொள்ளும் நெய்விட்டு உருக்கிப் பசுவின் பாலில் சாய்க்க வேண்டும். ஆறின பின்பு முன்போல் நெய்யைச் சேர்த்துருக்கி வேறு புதிய பாலில் சாய்க்க வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிப் பசுவின் பாலில் ஏழு தடவையும் வாழைத் தண்டு நீரில் ஏழு தடவையும் உருக்கிச் சாய்க்க சுத்தியாகும்.

*(அல்லது)*

தேவையான கந்தகத்தை நெய்யுடன் உருக்கி வெங்காயச் சாற்றில் சாய்த்து மூட வேண்டும். ஆறின பின்பு எடுத்து முன் போலுருக்கி புதிய சாற்றில் சாய்க்க வேண்டும். இவ்விதம் இருபத்தியோரு தடவையும் வெள்ளாட்டுப் பாலில் இருபத்தொரு தடவையும் உருக்கி சாய்த்துக் கொண்டால் தூய்மையாகிவிடும்.

*(அல்லது)*

35 கி புதுப் புளியை இருபது பலம் (700 கிராம்) தண்ணீரில் கரைத்து ஒரு இரவு வைத்திருந்து மறுநாள் காலையில் தெளிந்த நீரை இறுத்துக் கொள்ள வேண்டும். புளித்த காடி, புளித்த பசுவின் மோர், காளான் சாறு இவை வகைக்கு 35 கிராம் கலந்து வாய் குவிந்த ஒரு பானையில் விட்டு மேலே மெல்லிய துணியை வேடுகட்டி அதன் மேல் 35 கிராம் கந்தகத்தை தூள் செய்து வைத்து வேறு பாத்திரத்தினால் மூடி சீலைமண் செய்து அடுப்பிலேற்றி தீபாக்கினியாக 6 மணி நேரம் எரித்துக் கீழேயிறக்கி ஆறின பின்பு எடுத்துப் பார்க்கக் கந்தகம் உருகி பாண்டத்திற்குள் இறங்கி இருக்கும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று தடவைகள் செய்வதால் கந்தகத்திலிருக்கும் குற்றங்களெல்லாம் நீங்கி தூய்மையாகிவிடும். ஆனால் ஒவ்வொரு தடவையும் புதிய பாலை எடுத்துக் கொள்ள வேண்டும்.

**கருவங்கம் :**

நொச்சி சாற்றில் மஞ்சள் பொடியைக் கலந்து வைத்துக் கொண்டு அதில் கருவங்கத்தை உருக்கி சாய்க்கவும். இப்படி இருமுறை செய்து கழுவி உலர்த்திக் கொள்ளவும்.

*(அல்லது)*

கருவங்கத்தை உருக்கி மிகவும் எச்சரிக்கையாக காடியில் சாய்க்கவும். பின்னர் அதனை மீண்டும் உருக்கி புளியயிலைச் சாற்றில் சாய்க்கவும். இதே போல புளித்த மோர், குமரிச்சாறு, பசுவின் சிறுநீர், நல்லெண்ணெய் ஆகியவற்றிலும் அடுத்தடுத்து செய்து கழுவி உலர்த்திக் கொள்ளவும்.

*(அல்லது)*

தேவையான கருவங்கத்தை உருக்கி எள்ளெண்ணெயிற் சாய்க்க வேண்டும். இந்த எண்ணையானது கருவங்கம் தாராளமாய் ஆழ்ந்து கிடக்கும் படியாக இருக்க வேண்டியது. ஒருமுறை உபயோகித்த எண்ணெய் மறு தடவைக்கு உபயோகிக்கக் கூடாது. ஆறின பின் வங்கத்தை எடுத்து முன்போல் உருக்கி முன்போல் எண்ணெயில் சாய்த்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் மடக்கி ஏழு தடவைகள் எண்ணெயிற் செய்து கொள்ளவும். இவ்விதமே கோமூத்திரத்தில் ஏழு தடவையும் காடியில் ஏழு தடவையும் கொள்ளுக் குடிநீரில் ஏழு தடவையும் சாய்தெடுக்கக் கருவங்கம் தூய்மையாகும்.

**கல்நார் எனும் சீமைக் கல்நார் :**

சிறு துண்டுகளாக பத்து நாட்களுக்கு உடைத்த சீமைக் கல்நாரை பசுவின் சிறுநீரில் பத்து நாட்களுக்கு ஊறவைத்துக் கழுவி எடுத்துக் கொள்ளவும். தினமும் புதிய சிறுநீரை உபயோகிக்க வேண்டும்.

*(அல்லது)*

கல்நாரை பழச்சாற்றிற் போட்டு 24 மணி நேரம் ஊற வைத்துக் கழுவி எடுக்க வேண்டும். அரைக்க வேண்டியிருந்தால் சிறு துண்டுகளாகச் செய்து ஊற வைக்க வேண்டும். கட்டியாகவே வேண்டுமானாலும் கட்டியாகவே ஊற வைக்க வேண்டும்.





**கல் சுண்ணாம்பு :**

சுட்ட சுண்ணக் கல்லுக்கு இளநீர் அல்லது பசுமோர் விட்டு தாளித்து கரைத்து சீலையில் வடிகட்டிக் கொள்ளவும்.

**கற்பூர சிலாசத்து :**

சிறு சிறு துண்டுகளாக உடைத்த கற்பூர சிலாசத்தை பூநீறு கரைத்த தெளிநீரும் சுண்ணாம்பு தெளிநீரும் கலந்த கலவையில் நான்கு மணி நேரம் கொதிக்க வைத்து கழுவி எடுத்து உலர்த்தவும்.

**காவிக்கல் :**

இதனை இளநீரில் அரைத்து கரைத்து வடிகட்டி உலர்த்தவும்.

**கௌரிப்பாஷாணம் :**

கௌரிப் பாஷாணத்தைச் சிறு சிறு துண்டுகளாக உடைத்து அவுரியிலைச் சாற்றில் மூன்று நாட்களும் பாகல் இலைச் சாற்றில் மூன்று நாட்களும் ஊற வைத்து எடுத்துக் கழுவி உலர்த்தவும். (அல்லது) கௌரிப் பாஷாணத்தைச் சிறு துண்டுகளாகச் செய்து பசும்பாலில் ஊற வைக்க வேண்டும். இருபத்தி நான்கு மணி நேரம் சென்ற பின்பு அந்தப் பாலை இறுத்துவிட்டு மறுபடியும் முன் போல் பசும்பாலை விட வேண்டும். இருபத்து நான்கு மணி நேரம் சென்ற பின்பு இதனையும் இறுத்துவிட வேண்டும். இவ்விதம் இருபத்து நான்கு மணிக்கொரு தடவை புதிய பாலை விடவும். இவ்விதம் மடக்கி மடக்கி ஏழு தடவைகள் செய்யின் கௌரி பாஷணம் சுத்தியாகும்.

**சத்திச்சாரம் :**

இதனை காடி நீர் அல்லது பசுநீரில் மூன்று நாட்கள் மத்தித்து உலர்த்திக் கொள்ளவும்.

**சூடன் :**

சரக்கைப் பார்த்து மண், தூசு முதலிய மலினங்கள் இல்லாமல் தூய்மை செய்ய வேண்டும்.

செங்கழுநீர் மலர்ச்சாற்றில் ஒரு நாழிகை (24 நிமிடங்கள்) ஊற வைத்து எடுத்த வெய்யிலில் உலர்த்தவும்.





**சோற்றுப்பு :**

உப்பை நீர்விட்டு கரைத்து வடிகட்டிக் காய்ச்சி குழம்பு பக்குவத்தில் இறக்கி வெய்யிலில் காய வைத்து எடுக்க வேண்டும்.

**தாமிரம் (செம்பு) :**

தாமிரத் தகடுகளை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி கொள்ளுக் கஷாயத்தில் மூழ்க வைக்கவும். இதே போல் ஏழு தடவைகள் செய்யவும். புளியயிலைக் கஷாயம், குமரிச்சாறு, புளித்த மோர், நீர் முள்ளிச்சாறு ஆகியன ஒவ்வொன்றிலும் இதே போல் ஏழு தடவைகள் பழுக்கச் காய்ச்சி தோய்க்கவும். பின்னர் கழுவி எடுத்துக் கொள்ளவும்.

**தாளகம் :**

உடைத்த தாளகத் துண்டுகளை சுட்ட சுண்ணாம்புக் குவியலுக்குள் வைத்து மூடி பனங்கள் அல்லத கழுதையின் சிறுநீரை அதன் மீது தெளிக்கவும். சூடு தணிந்ததும் கழுவி எடுத்து உலர்த்தவும்.

*(அல்லது)*

140 கிராம் பொன்னரிதாரத்தை மொச்சை அளவுள்ள கட்டிகளாகச் செய்து இரட்டைத் துணியில் வைத்துத் தளர முடிந்து கிழிக்கட்டி ஒரு பானை நிறைய 3.2 லி பசுவின் மூத்திரத்தை விட்டு அதில் 280 கிராம் கற்சுண்ணாம்பைக் கரைத்து மேற்படி முடிச்சை பானக்குள் துலாந்தரமாகக் கட்டித் தொங்கவிட வேண்டும். ஆனால் அந்த முடிச்சானது பானையின் அடியில் படாமல் இரண்டங்குலம் மேலாக இருக்க வேண்டும். இவ்விதம் சுத்தப்படுத்தி அடுப்பின் மீதேற்றி சிறு தீயாக எரித்து நீரெல்லாம் சுண்டின பின்பு இறக்கி வெந்நீரில் அலம்பி எடுத்துக் கொள்ள வேண்டும். மூன்று முறை இவ்விதமே மடக்கி மடக்கித் தூய்மை செய்து கொள்ள வேண்டும்.

*(அல்லது)*

யவைக் கோதுமை மாவில் எருக்கம் பாலை விட்டுக் குழைத்து அரைத்துத் தாளகக் கட்டியின் மீது சுமார் கால் அல்லது அரை அங்குலம் பூசி 5 பலம் (175 கி) இலுப்பெண்ணையில் விட்டுக்





காய்ச்சி நன்றாகச் சிவந்த பதத்தில் எடுத்து ஆற வைத்து ஆறின பின்பு கவசத்தைப் பிரித்து அதைத் துணியால் நன்றாகத் துடைத்துவிட்டு முன்போல் யவைமாவில் எருக்கம்பாலை விட்டுக் குழைத்து அரைத்து எண்ணெயில் பொரித்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிப் பத்து தடவைகள் செய்தால் தாளகமானது தூய்மையாகிவிடும்.

*(அல்லது)*

175 கி. தாளகத்தை சிறு துண்டுகளாகச் செய்து கெட்டித் துணியில் முடிந்து வைத்துக் கொள்ள வேண்டும். 1.6 லி காடியை ஒரு பாத்திரத்தில் விட்டு மேற்படி முடிச்சை பானையின் அடியில் படாமல் தொங்கவிட வேண்டும். அடுப்பேற்றி சிறு தீயாக எரித்து சுண்டினவுடன் இறக்கி ஆறவைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

பிறகு 15 பலம் (525 கி) கற்சுண்ணாம்பை 32 லி படி நீரில் கரைத்து 1.6 லி தெளிவெடுத்து முன்போல் தாளகத்தைக் கிழிக் கட்டித் தொங்கவிட்டு எரித்தெடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு 1.6 லி தெளிவு தண்ணீரிலும் முன் போல் தொங்கிவிட்டு சுண்ட எரித்துக் கொள்ள வேண்டும். பிறகு மஞ்சட்கடுக்காய் தோல், தான்றிக்காய் தோல் நெல்லி முள்ளி இவை வகைக்கு 175 கிராம் எடுத்துக் கொண்டு இம்மூன்றையும் சிதைத்து 4.8 லி நீரில் போட்டு 1.6 லிட்டராக சுண்ட வைத்து இறக்கி வடிகட்டின குடிநீரில் முன்போல தாளகத்தைக் கட்டித் தொங்க வைத்துச் சுண்ட எரித்துத் தூய்மை செய்து கொள்ளலாம்.

*(அல்லது)*

தேவையான தளாகத்தை பெருந்துண்டுகளாகத் துண்டித்து ஒரு துண்டுத் துணியில் தளர்ச்சியாக முடிந்து கொள்ள வேண்டும். மண் தோண்டியில் முக்கால்வாசி இருக்கும் படியாகக் கருப்பு வண்ணப் பசுவின் மூத்திரத்தை விட்டு மேற்படி முடிச்சைக் கிழிகட்டித் தொடங்கவிட வேண்டும். முடிப்பானது பாத்திரனடியிற் படாமலும் மூத்திரத்திற்குள் 6 அங்குலம் ஆழ்ந்தும் இருக்க வேண்டும். பிறகு இப்பாத்திரத்தை அடுப்பின் மீதேற்றி எரித்து மூத்திரமெல்லாம் சுண்டி ஆறின பின் இறக்கித் தாளகத்தை எடுத்துக் கொள்ள

வேண்டும். பிறகு முன் போலே எரித்தெடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு தளகத்தை ஒரு துணியில் வைத்து முடிந்து கல்யாணப் பூசணிக்காயைத் துளைத்து அதற்குள் செலுத்தி 18 நாள் வரையில் வைத்தெடுத்து ஈரத்தை உலர்த்தி அதிகம் புளித்த தயிரை விட்டு அரைத்து வில்லைகளாகச் செய்து உலர்த்தி வைத்து உபயோகிக்கவும்.

*(அல்லது)*

தாளகம் 35 கிராம், இலந்தை இலை 2800 கிராம். 1400 கி. இலந்தை இலையை மண்பாத்திரத்தில் வைத்து அழுத்திச் சமப்படுத்தி தாளகத்தை மத்தியில் வைத்து அதன்மேல் 1400 கிராம் இலந்தை இலையை வைத்து அழுத்திச் சமப்படுத்தி வாய் பந்தனம் செய்து சீலை மண் செய்து அடுப்பேற்றி ஆரம்பத்தில் மெதுவாக எரித்து வரவரத் தீயைக் கொஞ்சம் அதிகப்படுத்திக் கமலாக்கினியாக எரிக்க வேண்டும். இவ்விதம் 12 மணி நேரம் எரித்து நன்றாகக் குளிர்ந்து ஆறின பின் எடுத்தால் தாளகமானது. உருகி இறுகிப் போயிருக்கும். இதனால் தாளகம் தூய்மையாவதுடன் ஒரு விதமாகக் கட்டுப்பட்டுமிருக்கும்.

**துத்தம் என்னும் மயில் துத்தம் :**

மயில் துத்தத்தை நீரில் கதைத்து வடிகட்டி அடுப்பிலேற்றி எரிக்க நீர் முழுவதும் சுண்டி வெண்ணிறப் பொடியாகும் வரை எரித்து எடுத்துக் கொள்ளவும்.

*(அல்லது)*

இதனை பொடி செய்து துணியில் முடிந்து சுண்ணாம்பு தெளிநீரில் கிழிகட்டி எரித்துக் கொள்ளவும்.

**துருசு :**

இதனை வெந்நீரில் கரைத்து வடிகட்டி சுண்டக் காய்ச்சி உப்பு கட்டினவுடன் எடுத்துக் கொள்ளவும்.

*(அல்லது)*

தேவையான அளவு காரீயத்தை உருக்கித் தேவையான துருசுக் கட்டிகளை கட்டிகள் ஆழ்ந்து போகும்படியாகத் தேய்த்து எடுக்க





வேண்டும். கொஞ்சம் ஆறவிட்டு மறுபடியும் முன்போல் தோய்த்தெடுக்க வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிப் பதினோரு தடவைகள் செய்யத் துருசானது சுத்தியாகிவிடும்.

இவ்விதம் சுத்தி செய்யப்பட்ட துருசை, பற்பம், சுண்ணம், செந்தூரம் முதலிய மருந்துகள் தயாரிக்கப் பயன்படுத்தலாம்.

**நவாச்சாரம் :**

இதனை வெள்ளாட்டுச் சிறுநீர் அல்லது அரிசியை இரண்டாம் தடவை கழுவிய கழுநீரில் அரைத்து உலர்த்திக் கொள்ளவும்.

**நாகம் எனும் துத்த நாகம் :**

நாகத்தை உருக்கி, பொடித்த நவாச்சரம் கலந்து வைத்துள்ள இலுப்பெண்ணெயில் உருக்கிச் சாய்க்கவும், இவ்விதம் இருபத்தியொரு முறை செய்யவும்.

**பால் துத்தம் :**

பால் துத்தத்தை சுண்ணாம்புத் தெளிநீரில் கொதிக்க வைத்து எடுத்து கழுவி உலர்த்தவும்.

**பூநீறு :**

பூநீரின் எடைக்கு நான்கு பங்கு நீர் விட்டுக் கரைத்து தெளி வைத்து எடுத்து தெளிவை வாயகன்ற பீங்கானில் வடிகட்டி வெய்யிலில் வைத்து நீர்போக்க காய வைக்கவும். இது போல் பத்து தடவைகள் செய்ய சுத்தியாகும்.

**படிகார சுத்தி :**

தேவையான அளவு படிகாரத்தைப் பொடித்துத் தண்ணீர் விட்டரைத்துப் பிறகு தண்ணீரை விட்டு கரைத்து நீர்போலஆக்கிக் கொள்ள வேண்டும். இந்த நீரில் துத்தநாகக் கம்பியை போட்டு வைக்க வேண்டும். படிகாரமெல்லாம் துத்தநாகக் கம்பியில் ஒட்டிக் கொண்டு கம்பி கம்பியாகவும் பிரகாசமுள்ளதாகவுமிருக்கும். அதையெடுத்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

*(அல்லது)*





கொட்டைப்பாக்குத் தூள் 87 கிராம். இதில் 700 கிராம் தண்ணீரை விட்டு 350 கிராமமாக சுண்ட வைத்து இறக்கி வடிகட்டின குடிநீரில் 35 கிராம் படிகாரத்தைப் போட்டு முக்கால் பாகம் குடிநீரை சுண்டுகிற வரையில் காய்ச்சி பிறகு இறக்கி ஆறிய பின் தண்ணீரை விட்டுக் கழுவியெடுத்துக் கொள்ளவும்.

*(அல்லது)*

இதனை நீரில் கரைத்து வடிகட்டிக் காய்ச்சி குழம்பு பக்குவத்தில் இறக்கிக் குளிரும்படி செய்யவும்.

பொன்னிமிளை :

பொன்னிமிளைக் கட்டிகளை சிறு சிறு துண்டுகளாக உடைத்து வாழைக்கிழங்குச் சாற்றில் நன்கு கொதிக்க வைத்து எடுத்துக் கொள்ளவும்.

*(அல்லது)*

பொன்னிமிளை 1 பங்கு இந்துப்பு 1 பங்கு இவ்விரண்டையும் மை போல் பொடித்து சிறிய இரும்பு பாத்திரத்தில் போட்டு அதில் இருபதி பங்கு வடிகட்டின காடித் தண்ணீரை விட்டு அடுப்பின் மீதேற்றிச் சிறு தீயாய் எரித்து இரும்பு சிற்றகப்பையால் துழாவிக் கொண்டே இருக்க வேண்டும். காடியானது சுண்டி அதிலுள்ள நிமிளையானது லிங்கம் போல் சிவந்துவிட்டால் பதமென இறக்கி ஆறின பின் எடுத்துக் கொள்ள வேண்டும். இப்படி செய்வதினால் நிமிளையானது பரிசுத்தமாகிவிடும்.

*(அல்லது)*

பொன்னிமிளை 3 பங்கு, இந்துப்பு 1 பங்கு, எலுமிச்சம் பழரசம் அல்லது நார்த்தம் பழ ரசம் 25 பங்கு எடுத்துக் கொள்ளவும். இரண்டையும் மை போல் பொடித்து ஒரு இரும்புச் சட்டியில் போட்டு இரசத்தை இதில் விட்டு அடுப்பேற்றி சிறு தீயாக எரித்து இரும்புக் கரண்டியால் துளாவிக் கொண்டு இருக்க வேண்டும். சாறெல்லாம் சுண்டிய பின் பாத்திரமும் அதிலுள்ள பொன்னமிளையும் லிங்கம் போல் சிவந்து போனால் கீழிறங்கி ஆறினப்பின் எடுத்துக் கொள்ளவும்.





**மண்டூரம் :**

மண்டூரத்தைச் சிறு சிறு துண்டுகளாக உடைத்து ஒரு பாத்திரத்திலிட்டு அதன் எடைக்கு நான்கு மடங்கு புளியயிலை எட்டு மடங்கு தண்ணீர் ஆகியவற்றைச் சேர்த்து நான்கு மணி நேரம் கொதிக்க வைக்கவும். பின்னர் புளியயிலையை நீக்கிவிட்டு மண்டூரத்தை மட்டும் பிரித்து எடுத்து எட்டு மடங்கு பசுவின் நீரில் கெகித்த வைத்து சுண்ட வைக்கவும். பின்னர் நீரில் கழுவி உலர்த்திப் பொடித்துக் கொள்ள வேண்டும்.

**தங்கம் :**

தங்கத்தை சற்றுக் கனமாய் தகடித்து கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சி நல்லெண்ணெயில் துவைக்க வேண்டும். நன்றாக குளிர ஆறின பின் மறுபடியும் முன்போல் பழுக்கக் காய்ச்சி முன்போல் துவைக்க வேண்டும். ஒவ்வொரு தடவையும் எண்ணெயை புதிதாய் வார்த்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் ஏழு தடவை மடக்கி மடக்கிக் காய்ச்சி துவைக்க வேண்டும். இவ்விதமே காய்ச்சி ஏழு ஏழு தடவைகள் முறையே காடி, கோமூத்திரம், கொள்ளை வேக வைத்த குடிநீர், புளித்த மோர் ஆகியவைகளில் துவைக்கு எடுக்க தங்கம் தூய்மையாகும்.

*(அல்லது)*

கறையான், புற்றுமண், செங்கற்பொடி, ஒட்டடடை, காவிமண் ஆகியவைகளை சமபாகம் எடுத்து கல்வத்திலிட்டுக் காடியையும் எலுமிச்சம் பழச்சாற்றையும் சமபாகமாய் கலந்து சிறுக சிறுக விட்டு 3 மணி நேரம் அரைத்து தகட்டின் மீத கனமாய்ப் பூசிக் கரி நெருப்பில் வைத்து பலமாய் ஊதிப் பழுக்க காய்ச்ச வேண்டும். இவ்விதம் செய்து எடுத்து ஆற வைத்து மேலுள்ளவைகளை நீக்கி தூய்மை செய்து கொள்ளலாம்.

*(அல்லது)*

மெல்லியத் தகடாகத் தட்டி செம்மண் பூசி காய்ச்சிக் கழுவி எடுத்துக் கொள்ளவும்.

*(அல்லது)*

இந்துப்பு, காட்டெறு சாம்பல், காவிமண், கரையான் புற்றுமண், செங்கல்பொடி புகையூறல் ஆகியவைகளை சமபாகமாக நிறுத்தொடுத்து கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுக விட்டு மூன்று நாள் அரைத்து தங்க தகட்டின் மீது பூசிக் கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சி எடுத்துக் கொள்வது தூய்மை செய்வதாகும்.

**மனோசீலை :**

இஞ்சிச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு அல்லது புளித்தமோர் ஆகிய ஏதேனும் ஒன்றில் நான்கு மணி நேரம் ஊற வைத்து கழுவிக் கொள்ளவும்.

*(அல்லது)*

தேவையான அளவு மனோசீலையைச் சிறுநீரில் போட வேண்டும். சிறுநீரானது மனோசிலைக்கு மேல் நான்கு அங்குலம் இருக்க வேண்டும். மனோசிலையை எட்டுநாள் ஊறப்போட்டு ஒன்பதாம் நாள் கழுவி எடுத்து வெயிலில் உலர்த்திக் கொள்வதே மனோசிலைச் சுத்தியாகும்.

**மிருதார் சிருங்கி :**

இதனை வெள்ளாட்டின் நீரில் காய்ச்சி எடுத்துப் பிறகு தாய்ப்பால், வெள்ளாட்டுப் பால் இவைகளில் முறையே நான்கு மணி நேரம் ஊற வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

**மிருதார் சிருங்கி :**

மிருதார் சிருங்கியை கல்வத்திலிட்டு பொடித்து தண்ணீரை விட்டு 3 மணி நேரம் அரைத்து ஒரு பாத்திரத்தில் போட்டு இன்னும் கொஞ்சம் தண்ணீரை விட்டு நன்றாகக் கலக்கி மறு பாத்திரத்தில் வைக்க வேண்டும். ஒவ்வொரு நாளும் இரண்டு மூன்று தடவைகள் நன்றாகக் கலக்கி வர வேண்டும். நான்கு நாளெடுத்துத் தெளிவை இறத்து நீக்கிவிட்டு அடியிலிருக்கும் வண்டலை வெய்யிலுலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும்.

*(அல்லது)*





மிருதார் சிருங்கியைப் பொடித்து ஊமத்தையிலைச் சாற்றை சிறுக சிறுக வார்த்து நான்கு சாமம் அரைக்க வேண்டும். பிறகு வெயிலில் உலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும்.

**வளையலுப்பு :**

இதனை காடி நீரில் ஒன்றரை மணி நேரம் ஊற வைத்து பின்னர் எடுத்து உலர்த்திக் கொள்ளவும்.

**வீரம் :**

இளநீரில் சிறிது கற்பூரத்தைக் கலந்து ஒரு பானையிலிட்டு வீரத்தை ஒரு துணியில் முடிந்து கட்டி கலவையில் படாமல் துலாயந்திர முறைப்படி அரை மணி நேரம் எரித்து எடுக்கவும். நல்ல நீரில் கழுவி வெய்யிலில் உலர்த்தவும்.

*(அல்லது)*

வீரக்கட்டி 35 கிராம், சீனாக்காரம் 105 கிராம், இரும்புச் சட்டியில் சீனாக்காரத்தை உருக்கி தண்ணீரானவுடன் வீரக்கட்டியை இட்டு இரும்புக் கத்தியினால் புரட்டிக் கொண்டு வர வேண்டும். கட்டியானது கீழே அழுந்திவிடாமல் ஒவ்வொரு தடவையும் கொஞ்சம் தூக்கிக் கொடுத்து வர சீனாக்காரம் வறண்ட பின் எடுத்து வைத்து ஆறின பின் கட்டியின் மீதள்ள சீனாக்காரத்தை கத்தியினால் மெதுவாகச் சுரண்டி, 52 1/2 கிராம் சூடத்தை தூள் செய்து கட்டியின் கீழ் மெலிட்டமுத்திக் கொளுத்தி, ஆறின பின்னெடுத்துக் கொள்வதே வீர சுத்தியாகும்.

**சிவங்காரம் :**

இதனை நீரு வற்றும்படி பொரித்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

**வெடியுப்பு :**

வெடியுப்பின் எடைக்கு நான்கு பங்கு நீர் விட்டு எரித்து கொதிக்கும் போது கோழி முட்டையின் வெண்கருவை ஊற்றி அழுக்கை அகப்பையால் வழித்து நீக்கிப் பதத்தில் மறு சட்டியில் சீலைகட்டி அதில் வடித்து காற்றில்லா இடத்தில் வைத்து மறுநாள் அதிலிருக்கும் நீரை வடித்து உலர வைக்கவும். இப்படி ஏழுமுறை செய்யவும்.





*(அல்லது)*

வெடியுப்பு ஒரு பங்கு, கடல் தண்ணீர் அல்லது கிணற்று நீர் இரண்டு பங்கு, வெடியுப்பை கல்வத்திலிட்டு நுண்மையாகப் பொடித்து மேற்படி நீரில் கரைத்துக் கொஞ்ச நேரம் வைத்திருந்தால் தெளிவுண்டாகும். மேற்படி தெளிவை இரும்புச் சட்டியில் விடடுக் காய்ச்ச உப்பாகும். அந்த உப்பை முன்போற் பொடித்து முன்போல் இரண்டு பங்கு தண்ணீரில் கரைத்து தெளிவை இறுத்து காய்ச்சி உப்பாக்கி முன்போல் இரண்டு பங்கு நீரில் கரைத்து காய்ச்சி எடுத்துக் கொள்ள வெடியுப்பானது சுத்திப்படும்.

*(அல்லது)*

வெடியுப்பை பொடித்து வாழைக்கிழங்கு சாற்றில் கரைத்து தெளிவை இரும்புச் சட்டியில் காய்ச்ச உப்பாகும். இது போல் மூன்று முறைகள் வாழைக்கிங்கு சாற்றில் கரைத்து தெளிவை இறுத்து காய்ச்சி உப்பாக்கி எடுத்துக் கொள்வது சுத்தியாகும்.

**வெள்ளி :**

இதனை உருக்கி தகடாகத் தட்டி மணத் தக்காளிச் சாற்றினில் தோய்த்தெடுக்கவும். வெள்ளி மடியும் வரை இவ்விதம் காய்ச்சி காய்ச்சி தோய்த்து கழுவி எடுக்கவும்.

*(அல்லது)*

வெள்ளியைத் தகடடித்து, கரி நெருப்பில் பழுக்கக் காய்ச்சி காடியில் துவைக்க வேண்டும். நன்றாகக் குளிர ஆறின பின் முன் போல் பழுக்க காய்ச்சி 7 தடவை நல்லெண்ணெய், புளித்த மோர், கொள்ளை வேக வைத்த குடிநீர், கோமூத்திரம் ஆகிய ஒவ்வொன்றிலும் ஏழு தடவைகள் காய்ச்சித் துவைக்கத் தூய்மையாகும்.

**வெள் வங்கம் :**

நாட்டு நவாச்சரத்தை நன்கு பொடித்து இலுப்பை எண்ணெய் நிறைந்த பாத்திரத்தின் நான்கு மூலையிலும் போட்டு அதில் வெள்வங்கத்தை உருக்கிச் சாய்க்கவும். பின்னர் நீரில் கழுவி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.





**வெள்ளைப் பாஷாணம் :**

சிறுகீரைச் சாற்றில் மிளகுக் கல்கத்தைக் கரைத்து கொதிக்க வைக்கவும். வெள்ளைப் பாஷாணத்தை ஒரு துணிப் பொட்டலத்தில் கட்டித் தொங்கவிட்டு மேற்படி நீராவி அதன் மீது படும்படி செய்து பிறகு எடுத்துக் கொள்ளவும்.

## சித்த மருத்துவ அளவு முறைகள்
## நிறுத்தலளவை

| | |
|---|---|
| 1 உளுந்து | சுமார் 1 கிரெயின் நிறையாகும் (65 மி. கிராம்) |
| 4 யவம் | 1 குன்றி (சுமார் 2 கிரெயின்ஸ்) (130 மி. கிராம்) |
| 1 மஞ்சாடி | 4 கிரெயின்ஸ் (260 மி. கிராம்) |
| 6 குன்றி | 1 மாஷம் (780 மி. கிராம்) |
| 3 3/4 குன்றி | 1 பணவெடை (488 மி.கிராம்) |
| 32 குன்றி | 1 வாரகனெடை (1 டிராம்) (4.2 கிராம்) |
| 40 குன்றி | 1 கழஞ்சு (488 மி. கிராம்) |
| 10 வாரகனெடை | 1 பலம் (41 கிராம்) |
| 1/4 பலம் | 1 கஃசு அல்லது 1 கைசா (10.2 கிராம்) |
| 1 தோலா | 1 ரூபாவெடை (180 கிரெயின்ஸ்) (12 கிராம்) |
| 1 அவுன்ஸ் | சுமார் 2 1/2 ரூபா நிறை (30 கிராம்) |
| 3 தோலா | 1 பலம் (35 கிராம்) |
| 8 பலம் | 1 சேர் (280 கிராம்) |
| 40 பலம் | 1 வீசை (3 பவுண்டு 2 அவுன்ஸ்) |
| 50 பலம் | 1 தூக்கு (1.7 கிலோ கிராம்) |
| 2 தூக்கு | 1 துலாம் (3.5 கிலோ கிராம்) |
| 360 நெல் | 1 சோடு |
| 5 சோடு | 1 ஆழாக்கு (சுமார் 6 அவுன்ஸ்) (168 மி. லிட்) |





| | |
|---|---|
| 2 ஆழாக்கு | 1 உழக்கு (336 மி.லிட்) |
| 2 உழக்கு | 1 உரி (672 மி. லிட்) |
| 2 உரி | 1 நாழி (1.3 லிட்) |
| 8 நாழி | 1 குறுணி (5.3 லிட்) |
| 2 குறுணி | 1 பதக்கு (10.7 லிட்) |
| 3 குறுணி | 1 முக்குறுணி (16.1 லிட்) |
| 2 பதக்கு | 1 தூணி (21.5 லிட்) |
| 3 தூணி | 1 காலம் (64.5 லிட்) |
| 1 தேக்கரண்டி | சுமார் 1 டிராம் (4 மி.லிட்) |
| 1 குப்பி | சுமார் 24 அவுன்ஸ் (700 மி. லிட்) |

## முகத்தலளவை (வேறு)

| | |
|---|---|
| தீர்த்தக்கரண்டி | 1.33 (மி.லிட்) |
| நெய்க்கரண்டி (1 டிராம்) | 4.00 (மி. லிட்) |
| உச்சிக்கரண்டி (1 மேஜைக் கரண்டி) | 16 மி.லிட் |
| பாலாடை (1 அவுன்ஸ்) | 30 மி.லிட் |
| எண்ணெய்க்கரண்டி (8 அவுன்ஸ்) | 240 மி. லிட் |
| 5 சேர் | 1 சொம்பு |

**பண்டு வழக்கிலிருந்த மருத்துவ அளவைகள்**
**(இவற்றுள் சிலவே இப்போது வழக்கிலுள்ள)**





## வீடுகளின் கூரை இயந்திர வழியிற் காணும் சூரிய கிரணத்தில் தோன்றுகின்றதுவே பரம அணுவாம்.

| | |
|---|---|
| அணு | 1 திலம் (0.003 கிராம்) |
| 2 திலம் | 1 காகிணி (0.006 கிராம்) |
| 4 காகிணி | 1 விரிகி (நெல்) (0.024 கிராம்) |
| 2 விரிகி | 1 விதளம் (1/4 குன்றி) (0096 கிராம்) |
| 2 குன்றி | 1 மாஷம் (உளுந்து) |
| 4 குஞ்சம் | 1 பணவெடை |
| 5 மாஷம் | 1 தனகம் |
| 3 தனகம் | 1 சாணம் |
| 4 சாணம் | 1 நிட்கம் |
| 2 சாணம் | 1 வடகம் (முக்கழஞ்சு) |
| 1/10 பலம் | 12 பணவெடை |
| 2 உரி | 1 நாழி |
| 2 குன்றி | 1/2 பணவெடை |
| 6 குன்றி | 1 மாஷம் |
| 12 மாஷம் | 1 தோலா |
| 8 தோலா | 1 பலம் (16 வராகனெடை) |
| 32 பலம் | 1 சுபம் |
| 2 சுபம் | 1 பாரம் (கலம்) |





## மருந்து செய்யும் முன் கவனிக்க வேண்டிவை :

1. மருந்து செய்பவர் குளித்து தூய்மையான ஆடை அணிய வேண்டும். மருந்து தயாரிக்கும் போது பயன்படுத்தப்படும் மேலாடையை தினமும் தூய்மை செய்து அணிய வேண்டும்.
2. அதிகமாக வளர்ந்துள்ள நகங்களை நீக்கி சுத்தம் செய்ய வேண்டும்.
3. மருந்து தயாரிப்பவர் தொற்று நோயினால் பாதிக்கப்பட்டிராமல் உடல் ஆரோக்கியத்துடன் இருக்க வேண்டும்.
4. தலை, வாய், மூக்கு கவசம் அணிய வேண்டும். கைகளை கிருமி நாசினி கொண்டு சுத்தம் செய்து பின் கையுறை அணிந்து கொள்ள வேண்டும்.
5. மருந்து தயாரிக்கும் அறை சுத்தமாக இருக்க வேண்டும்.
6. மருந்து செய்ய தேவையான பாத்திங்கள் சுத்தமாக இருக்க வேண்டும்.
7. மருந்து செய்ய பயன்படுத்தும் இயந்திரங்கள் சுத்தமாகவும் நல்ல நிலையிலும் உள்ளதா என்பதை பார்த்து அறிய வேண்டும்.
8. மருந்திற்கு தேவையான மூலப்பொருட்கள் அனைத்தும் நல்ல தரத்துடனும், தூய்மையாகவும் உள்ளதா என்பதை பட்டியல் கொண்டு ஒப்பிட்டு சரிபார்த்து அறிய வேண்டும்.
9. செய்யப் போகின்ற மருந்தின் தயாரிப்பு முறையை படிப்படியாக படித்து மனதில் பதித்துக் கொள்ள வேண்டும்.
10. செய்யப்போகின்ற மருந்தின் Standard Sample-ஐ எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.
11. சித்தர்களை மனதில் முழுமையாக வணங்கியபின் மருந்து செய்ய ஆரம்பிக்க வேண்டும்.
12. மருந்து செய்பவரின் கவனம் முழுமையாக செய்யப்படும் மருந்தின் மீது மட்டுமே இருக்க வேண்டும்.

## மருந்து செய்து முடித்த பின் கவனிக்க வேண்டியவை :

1. தயாரித்து முடித்த மருந்துகளை, கிருமிநாசம் செய்யப்பட்ட தூய்மையான சரியான அளவிலான பாத்திரங்களில் எடுத்து வைக்க வேண்டும்.
2. காற்றுபுகாத தூய்மையான பொருத்தமான மூடியினால் மூடி வைக்க வேண்டும்.
3. பின் மருந்துகளுக்கேற்ப வெவ்வேறான அளவுகளில் உள்ள பாட்டில் அல்லது டப்பாக்களில் மருந்துகளை நிரப்பி பேக்கிங் செய்ய வேண்டும்.
4. மருந்துகளின் பெயர், உபயோகக் குறிப்பு, அதில் சேரும் பொருட்களும் அளவும், எண்ணிக்கை, உட்கொள்ளும் அளவு முதலிய விபரங்கள் அச்சிடப்பட்ட லேபிளை அதில் ஒட்டி விற்பனைக்கு அனுப்பலாம்.
5. மருந்தை தயாரித்து முடித்த உடன் அந்த பாத்திரங்களையும் இயந்திரங்களையும் நன்றாக சுத்தம் செய்து, பின் கிருமிநாசம் செய்ய வேண்டும்.
6. மருந்து செய்த அறையையும் நன்கு சுத்தம் செய்து, பின் பாத்திரம், இயந்திரம், அறை அனைத்தையும் நன்கு காய வைக்க வேண்டும்.





## மருந்து செய்யும் போது கவனிக்க வேண்டியவை :

1. மருந்து செய்முறையில் ஒவ்வொரு படியையும் சரியான நேரத்திற்கு அதனை ஆரம்பித்து குறிப்பிட்டிருக்கின்ற நேரத்திற்குள் அதனை முடித்து ஒவ்வொருபடியாக மருந்தை செய்ய வேண்டும்.
2. மருந்து செய்யும் ஒவ்வொரு நிலையிலும் அந்நிலைக்குரிய தரம் சரியாக உள்ளதா என்பதை சரிபார்த்து இல்லையென்றால் அதனை சரி செய்து கொள்ள வேண்டும்.
3. மருந்தை செய்து முடிக்கும் தருவாயில் அம்மருந்திற்கு உரி முறையான பதம், பக்குவம் வந்துவிட்டதா என்பதை அதற்குரிய பரிசோதனை முறையை செய்து பார்த்து அறிந்து உறுதி செய்து கொள்ள வேண்டும்.
4. இவ்வாறு மருந்து செய்து முடித்த உடன் ஒரு சிறிய அளவை தரப்பரிசோதனைக்கு அனுப்பி அதன் முடிவுகள் நிர்ணயிக்கப்பட்ட தர அளவுகளுடன் ஒத்திருக்கின்றதா என்பதை சரிபார்க்க வேண்டும்.
5. தர அளவுகளில் வேறுபாடு இருப்பதை கண்டால் மருந்தை மறுபடியும் தயாரிப்புக்கு உட்படுத்த முடிந்தால் உட்படுத்தலாம். இல்லை என்றால் அதனை கழிவுகளோடு சேர்த்து விட்டு பின் மீண்டும் புதிதாக அம்மருந்தை முதலிலிருந்து ஒவ்வொரு படியாக தயாரிக்க வேண்டும்.
6. தர அளவுகளில் வேறுபாடு இல்லை என்று அறிந்தால் மட்டும் பேக்கிங் செய்ய வேண்டும்.



# சித்தா மருந்துகளின் செய்முறை விளக்கம்

(அனுபவ வைத்திய முறை)







**அரவிந்த் ஹெர்பல் லேப்ஸ் (பி) லிட்.,**
140, முடங்கியார் ரோடு, 4-வது கிலோ மீட்டர்,
இராஜபாளையம் - 626 117.

## நூல் குறிப்பு


| | | |
|---|---|---|
| பெயர் | : | சித்தா மருந்துகளின் செய்முறை விளக்கம் (அனுபவ சித்த வைத்திய முறை) |
| வெளியிடுவோர் | : | அரவிந்த் ஹெர்பல் லேப்ஸ் (பி) லிட்., 140, முடங்கியார் ரோடு, 4-வது கி.மீ. இராஜபாளையம் - 626 117. தொலைபேசி எண் : (04563) 233300<br>மின் அஞ்சல் : info@aravindhherbal.com<br>இணையதளம் : www.aravindhherbal.com |
| பதிப்பு | : | முதல் பதிப்பு - 2000 பிரதிகள்<br>இரண்டாம் பதிப்பு - 2000 பிரதிகள்<br>மூன்றாம் பதிப்பு - 2000 பிரதிகள் |
| பிரதிகள் | : | 2000 |
| பக்கங்கள் | : | 274 |
| விலை | : | ரூ. 100/- |
| அச்சிட்டோர் | : | **ஸ்ரீ பாலாஜி ஆப்செட் பிரஸ்**<br>192-A, லக்ஷிமிபுரம் தெரு, இராஜபாளையம் - 626 117. போன் : 04563 - 222895 |

## முன்னுரை

சித்த மருந்துகள் செய்முறை விளக்கம் என்ற தலைப்புடன் முதல் பதிப்பாக வந்த புத்தகங்கள் மக்களிடையே நல்ல வரவேற்பினை பெற்றிருந்தன. தற்போது மேலும் பல மருந்துகள் செய்முறையை சேர்த்து அதிக பக்கங்களுடன் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

அனைவரும் நமது பாரம்பரிய மருத்துவ சித்த மருந்துகளை செய்யும் முறைகளையும் அதன் பயன்களையும் அறிந்து பயன் பெறுபெறுமாறு கேட்டுக் கொள்கிறோம். விழாக்களுக்கும் வைபவங்களுக்கும் இப்புத்தகத்தினை நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் பரிசாக வழங்கி சித்த மருத்துவ விழிப்புணர்வை ஏற்படுத்துமாறு அன்புடன் வேண்டிக்கொள்கிறோம்.

அன்புடன்

**ரா. அரவிந்த்**

நிர்வாக இயக்குநர்



## பொருளடக்கம்